# பெரியாழ்வார் பாசுரங்களில்
# பக்தியும் தத்துவமும்



தி. அ. ரங்கநாதன்

# திருவேங்கடவன் தமிழ் மாலை

சென்னியோங்கு தண்திருவேங்கட முடையாய் உலகு
தன்னை வாழ நின்ற நம்பி தாமோதரா சதிரா
என்னையும் என்னுடைமையையும் உன்சக்கரப்பொறி ஒற்றிக் கொண்டு
நின்னருளே புரிந்திருந்தேன் இனிஎன் திருக்குறிப்பே.

(பெரியாழ்வார் திருமொழி.5.4.1)

★★★

செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே
நெடியானே வேங்கடவா நின்கோயிலின் வாசல்
அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும்
படியாய்க் கிடந்துஉன் பவளவாய் காண்பேனே.

(பெருமாள் திருமொழி. 4.9)

★★★

பேசுமின் திருநாமம் எட்டெழுத்தும் சொல்லிநின்று பின்னரும்
பேசுவார் தமைஉய்ய வாங்கிப் பிறப்பறுக்கும் பிரானிடம்
வாசமா மலர்நாறு வார்பொழில் சூழ்தரும் உலகுக் கெலாம்
தேசமாய்த் திகழும் மலைத்திரு வேங்கடம் அடைநெஞ்சமே

(பெரிய திருமொழி. 1.8.9)

★★★

ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி
வழுவிலா அடிமை செய்ய வேண்டும்நாம்
தெழிகுரல் அருவித் திருவேங் கடத்து
எழில்கொள் சோதி எந்தை தந்தைதந்தைக்கே

(திருவாய்மொழி. 3.3.1)

| | | |
|---|---|---|
| நூற் பெயர் | : | பெரியாழ்வார் பாசுரங்களில் பக்தியும் தத்துவமும் |
| ஆசிரியர் | : | முனைவர். தி. அரங்கநாதன் |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதல் பதிப்பு<br>ஆகஸ்ட் - 2004 |
| உரிமை | : | ஆசிரியர்க்கு |
| வெளியீடு | : | ஸ்ரீ மங்கை பதிப்பகம்<br>**67B/4,** அண்ணாநகர் விரிவாக்கம்<br>கும்பகோணம் - 612 001.<br>☎: (0435) 2423081 |
| தாள் | : | 18.6 மேப்லித்தோ ( டபுள் டிம்மி) |
| நூல் அளவு | : | 22 X 14 (டெம்மி) |
| எழுத்து | : | 11 புள்ளிகள் |
| பக்கம் | : | X + 146 |
| படிகள் | : | 1000 |
| நூல்கட்டு | : | இணைப்புக் கட்டு |
| விலை | : | ரூபாய். 60/- |
| அச்சும் அமைப்பும் | : | கல்யாணி கம்ப்யூட்டர் பிரஸ்<br>கும்பகோணம் - 612 001.<br>தொ.பே. 2425442. |

# அணிந்துரை

தேவாரமணி
முனைவர். **சிவ. திருச்சிற்றம்பலம்**
இயக்குநர்,
சூரியனார்கோயில் ஆதீனம்
திருமுறை சித்தாந்த ஆய்வு மையம்.

**அ**றுவகைச்சமய நெறிகளுள் திருமாலை முழுமுதற் கடவுளாகவும் திருமாலிய நெறியைத் தலைசிறந்த நெறியாகவும் கொண்டு திகழும் சமயம் வைணவ சமயமாகும். வைணவ சமய வேதநூலாய் - வழிபாட்டுத் தோத்திரப் பாசுரங்கள் நிறைந்த இலக்கியமாய் - வைணவச் சிற்றிலக் கியங்களின் தொகுப்பாகத் திகழ்ந்தொளிரும் சிறபபினையுடையது நாலாயிரத் திவ்யப் பிரபந்தமாகும்.

இப்பிரபந்தத்திரட்டை அருளிச் செய்த அருளாளர்கள் பன்னிரு ஆழ்வார்கள் ஆவர். திருமாலின் திருவருள் திறத்தில் ஆழ்ந்து சிறந்த அவ்வருளாளர் பன்னிருவருள் சூடிக்கொடுத்த நாச்சியார் எனப் பெறும் ஆண்டாளை அவனுக்களித்த பெருமையினை உடைய பெரியாழ்வார் பின்னாளைய தமிழ்ச் சிற்றிலக்கியங்கள் பலவற்றின் தோற்றத்திற்கு வித்தாய் அமைந்துள்ள பாசுரங்கள் பலவற்றை அருளிச்செய்த வைணவப் பெரியாா ஆவார்.

அன்னாருடைய வாழ்வியல் திறத்தையும் அருளிச் செய்த அருட் பாசுரங்களையும் உயரிய தமிழ் ஆய்வியல் நெறி நின்று ஆராய்ந்து பல உண்மைகளை அறிய தமிழ் உலகிற்கு வெளிப்படுத்தும் பாங்கில் வைணவ பூஷணமாகப் பொலிந்து சிறந்துள்ள பேராசிரியர் முனைவர். தி. அரங்கநாதன் அவர்கள் பெரியாழ்வாரின் பாசுரங்களில் வாழ்வும் வாக்கும் என்னும் சீரிய நூலை வைணவத் தமிழ் ஆர்வலர்களின் சிந்தனைக்கு விருந்தாகப் படைத்தளித்துள்ளார்.

ஆய்வு நூல்கள் பல இக்காலகட்டத்தில் வெளிவந்து கொண்டிருக் கின்றன. ஆயினும் அவற்றுள் சமய இலக்கியங்களின் பாற்பட்டவை மிகவும் அருகியே காணப்படுகின்றன.

இந்நிலையில் வைணவ நெறியில் மிகுதியும் ஈடுபாடு டையவராய் வைணவ இலக்கியங்களைப் பற்றிய முழுமையான ஆய்வினை மேற்கொண்டு முனைவர் பட்டத்தினைப் பெற்றுச் சிறந்தவரான இந்நூலாசிரியர் பெரியாழ்வாருடைய வாழ்க்கை வரலாற்றுடன் கண்ணன் பிள்ளைத்தமிழ், திருப்பல்லாண்டு முதலானவை பற்றியும் அவர்தம் பாசுரங்களில் பொருந்திக் காணப்பெறும் பல்வகை கலைநலங்கள் குறித்தும் விரிவாக எடுத்து ஆராய்ந்துள்ளமை மிகவும் பொருத்தமான ஒன்றே யாகும். அனைத்துக்கும் மேலாகப் பெரியாழ்வார் பாசுரங்களில் காணப்பெறும் வைணவ சமயக் கருத்துக்களும் திருமாலிய நெறிகளும் ஆசிரியருடைய தனிப்பெரும் எழுத்தாற்றலால் இந்நூலின்கண் சிறப்பாக எடுத்துரைக்கப் பெற்றுள்ளன.

தமிழ் இலக்கிய வரலாறு, ஆழ்வார்கள் அருளிச்செயலில் அவதாரங்கள், இன்ப திருக்கதியும் திருநெறியும், பல்சமயத் தமிழ் முதலான பல்வகை நூல்களை இதுகாறும் பதிப்பித்து வெளியிட்டுள்ள அன்னாரின் ஐந்தாவது படைப்பாகப் பெரியாழ்வார் வாழ்வும் வாக்கும் என்னும் நூல் வெளிவருவது பொற்குடத்திற்குப் பொட்டு இட்டமை போன்ற சிறப்பினை உடையதாகும். இச்சீரிய முயற்சியை வைணவத் தமிழ் உலகம் மனமுவந்து இருகை நீட்டி வரவேற்கும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

இந்நூலாசிரியரின் ஆய்வு முயற்சிகள் ஆல் போல் தழைத்து ஓங்கி வைணவ சமயம் சிறந்தொளிரும் வகையில், வளமான வாழ்வு வாழ்ந்து சிறக்க எம் ஆன்மார்த்த மூர்த்தியாகிய அருள்மிகு கல்யாண சுந்தரேசுவரப் பெருமானுடைய திருவடி மலர்களைப் போற்றி வணங்குகின்றேன்.

கும்பகோணம்.

**சிவ. திருச்சிற்றம்பலம்.**

28 08 04



# முன்னுரை

தமிழுக்குப் பக்திமொழி என்ற சிறப்பு உண்டு. பக்தி இயக்க காலம் என்று கூறப்படும் காலத்தில் தோன்றிய இலக்கியங்கள் மக்களின் இறைவுணர்வையும் இலக்கியச் செறிவையும் மிக வெளிப்படுத்துவன. தமிழில் உள்ள பல்வேறு இலக்கிய வகைகளிலும் அவை அமைந்திருப்பது கண்கூடு. அவை புதுவகை இலக்கியம் தோன்றக் காரணமாக இருந்ததும் உண்டு. எப்படி நோக்கினும் பக்தி இலக்கியங்கள் எல்லா வகையிலும் சிறப்புடையனவாகவே தோன்றுகின்றன. இச்சிறப்புக்கு அடிப்படைக் காரணங்கள் பலவாயினும் அவற்றுள் ஒன்று மிகக் குறிப்பிடத் தகுந்தது. அதுதான் உணர்ச்சி. உணர்ச்சியின் வெளிப்பாடு கவிதையாயினும் அவ்வுணர்ச்சி எல்லோரும் உணரும் உணர்ச்சியாக இருந்தால்தான் இலக்கியங்கள் வரவேற்பைப் பெறுகின்றன. இச்சிந்தனையோடு நோக்கும்போது பக்தி இலக்கியங்களின் பாங்கு விளங்கும்.

சைவ வைணவ இலக்கியங்களை மட்டுமே பக்தி இலக்கியங்கள் என்று கூறும் மரபு காணப்படுகிறது. இந்தப் பக்தி என்கிற சொல் உணர்த்தும் பொருள் எளிமையானதாகத் தோன்றினாலும் உணர்ச்சியைச் சுட்டுகிற சொல்லாகக் கொள்ளும்போதுதான் பொருள் முழுமையடைகிறது. எனவே பக்தி என்பது ஓர் உணர்வாகக் கொள்ளப்பட்டு, மெய்ப்பாடாக வளர்ந்து இலக்கியங்களில் இடம் பெற்றுவிட்டது. அதனால்தான் சமயச் சான்றோர் தம்மைத் தலைவியாகவும், தலைவனாகவும் , தாயாகவும், பிள்ளையாகவும் நண்பனாகவும் பாவித்து இறையைத் துதித்துள்ளனர்.

சைவ சமயத்தில் நான்கு நெறிகள் வலியுறுத்தப்பெறும். அவை மகவு நெறி, தொண்டு நெறி, தோழமை நெறி, அறிவு நெறி எனப் போற்றப்படும். வைணவத்தில் முற்றூட்டுச் சரண் எனப்படும் பிரபத்தி நெறி பாராட்டப் பெறும் இரு நெறிகளுமே செந்நெறிகள்தான். நெறிகள் வேறுபட்டமைக்கு அனுபவங்கள் காரணமாயின. அனுபவங்களில் கூட உயிர்கள் மகிழ்தல் ஒன்றே அடிப்படையானது. அதன் வழி பிறப்பறுக்கும் பெற்றி அமையும்.

வைணவம் தமிழகத்தில் வளர்ந்த சமயங்களில் தலையாயது. சங்க காலம் முதற்கொண்டே திருமால் வழிபாடும், வைணவ சமயச் சிந்தனைகளும் இருந்த வந்துள்ளன. ஆழ்வார்களின் திவ்வியப் பிரபந்தம் அருள் தேன் அமுதம். பன்னிரு ஆழ்வார்களும் தாம் பெற்ற இறை அனுபவங்களை அமிழ்தினும் இனிய அருந்தமிழில் பாடியுள்ளனர்.

திவ்வியப் பிரபந்தத்தில் முதலாய் அமைவன பெரியாழ்வாரின் இலக்கியங்கள். சூடிக்கொடுத்த சுடர்க்கொடியின் தாதை பாடிய பனுவல்கள் தமிழுக்குப் பூங்கொத்து மாலைகள்.

பெரியாழ்வாரின் இலக்கியங்கள் இயல்பான மற்ற பக்தி இலக்கியங்களின் இருந்து மாறுபட்டவை என்றே கூறலாம். அவருடைய பாசுரங்களை அனுபவிக்கையில் அதை உணரமுடியும். அந்த உணர்வு நான்கு வகையாய்

அமையும். 1. திருப்பல்லாண்டு. 2. கண்ணன் மேல் ஆராத காதல் கொண்டு பிள்ளையாய்க் கருதிப் பாடிய பாசுரங்கள். 3. மகள் பிரிந்து செல்ல அதனால் வாடிய தாயாய்ப் பாடிய பாசுரங்கள். 4. பரமாத்மாவின் அருட்பார்வையில் இருக்க விரும்பும் ஜீவாத்மாவின் வெளிப்பாடாகப் பாடிய பாசுரங்கள் என்பன அவை. இத்தகைய உணர்வு நிலையை மற்றைய ஆழ்வார்களின் பாடல்களில் ஒரு சேர காண்பது அரிது.

பெரியாழ்வார் என்ற பெயரே அவருக்குரிய பெருமையை இனிது விளக்கும். பக்தி உணர்வின் வெளிப்பாடாக அமைந்த பாசுரங்களில் வைணவ தத்துவச் சிறப்பும் மிகுந்திருப்பதைக் காணமுடிகிறது. தத்துவங்கள் இலக்கியத் திறன்களாக இடம் பெற்றுக் கற்பாருக்கும், அறிய விரும்புவாருக்கும் இனிமை பயக்கின்றன. பெரியாழ்வாரின் பாசுரங்களைப் படித்தபோது அவருடைய உணர்வுகளையும், அனுபவங்களையும், திருமால் மேல் கொண்ட ஈடு பாட்டையும் வெளிப்படுத்த வேண்டும் என்ற அவாவே இந்த நூலாக வடிவம் பெற்றுள்ளது. தமிழுலகம் இந்நூலை வரவேற்கும் என்று எண்ணுகிறேன். நூலில் குறையேதும் இருப்பின் பயில்வார் பொறுத்தருள வேண்டுகிறேன்.

வைணவ இலக்கியங்களில் ஈடுபாடு கொள்ளவும் ஆழ்வார்களின் உள்ளப்பாங்கை உணர்வுடன் புரிந்து கொள்ளவும் என்னைச் செந்நெறிப் படுத்தியவர் திருவேங்கடவன் பல்கலைக் கழகத் தமிழ்த்துறையின் முன்னாள் தலைவர் பேராசிரியர் முனைவர். பொன். சௌரிராசனார் அவர்கள். அவர் அளித்த ஊக்கமும் உற்சாகமும் இந்நூலை முழுமை பெறச் செய்தன. எனது முன்னேற்றத்தின் ஒவ்வொரு படிநிலையிலும் துணையாய் நின்று உதவி வரும் அவருக்கு என்றும் நன்றியுடையேனாவேன்.

இந்த நூலை அச்சேற்றும் பணியில் எனக்கு உதவியவர் கும்பகோணம் அரசு தன்னாட்சிக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் முனைவர். சிவ. திருச்சிற்றம்பலம். மேன்மைகொள் சைவநீதி உலகெங்கும் விளங்க அயராது உழைத்து வரும் அண்ணலாகிய அவர் மிகுந்த அலுவல்களுக் கிடையேயும் அணிந்துரை வழங்கி இந்நூலைச் சிறக்கச் செய்துள்ளார். சைவம் பரப்பும் செம்மல் இந்நூலையும் படித்து வழங்கியுள்ள அணிந்துரையைப் பெறுதற்கரிய விருதாகவே எண்ணுகிறேன். அவ்வகையில் தேவாரமணிக்கு என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

அச்சுப்படி சரிபார்க்கும் பணியில் எனக்கு உதவிய என் வாழ்க்கைத் துணைவி திருமதி. சிவகாம சுந்தரிக்கும் மழலைகள் செல்வி. ஆர்.மங்கை, செல்வன். ஆர். ஸ்ரீநிவாசன் ஆகியோர்க்கும் எனது நன்றி உரியது.

இந்த நூலைப் பதிப்பிக்க நிதியுதவி அளித்த திருமலை திருப்பதி தேவஸ்தானத்தார்க்கும் என்றும் நன்றியுடையேன். இந்நூலை அழகிய அச்சுவடிவம் ஆக்கிக் கொடுத்த செல்வி. க. திலகவதிக்கும், கும்பகோணம் கல்யாணி கம்ப்யூட்டர் பிரஸ் உரிமையாளர் திரு. கே.எம். செந்தில்குமார் அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

கும்பகோணம்

28.8.2004

**தி. அரங்கநாதன்**

# பொருளடக்கம்



# பெரியாழ்வாரின் வாழ்வும் வாக்கும்

**ப**ண்டைத் தமிழ் இலக்கியங்களுக்கு அடுத்துத் தமிழ் இலக்கிய வரலாற்றுக்குரிய காலம் பக்தி இலக்கியக் காலமாகும். இலக்கிய நோக்கில் மட்டுமின்றி வரலாற்று நோக்கிலும் பக்தி இலக்கியங்கள் தமிழ்நாட்டு மக்களின் மனவுணர்வை அறிய பேருதவி புரிகின்றன. அடிப்படை உணர்வான பக்தியை வளர்க்க சமயங்கள் இலக்கியத்தை நாடின. ஆதலின் பக்தியும் வளர்ந்தது; இலக்கியங்களும் வளர்ந்தன. அவ்வளர்ச்சி நிலையை இலக்கியங்கள் வழி உணர முடிகிறது.

இறைவன்பால் ஈடுபட்டு அவன்மேல் பாக்களைப் பாடிவந்த மரபு சங்க இலக்கியங்களிலும் காணப்படுகிறது. அதற்குத் திருமுருகாற்றுப் படையும் , பரிபாடலும் தக்க சான்றுகளாகும். அவை பக்தி இயக்கத்திற்கு வித்தாக அமைந்தன. பக்தி இயக்கம் கி.பி. 6-ஆம் நூற்றாண்டு தொடங்கி வளர்ந்தது. இவ்வியக்கத்தின் முன்னோடிகளாக அமைந்தவர்கள் சைவக் குரவர்களும் வைணவ ஆழ்வார்களுமாவர்.

சைவத்தில் பக்தி இயக்கத்தைத் தொடங்கி வைத்தவர்கள் அப்பரும் சம்பந்தருமாவர். தம் பாடல்களால் இறைவனைப் பாடித் தலங்கள் தோறும் சென்று பக்திப் பயிர் வளர்த்த பெருமை அவர்களுக்குரியது. அவர்கள் தம்முடைய அருட்செயல்களால் அரசர்களையும் சமயம் மாறச் செய்து பாண்டிய நாட்டிலும் பல்லவ நாட்டிலும் சைவம் தழைக்கச் செய்தனர். இவ்வாறு வளர்ந்த பக்தி இயக்கம் வளம்பெற்று சைவம் நிலை நாட்டப் பெற்றது. சுந்தரரும் மணிவாசகரும் ஏனைய திருமுறைப் புலவர்களும் இறைவன் மேல் பக்திப் பாசுரங்கள் பாடினர். இவ்வளர்ச்சி நிலையின் ஒரு கட்டமாகத் திகழ்வது சைவத்தின் பன்னிரு திருமுறையாகும்.

வைணவ சமய வளர்ச்சியிலும் இத்தகு நிலை அமைகிறது. ஆழ்வார்கள் கி.பி. 6-ஆம் நூற்றாண்டு தொடங்கி கி.பி. 9-ஆம் நூற்றாண்டு வரை பக்திப்பயிர் வளர்த்தனர். அவர்களின் பக்திப் பாசுரங்கள் நாதமுனியால் தொகுக்கப்பட்டன; பண்ணமைக் கப்பட்டன. நாதமுனி கி.பி. 9-ஆம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்தவர். பாசுரங்கள் தொகுப்பு நூல் திவ்வியப் பிரபந்தம் எனப்பட்டது. இந்நாலாயிரம் திராவிட வேதம் எனப்பெறும்.

## ஆழ்வார்கள்

திருமாலின் அவதாரங்களை அவதாரம் என்றும் அம்சம் என்றும் கொள்வர். திருமால் தானே சங்கல்பித்து இப்பூவுலகு வந்து அவதரித்துத் தன்செயல் செய்வது அவதாரம் எனப்படும். திருமாலின் ஏதேனும் ஒரு கூறு இவ்வுலகத்து வந்து அவதரித்துத் தன் செயல் செய்வது அம்சம் எனப்படும். இவ்வம்சமாக அவதரித்தவர்கள் ஆழ்வார்கள். மானிட வடிவெடுத்து மக்களிடை உழன்று திருமாலைப் போற்றல் ஒன்றே ஆழ்வார்களுக்குரியது. தன் அருள் செயல்களால் உலக மக்களைத் திருத்த இயலாதபொழுது ஆழ்வார்களைப் படைத்து அவர்களுடைய அருட் குணங்களை வெளிபடுத்தினான் திருமால். அவன் இவ்வுலகில் அவதரித்தது, குழந்தை கிணற்றில் விழ அதனை எடுக்கத் தாயும் கிணற்றில் விழுந்ததை ஒத்தது. ஆழ்வார்களைப் பிறப்பித்தது, வேடர்கள் மானைக் காட்டி மானை மடக்கியது போன்றது. இவை இரண்டும் உலக உயிர் பொருட்டாய்த் திருமால் அருளால் நிகழ்ந்தவை.

ஆழ்வார்கள் கருவிலேயே திருவுடையவர்கள். கற்றறிந்த ஞான மன்றிப் பிறப்பால் அமையும் ஞானமே அவர்களிடம் சிறந்து விளங்கக் காணலாம். நம்மாழ்வார் பதினாறு ஆண்டு வரை கல்வி ஏதும் கல்லாது செந்தமிழ் செய்தார் என்பதும், பெரியாழ்வார் முறையான வேதக் கல்வி இன்றி இறையருளால் வேத வேதாந்தங்களை விளக்கி அதன் வழியாய்த் திருமாலே பரம்பொருள் என நிறுவினார் என்பதும் அவர்களுடைய வரலாறு காட்டும் சான்றுகள். ஆழ்வார்கள் எடுத்தாளும் சில குறிப்புகள் வேத புராண இதிகாசங்களிலும் காணப்பெறாதனவாய் உள. இவை வடமொழி தென்மொழி இரண்டிலும் அமையாமையை நோக்கின் அது அவர்களுக்குக் கருவிலேயே ஞானம் உடைமையை விளக்கும் எனக் கொள்ளலாம். இறையருளை அனுபவித்த அவர்களுக்கு அவை இயல்பாகவே உதித்தன என வைணவர்கள் கொள்கின்றனர். ஆதலின் ஆழ்வார்களின் பக்திப் பாசுரங்கள் அருளிச்செயல்கள் எனப்பட்டன. அவை முன்னைப் 'பழம் பொருட்கும் முன்னைப் பழம்பொருளாயும் பின்னைப் புதுமைக்கும் புதுமை யாயும்' திகழ்வன.

ஆழ்வார்களைப் பன்னிருவராகக் கொள்ளுதல் மரபு. திருமாலின் அவதாரங்கள் பத்தெனப்படுவது போல ஆழ்வார்களையும் பத்தாகக் கொள்ளுதலும் உண்டு. ஆண்டாளைப் பெரியாழ்வாருள் அடக்கியும், மதுரகவியை நம்மாழ்வாருள் அடக்கியும் கொள்வது அம்மரபு.

*பொய்கையார் பூதத்தார் பேயார் புகழ்மழிசை*
*அய்ய அருள்மாறன் சேரலர்கோன் - துய்யபட்ட*
*நாதனன்பர் தாள்தூளி நற்பாணன் நன்கலியன்*
*ஈதிவர் தோற் றத்தடைவா மிங்கு*

(உபதேசரத்தினமாலை பா.4)

எனும் வெண்பா ஆழ்வார்களைப் பதின்மராகக் காட்டும். ஆழ்வார்கள் என்பதற்குத் திருமாலின் திவ்விய கல்யாண குணங்களில் ஆழங்கால் பட்டவர்கள் என்று பொருள்.

***காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும் - நீலாழிச்***
***சோதியாய் ஆதியாய் தொல்வினையெம் பால்கடியும்***
***நீதியாய் நிற்சார்ந்து நின்று***

(பெரிய. திரு. பா. 34)

என நம்மாழ்வார் திருமால்பால் ஆழங்கால் பட்டதை எடுத்துரைக்கின்றார்.

கருவிலேயே ஞானமுடையவரான நம்மாழ்வாரை அவயவியாகவும் ஏனைய ஆழ்வார்களை அவையவங்களாகவும் கொள்வது மரபு. பூதத்தாழ்வாரைத் திருமுடியாகவும், பொய்கை பேயாழ்வார்களைக் கண்களாகவும், பெரியாழ்வாரை முகமாகவும், திருமழிசையாழ்வாரைக் கழுத்தாகவும, குலசேகராழ்வாரையும் திருப்பாணாழ்வாரையும் கைகளாகவும், தொண்டரடிப்பொடியாழ்வாரை மார்பாகவும், திருமங்கையாழ்வாரைக் கொப்பூழாகவும், மதுரகவியாழ்வாரைத் திருவடியாகவும் கொள்வது வைணவ மரபு.

ஆழ்வார்களின் அருளிச் செயல்கள் பிரபந்தங்களாக மலர்ந்தன. தேனினும் இனிய அவர்தம் பாசுரங்கள் சமய அடிப்படையிலன்றி இலக்கிய வகையாலும் சிறப்பிடம் பெறுவன.

## *ஆழ்வார்களுக்குரிய பெருமைகள்*

முதலாழ்வார் மூவரும் முதல், இரண்டாம், மூன்றாம் திருவந்தாதிகளை அருளிச் செய்தவர்களாவர். இவர்கள் நித்திய சூரிகள் போல் கருதப்படுபவர்கள். இவர்கள் அறிவு நடையாடாதவர்கள் இருக்கு மிடத்தில் வாழ்வதைக் காட்டிலும் காட்டில் வாழ்வது அமையுமென வாழ்ந்தவர்கள்.

யது குலத்தில் வளர்ந்தவன் கண்ணன். தாழ்ந்த குலத்தைக் காக்க கண்ணன் அவதரித்தது போலத் திருமழிசையாழ்வார் தாழ்ந்த குலத்தில் வளர்ந்து தம்குலம் தழைக்கச் செய்தவர். இவருடைய அருளிச் செயல்கள் திருச்சந்த விருத்தமும் நான்முகன் திருவந்தாதியும்.

திராவிட வேதம் செய்த பெருமை நம்மாழ்வாருக்கு உரியது. ஆழ்வார்களின் தலைவரான நம்மாழ்வார் ஆச்சாரிய பரம்பரையில் முதன்மை ஆச்சாரியர். திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி என்பன இவருடைய அருளிச் செயல்கள். இவை நான்கும் நால்வேதம் எனப் போற்றப்பெறுவன. சித்து, அசித்து, ஈசுவரன் எனும் முப்பொருளையும் உள்ளபடி அறிந்த ஞானிகளின் தலைவரான பெருமை இவர்க்குரியது.

அரச மரபில் பிறந்து திருமாலுக்காக அரசு துறந்து திருவரங்கம் வந்து தொண்டாற்றிய பெருமை குலசேகரருக்கு உரியது. திருமாலடியார்க்காகப் பாம்புடைக் குடத்தில் கைவிட்டு அடியார்கள் குற்ற மறியார் என விளக்கிய பெருமை இவர்க்கு உரியது. இவருடைய அருளிச் செயல் பெருமாள் திருமொழியாகும்.

இறைவன் எழுந்தருளியுள்ள திருவரங்கம் சென்று, திருமால் ஒருவனையன்றி மற்ற ஒன்றை எண்ணாது துளவத் தொண்டை மேற்கொண்டவர் தொண்டரடிப் பொடியாழ்வார். இவர் அருளியன திருமாலையும், திருப்பள்ளி எழுச்சியுமாகும்.

வேதத்துக்கான ஆறங்கங்களைப் போலத் திராவிட வேதத்துக்கு ஆறங்கங்களான பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திரு நெடுந்தாண்டகம், திருவெழுகூற்றிருக்கை, பெரியமடல், சிறிய மடல், ஆகியவற்றை அருளிச் செய்த பெருமை திருமங்கையாழ்வார் ஒருவருக்கே உரியது. திருமாலிடம் திருமந்திர உபதேசம் பெற்ற ஒரே ஆழ்வார் இவரே.

திருவரங்கனையன்றி வேறுபொருளை அறியாது அவனையே அடிமுதல் முடிவரை அனுபவித்த பெருமை தாழ்ந்த குலத்துப் பிறந்து நித்திய சூரியான திருப்பாணாழ்வாருக்குரியது. இவருடைய அருளிச் செயல் அமலனாதிபிரான்பதிகம் ஒன்றே.

இறைவனுக்குச் செய்யும் தொண்டினைப் பேறாகப் பெற்றவர்கள் ஏனைய ஆழ்வார்கள். ஆனால் மதுரகவி அவர்களினும் மேம்பட்டவர். இறையடியார்க்குச் செய்யும் தொண்டு ஈசுவரனுக்குச் செய்யும் தொண்டு என்று எண்ணி நம்மாழ்வாரைப் போற்றித் துதித்தவர். ஆழ்வார்களில் அடியாருக்கு அடியார் ஆனவர். இவர் அருளியது கண்ணி நுண்சிறுத் தாம்பு எனும் பிரபந்தம்.

உலகியலில் உறங்குகின்றவர்களை எழுப்பி, எம்பெருமான் தானே தன்னைக் காட்டக் கண்டவர்கள் ஆழ்வார்கள். ஆனால் தானே சென்று திருமாலை எழுப்பித் தன் குறையை உணர்த்திய பெருமை ஆண்டாளுக்குரியது. இவர் அருளியன திருப்பாவையும் நாச்சியார் திருமொழியும்.

இவ்வாறு ஆழ்வார்கள் அனைவர்க்கும் சமய அடிப்படையிலும் தத்துவ அடிப்படையிலும் சிறப்புகள் கூறப் பெறுகின்றன. பெரியாழ்வாரும் அத்தகைய சிறப்புக்களுக்குரியவரே. மற்றை ஆழ்வார்களைக் காட்டிலும் அவை அவருடைய அருளிச் செயல்கள் வழி நன்கு விளங்குகின்றன. அவருடைய வரலாறும், வாழ்க்கைச் சூழலும் வைணவத்தில் அவருக்குரிய உயரிய இடத்தை அளிக்கின்றன.

## குருபரம்பரை

ஆழ்வார்களையும் ஆச்சாரியர்களையும் பற்றி எடுத்துரைக்கும் நூல் ஆறாயிரப்படி குருபரம்பரா பிரபாவம் ஆகும். இதனைச் செய்தவர் பின்பழகிய பெருமாள் சீயராவார். முதலாழ்வார் தொடங்கி நம்பட்டர் வரையான ஆழ்வார், ஆச்சாரியர்களின் வரலாறு அதில் குறிக்கப் பெற்றுள்ளது. இக்குரு பரம்பரைக்கு ஆளவந்தார், கூரத்தாழ்வான் முதலானோரின் தனியன்கள் அமைகின்றன.

நம்பிள்ளையின் சீடராகத் திகழ்ந்தவர் பின்பழகியபெருமாள் சீயர். நம்பிள்ளையின் காலம் கி.பி.1207 - 1312 என வரையறுக்கப் பட்டுள்ளது[1]. நம்பிள்ளை பரமபதித்த பின் சீயர் பெரியவாச்சான் பிள்ளையிடம் மாணவராய் இருந்தார். அதனால் கி.பி. 1312 க்கு மேல் பெரியவாச்சான் பிள்ளையின் சீடரானார் என்பது பெறப்படும்[2] சீயர், நம்பிள்ளை நம்பட்டர் வரையிலான ஆச்சாரிய பரம்பரைவரை குரு பரம்பரையை முடிக்கிறார். மேலும் பெரியவாச்சான் பிள்ளையின் காலம் கி.பி.1226 - 1323. பெரியவாச்சான் பிள்ளையைக் குருபரம்பரை குறிக்கவில்லை. அதனால் குருபரம்பரை நூல் தோன்றிய காலம் கி.பி.1312 லிருந்து கி.பி.1322 க்கும் இடைப்பட்ட காலம் எனக் கொள்ளலாம். இக்குரு பரம்பரை முதலாழ்வார்களை முதலில் கூறி, குலசேகரரை அடுத்து வைத்துப் பெரியாழ்வார் வரலாற்றைக் கூறுகின்றது.

## பெரியாழ்வார் வரலாறு

பெரியாழ்வார் வரலாற்றைத் தொடங்குமுன் இரு வடமொழித் தனியன்கள் முதலில் அமைகின்றன. அவற்றுள் ஒன்று, அவர் பரதத்துவ நிர்ணயம் செய்து வாதத்தில் வெற்றி கொண்டதையும் யானை மேல் வலம் வந்ததையும், திருமால் கருடன் மேலேறி அருட்காட்சி நல்கிய காலை ஆழ்வார் பல்லாண்டு பாடியதையும் கூறி அவருக்கு வணக்கம் செலுத்துகின்றது. அடுத்தமையும் தனியன் அவருடைய பிறப்பைப் பற்றிக் கூறுகின்றது. கலியுகத்தில் நாற்பத்தாறாம் வருடம் கழிந்த பின்னர் குரோதந வருடத்தில் ஆனி மாதத்தில் சுக்கில பட்ச ஏகாதசி திதியில் சுவாதி விண்மீன் நாளில் அவதரித்தார் என்று கூறுகின்றது. இவ்விரு தனியன்களும் கருடவாகனப் பண்டிதரின் திவ்விய சூரி சரிதத்திலிருந்து எடுக்கப்பட்டவை.

ஆழ்வார், ஆச்சாரியர் வரலாற்றைக் கூறும் மற்றொரு நூலான பெரிய திருமுடிஅடைவு காலத்தாற் பிற்பட்டது. இது முதலாழ்வார்களையும் நம்மாழ்வாரையும் அடுத்துப் பெரியாழ்வார் வரலாற்றைக் கூறுகின்றது.

பெரியாழ்வார் வியாழக்கிழமை அவதரித்தார் என்றும், ஆழ்வாரின் தந்தையார் முகுந்தாரியர் என்றும், தாயார் பத்மையம்மன் என்றும் குறிக்கின்றது. தமையனார் குலம்பியர்; குலம் - பூர்வஸிகை என்ற செய்திகளும் காணப்பெறுகின்றன. இவருக்கு ஆச்சாரியராகச் சேனை முதலியார் கொள்ளப் பெறுகின்றார். பெரியாழ்வார் எண்பத்தைந்து திருநட்சத்திரங்கள் வாழ்ந்தார் என்பதும் இதனால் அறியப் பெறுகின்றது. மணவாள மாமுனிகளும் ஆனியில் சோதி நன்னாளில் அவதரித்ததைக் குறிக்கின்றார்.

பெரியாழ்வார் கருடாம்சமாகத் தோன்றியவர். இவர் வேயர் குலத்துதித்தவர் என்பதை 'வேயர் தங்கள் குலத்துதித்த விட்டுசித்தன்' என்ற அவருடைய கூற்றினாலேயே அறியலாம். இவர் அவதரித்த தலம் திருவில்லிபுத்தூர். ஆழ்வார் திருமொழியின் ஈற்றுப்பாடல்கள் சில இப்பதியைப் 'புதுவை', 'வில்லிபுத்தூர்'. எனக் குறிக்கின்றன. இயற்பெயர் விஷ்ணுசித்தன் என்பதாகும். இதனை 'விட்டுசித்தன்' 'விட்டுணு சித்தன்' என்று பெரியாழ்வாரே குறிப்பிடுகின்றார்.

## *திருப்பெயரும் ஆழ்வாரும்*

விட்டுணு சித்தன் என்பதற்குத் திருமாலை நீங்காது தன் நினைவிலே பெற்றிருப்பவன் என்பது பொருள். ஆழ்வார்கள் அனைவரும் அத்தன்மையரே. அவர்களினும் இவர்க்கோர் சிறப்புண்டு. திவ்விய ஆத்ம குணங்களில் சிறப்புடையவனாகத் திகழுபவன் கருடன். எப்போதும் திருநாராயணனையும் பெரியபிராட்டியையும் நீங்கா இயல்பினன். பெரியாழ்வார் அக்கருடாம்சமாய்த் தோன்றியவராதலின் அவருடைய சித்தத்தில் நாராயணனையன்றி வேறொருவர் நினைவில்லை என்பது பெறப்படும். நாராயணன் தன்னுடைய மனத்து வந்து புகுந்த நிலையை,

> ***அரவத் தமளியினோடும் அழகிய பாற்கடலோடும்***
> ***அரவிந்தப் பாவையும் தானுமகம்படி வந்துபுகுந்து***
>
> ***( பெரியாழ். 5.2.10)***

எனக் குறிக்கின்றார். 'என் மனக் கடலில் வாழவல்ல மாயமணாள' என்றும் பாடுகின்றார். பட்டர்பிரான் என்பதும் ஆழ்வாரின் மற்றொரு திருப்பெயர். 'பாண்டியன் கொண்டாடப் பட்டன்பிரான்' வந்தானென்று திருப்பல்லாண்டு தனியன் கூறுகின்றது. ஆழ்வார் தன்னைப் 'புதுவை மன்னன்' 'வில்லி புத்தூர்க்கோன்', 'புதுவைக்கோன்' எனக் குறிக்கும் தன்மையும் அறியத் தக்கது.

பெரியாழ்வார் குலம் வேயர் குலம் என்பதாகும். 'வேயர் கோவலன் கவுணியன் வேந்தன்' என்ற தொடராலும் அத்தகு பார்ப்பனக்குடி பண்டு இருந்தமை அறியப்படும். வேயர் என்பது மூங்கிலை உடையவர் எனப் பொருள்படும். திருவரங்கத்தமுதனார் குடியை மூங்கிற்குடி என்று அவரது இராமாநுச நூற்றந்தாதி குறிக்கின்றது. அது இவ்வேயர் குலத்தை ஒத்ததே ஆகும். பிரம்மச்சர்ய நிலைய நீங்கி இல்லற நிலையை அடையும் அந்தணன் மூங்கிற்கோலை ஏற்றுக்கொள்க என்று தர்மசாத்திரங்கள் கூறுவதால் அத்தகைய தண்டைத் தாங்கி வந்த ஒரு சாராருக்கு வேயர் குலம், மூங்கிற்குடி எனும் பெயருண்டானது.[3]

பெரியாழ்வார் பிரகலாதனைப் போன்று கருவிலேயே திருமாலின் சிந்தையை உடையவராய் அவதரித்தார். 'இன்று வயிற்றிற் கிடந்திருந்தே அடிமை செய்யலுற்றிருப்பன்' என ஆழ்வார் கூறுவதால் அதனை உணரலாம்.

திருமாலுக்குச் செய்ய எண்ணிய திருத்தொண்டில் அவருடைய சிந்தை, திருமாலை தொடுக்கும் திருத்தொண்டில் சென்றது. அதற்குக் காரணமாய் அமைந்தது விட்டுணுபுராணம் குறிப்பிடும் மாலா காரனின் வீடுபேறு. கண்ணன் கஞ்சனை அழிக்க அவனுடைய நகருக்குச் சென்ற போது மாலாகாரனிடம் பூவிரக்க அவனும் மாலை தந்தான். ஆதலின் வீடுபேறு பெற்றான். அந்நிகழ்ச்சியே ஆழ்வாரை மாலை தொடுக்கும் திருத்தொண்டில் ஈடுபடுத்தியது.

## *பாண்டியனும் ஆழ்வாரும்*

வல்லப தேவனென்னும் பாண்டியன் நகரைச் சோதனையிட வர, அப்போது ஓர் அந்தணனைக் கண்டான். அவன் கங்கையாடி வருவதாகக் கூறினான். மன்னன் அவனிடம் ஒரு மறைபொருள் கேட்டான். அவனும் மழைக் காலம் நான்கு மாதங்களில் இன்புற்று மகிழ மற்றை எட்டு மாதங்களில் முயலுவன்; இரவில் இன்புறுவதற்காகப் பகலில் பாடுபடுவன்; வயோதிகத்தில் துன்புறாது வாழ வாலிப பருவத்தில் முயலுவன் மறுமையில் இன்புறுவதற்காக இப்பிறவியில் முயலக்கடவன் எனும் பொருள் பொதிந்த கருத்தைக் கூறிச் சென்றான். பாண்டியன் மறுமையில் இன்புறுவதற்கான வழியை அறிந்து நாட, தம் குருவான செல்வநம்பியைப் வினவினான். அவரும் அதற்கு அறத்தை அறிந்தவர்களின் ஆச்சாரமும் வேதமும் முக்கிய பிரமாணம் என்று கூறினார். மேலும் சமயத்துறை போகிய அறிவுடையார்களை அழைத்து வேதாந்த சித்தாந்தமான பரதத்துவ நிர்ணயம் செய்து அதன் வழியாய் அறிதல் வேண்டும் என்று கூறினார். பாண்டியனும் அப்படியே கிழிச்சீரையில்[4] பொன்னைக் கட்டிச் சமய வாதிகளை அழைப்பித்தான்.

வடபெருங்கோயிலுடையான் பெரியாழ்வார் கனவிற் தோன்றி அக்கிழியை அறுத்து வரச்சொன்னான். வேதங்களைக் கல்லாத அவர் தடுமாற இறைவனும் அவருக்கருளுவதாகச் சொன்னான். ஆழ்வார் பாண்டிப்பதி சென்று பரதத்துவ நிர்ணயம் செய்தார். அரசனும் செல்வ நம்பியும் மிக்கு மகிழ்ந்தனர். பொற்கிழியும் தானே தாழ்ந்தது. அரசனும் செல்வநம்பியும் அவரை வணங்கிப் பட்டத்து யானையின் மேலேற்றி நகர்வலம் செய்துவித்தனர். அப்போது திருமால் கருட வாகனனாய்க் காட்சி தந்தான். அப்போது அவர் பாடியதே திருப்பல்லாண்டு.

ஆழ்வார் தம்முடைய வரலாற்றுடன் தொடர்புடைய பாண்டிய மன்னனையும் செல்வ நம்பியையும் குறிக்கின்றார்.

***கொன்னவிற் கூர்வேற் கோன்நெடு மாறன்தென் கூடற்கோன் தென்னன்***

(பெரியாழ். 4.2.7)

எனப் பாண்டியனைக் குறிப்பிடுகின்றார். அன்றியும் அவனுடைய வீரச் சிறப்பைக் குறிக்கும் பாசுரம் ஒன்றும், பாண்டியன் முன்னோருடைய குலச்சிறப்பு பற்றிய பாசுரம் ஒன்றும் பெரியாழ்வார் பாசுரங்களில் காணப்படுகின்றன.

## ஆழ்வாரும் செல்வ நம்பியும்

குருபரம்பரை செல்வ நம்பியை மன்னனின் புரோகிதன் எனக்கூறுகின்றது. ஆழ்வார் அவரை இரு பாசுரங்களில் குறிப்பிடு கின்றார். அடியார்களில் சிறந்தவராக அவர் குறிப்பிடப் படுகின்றார். செல்வ நம்பி திருக்கோட்டியூரைச் சேர்ந்தவராவர்.

***அபிமானதுங்கன் செல்வனைப் போல நானும் பழவடியேன்***

(திருப்பல்லாண்டு பா.10)

***நளிர்ந்த சீலன் நாயாசலன் அபிமான துங்க செல்வ***

( பெரியாழ். 4.4.8.)

எனச் செல்வ நம்பி குறிப்பிடப்பெறுகின்றார்.

## ஆழ்வாரும் பரதத்துவமும்

வடமொழியில் திகழ்ந்த வைணவ தத்துவங்கள் பெரியாழ்வார் காலம் வரை தமிழில் சாத்திர நூலாக அமையவில்லை. பிற்காலத்தில் வியாக்கியானங்கள் எழுதிய ஆச்சாரியர்களே தத்துவக் கருத்துக்களைத் தமிழ்ப்படுத்தினர். ஆச்சாரிய மரபில் ஆழ்வார்களில் நம்மாழ்வார் மட்டுமே ஆச்சாரியராகக் கொள்ளப்பெறுகின்றார். ஆயினும் அவர்க்கு முன்னரே

வேதங்களிலிருந்து விளக்கங்களைக் காட்டிப் பரம்பொருள் திருமாலே என விளக்கிய பெருமை பெரியாழ்வாருக்கு மட்டும் உரியது. ஆதலில் ஆச்சாரிய பரம்பரையில் பெரியாழ்வாரையும் ஓர் ஆச்சாரியராகக் கொள்வதில் தடையில்லை. அவருடைய பரதத்துவ நிர்ணயம் ஓர் நூலாக அமையாதது பெருங்குறையாகும். பரதத்துவ நிர்ணயத்தைக் குறிக்கும் குருபரம்பரை பெரும்பான்மை வடமொழி வாக்கியங்களால் விளக்குகின்றது.

இயல்பாக அகரம் எல்லாச்சொற்களுக்கும் மூலக்காரணமாய் இருப்பது. பரம்பொருளும் அத்தன்மையதே. அகரம் சொல்லும் பொருளுமாய் இருப்பது. எழுத்துக்களில் நான் அகரமாய் இருக்கிறேன் எனப் பகவத் கீதையில் கண்ணன் குறிப்பிடுகிறான். அகரம் நாராயணனைக் குறிப்பது இவ்வுலகப் பொருள்கள் அனைத்தும் மூன்றிலடங்கும். ஈசுவரன், சித்து, அசித்து என்பன அவை. ஈசுவரன் அகரமாகத் திகழக் கூடியவன். அவனே முப்பொருளாய் வியாபித்திருப்பவன் என்பது இதனால் பெறப்படும். இதனையே பெரியாழ்வார் மூன்றினில் தோன்றி மூன்றினில் 'மூன்றுருவானான்' எனத் தம் பாசுரத்தில் குறிக்கின்றார்.

எதனிடத்து இப்பூதங்கள் உண்டாயினவோ, எதனால் இவை வாழுகின்றனவோ, எதனிடத்து இவை பிரளய காலத்துச் சேருகின்றனவோ, மோட்ச காலத்து எதனை அடைகின்றனவோ அதனை நீ அறிவாயாக; அதுவே பிரம்மமாகும். இம் மேற்கோளைக் குரு பரம்பரை எடுத்தாளு கின்றது. இது தைத்திரிய உபநிடதத்திலிருந்து எடுக்கப்பெற்றது. இக் கருத்தினை விளக்குவனவாக ஆழ்வாரின் பாசுரங்கள் சில அமைகின்றன.

***'மண்ணோடு நீருமெரியுங் காலும் மற்றுமா காசமுமாகி நின்றாய்'***

(பெரியாழ்.4.10.6)

எனும் வரி இவ்வைம் பெரும்பூதங்கள் உண்டான இடத்தையும் வாழு மிடத்தையும் விளக்குவது. பிரளய காலத்தில் திருமால் பாலகனாய் இவ்வுலகை உண்டருளியது இவ்வுலக ஒடுக்கத்திற்குக் காரணமான தன்மையைக் குறிப்பிடும். இப்பிரபஞ்சம் திருமாலிடத்தே உண்டாகிறது. பிரளய காலத்து அவனிடமே இருக்கிறது. அதற்கு அளிப்பையும் அழிப்பையும் அவனே செய்கின்றான். உலகமாய் இருப்பவனும் அவனே என இவ்வாறு பல்வகையாலும் திருமாலே பரம்பொருள் என்பது ஆழ்வாரால் விளக்கப் பெறுகின்றது.

நாராயணனைக் காட்டிலும் மேலான தெய்வம் இருந்ததுமில்லை, இருக்கப்போவதுமில்லை. இதுவே வேதங்களில் மறை பொருளாகும்.

புராணங்கள் இசைப்பதும் இதுவே. இதனை ஒத்த கருத்தை தம் பாசுரம் ஒன்றில் அமைக்கின்றார் ஆழ்வார். அது பிரம்மனுக்கும், ஈசனுக்கும், இந்திரனுக்கும் மேலான கடவுளாய்த் திருமாலைக் காட்டுகிறது. வேதங்களைக் காட்டிலும் சிறந்த சாத்திரங்கள் இல்லை. கேசவனைக் காட்டிலும் மேலான தெய்வமும் இல்லை என்பது ஆழ்வார் விளக்கும் கருத்து. வேதங்களால் விளக்கப் பெறுபவன் அவனே. இதனை 'வேதாத்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கை' எனப் பாடுகின்றார்.

அழியும் தன்மை இல்லாததாய் எழிலுடை மேனியதாய் நித்திய சூரிகளால் துதிக்கப்படுவது; பதினாயிரம் சூரியர்களை ஒத்த ஒளியை உடையதாய்த் திகழும் இயல்பினது.

***அரவத் தமளியினோடும் அழகிய பாற்கடலோடும்***
***அரவிந்தப் பாவையும் தானும்***

(பெரியாழ். 5.2.10)

அமையப் பெறுவது அந்த நித்யவிபூதி. திருமாலின் இப்பரமபதம் சூரியனைக் காட்டிலும், தீயினைக் காட்டிலும் மிக்கு ஒளியுடையது. தேவர்களாலும் அசுரர்களாலும் காணஅரியது. அப்பரமபதம் அடைந்தார் இப்பூலகம் வருவதில்லை. விட்டுணுவின் அப்பரம பதத்தை நித்திய முக்தர்கள் அனுபவிக்கிறார்கள்.

இவ்வாறு ஆழ்வார் பரதத்துவத்தை விளக்குவதாக குருபரம்பரை குறிக்கிறது. பெரியாழ்வார் பாசுரங்களில் ஆங்காங்கு அமைந்துள்ள கருத்துக்கள் குருபரம்பரையில் தொகுத்துக் கூறப்பட்டுள்ளமை நோக்குவதற்கு உரியது.

## கோயிற் திருத்தொண்டு

பரதத்துவ நிர்ணயம் செய்வதற்கு முன்னும், பொற்கிழி பெற்ற பின்னும் வடபெருங்கோயிலுடையானுக்குத் திருமாலைத் திருத் தொண்டினை ஆழ்வார் மேற்கொண்டிருந்தார் எனக் குருபரம்பரை கூறுகின்றது. இத்தொண்டு ஒன்றினையே ஆழ்வார் பெரிதும் விரும்பி அக்கோயிலில் வாழும் பக்தரானர். திருமால் கோவிலில் வாழ விரும்பிய வைட்டணவன் எனப் பாடிய பெருமை ஆழ்வார்களின் இவர்க்கு மட்டிலுமே உரியதாகிறது. இறைவனை எண்ணாத நாளும் நால்வேதம் கொண்டு அவன் பாதம் நண்ணாத நாளும் பட்டினி நாளாகக் கருதுகின்றார். பொற் கிழிப்பொருள் கொண்டு பெருந்தொண்டாற்றிய இவர் தோட்டம் தொடங்கி அனைத்தையும் இறைவனடிக்கு வளைப்பகம் வளைத்துக் கொண்டதைக் குறிப்பிடுகின்றார். ஆழ்வாரின் திருத்தொண்டு அவருடைய பாசுரங்களின் வழி மிக்கு வெளிப்படுவது கண்கூடு.

## ஆழ்வாரும் ஆண்டாளும்

பெரியாழ்வாரின் நந்தவனத்தில் கிடைத்து வளர்க்கப்பெற்றவள் ஆண்டாள். ஆண்டாளைப் பூமிதேவியின் அம்சமாகக் கூறுகின்றது திவ்யசூரி சரிதம். சனகற்குக் கிடைத்த சீதை போன்றவள் ஆண்டாள். வடபெருங் கோயிலுடையானுக்கு மாலையைச் சூடிக் கொடுத்து, அரங்க மணவாளனுக்கு மணமகளானவள். பெரியாழ்வார் திருவரங்கனுக்கு ஆண்டாளை மணம் முடித்த பின்னும் திருவில்லிபுத்தூர் இறைவர்க்கு அடியராய் இருந்து திருத்தொண்டை மேற் கொண்டார்.

பெரியாழ்வார் பாசுரங்களை ஒரே காலத்தில் பாடினார் என்று கொள்வதற்கில்லை. மகளைப் பிரிந்த தாயின் கூற்றாகப் பாசுரங்களை அமைக்கின்றார் ஆழ்வார். இவ்வகை அகத்துறை அமைப்பு ஏனைய ஆழ்வார் பாசுரங்களில் இல்லாமை அறியத்தக்கது. இத்தகு அகத்துறைப் பாசுரங்களுக்கு ஆண்டாளின் பிரிவே காரணமாய் இருக்கலாம்.

***ஒருமகள் தன்னை உடையேன் உலகம் நிறைந்த புகழால்***
***திருமகள் போல வளர்த்தேன் செங்கண்மால் தான்கொண்டு போனான்***

(பெரியாழ். 3.8.4.)

என ஆழ்வார் அமைக்கும் தொடர்கள் மேற்கண்ட கருத்தை வலியுறுத்துவன.

இவற்றால் பெரியாழ்வார் வரலாற்றின் பல கூறுகள் அவர்தம் பாசுரங்களின் வழி உணரலாகின்றன. அவை அவருடைய வாழ்வின் தத்துவத்தை விளக்குவனவாகவும் அமைகின்றன. புலவரின் இலக்கியச் சிறப்பை உணர அவருடைய வாழ்க்கைச் சூழலை நோக்குதல் இன்றியமையாதது. அவ்வகையில் ஆழ்வாரின் பாசுரங்களும் அவருடைய வரலாற்றின் கூறுகளைப் பிரதிபலிக்கின்றன.

## பெரியாழ்வார் காலம்

ஆய்வாளர்கள் பெரியாழ்வார் காலம் பற்றிய இருவேறான கருத்துக்களைக் கொண்டுள்ளனர். ஒருசாரார் கி.பி.8-ம் நூற்றாண்டு என்றும் மற்றொரு சாரார் கி.பி.9-ஆம் நூற்றாண்டு என்றும் கொள்கின்றனர்.

***கொன்னவிற் கூர்வேற் கோன்நெடு மாறன்தென் கூடற்கோன்***
***தென்னவன் கொண்டாடுந் தென்திரு மாலிருஞ் சோலையதே***

(பெரியாழ். 4.2.7.)

எனப் பெரியாழ்வார் தம்காலப் பாண்டியனைக் குறிக்கின்றார். கி.பி.8-ஆம் நூற்றாண்டின் பாண்டிய நாட்டை ஆண்ட மாறவர்மனே பெரியாழ்வார் காலப் பாண்டியன் என வரையறை செய்கின்றார் மு. இராகவையங்கார். அப்பாண்டியன் காலம் கி.பி.740-767. பெரியாழ்வார் எண்பத்தைந்து ஆண்டுகள் வாழ்ந்தவர். பெரியாழ்வார் வாழ்ந்த காலமாக ஐயங்கார் கொள்வது கி.பி.690 முதல் கி.பி.775 வரை ஆகும்[4]. மேலும் ஆண்டாள் திருப்பாவையில் 'வெள்ளி எழுந்து வியாழம் உறங்கிற்று' எனக் குறிக்கும் கோள்நிலை கி.பி.731ல் நிகழ்ந்தது என்பது அவர்தம் முடிபு[5]. இதனைக் கொண்டும் பெரியாழ்வார் காலம் கி.பி.7-ம் நூற்றாண்டின் இறுதியிலிருந்து 8-ஆம் நூற்றாண்டின் இறுதி என வரையறை செய்கின்றார் ஐயங்கார்.

பெரியாழ்வார் குறிப்பிடும் பாண்டிய மன்னன் கி.பி. 8-ஆம் நூற்றாண்டினன் அல்லன்; 9-ஆம் நூற்றாண்டினனே என்றும் அம்மன்னன் ஸ்ரீவல்லபன் என்றும் கோபிநாதராவ் அவர்களின் கருத்தாக விளக்கப் பெறுகின்றது.[6] மேலும் டாக்டர். மா. இராசமாணிக்கனாரும் பெரியாழ்வார் காலப் பாண்டியன் சீமாறன் சிவல்லபனே எனக் கொள்கின்றார். இவனுடைய காலம் கி.பி.835-862.[7] ஆண்டாள் குறிப்பிடும் கோள் நிலை கி.பி.886 லும் நிகழ்ந்ததாலின் பெரியாழ்வார் காலம் கி.பி.9-ஆம் நூற்றாண்டே எனக்கொள்ளுதல் பொருத்தமுடைவதாக அமையும் என்கிறார் அவர்.[8] டாக்டர். ந. சுப்பு ரெட்டியாரும் பெரியாழ்வார் வாழ்ந்த காலமாக கி.பி.850-ஐக் கொள்கிறார்.[9]

மேற்கண்ட கருத்தக்களால் பெரியாழ்வார் கி.பி.9-ஆம் நூற்றாண்டினர் எனக்கொள்வதற்கான காரணங்கள் மிக வலுவுடையன வாக அமைகின்றன என்பது விளங்கும்.

## *பெரியாழ்வாருக்குரிய சிறப்புக்கள்*

வைணவத்தில் சில அடைச்சொற்கள் சிறப்புடைய சிலர்க்கே உரியனவாக அமையும். அவற்றை ஆழ்வார் ஆச்சாரியர்களின் திருப் பெயர்களின் வழி உணரலாம். அவற்றில் இரு பெயர்கள் ஒரு சிலர்க்கு மட்டிலும் அவ்வகையில் அமைகின்றன. அவை நம் என்பதும், பெரிய என்பதும் ஆகும். அவை அவரவர்தம் சிறப்பால் அமைவன. நம் எனும் உரிமையை விளக்கும் இச்சொல் ஆழ்வார்களில் நம்மாழ்வாருக்கும் ஆச்சாரியர்களில் நம்பிள்ளை, நம்பட்டர், நஞ்சியர் ஆகிய மூவருக்கும் உரியது. அதே போன்று பெரிய எனும் அடைமொழியும் ஆழ்வாருள் பெரியாழ்வாருக்கும் ஆசாரியருள் பெரிய நம்பி, பெரிய பட்டர் ஆகிய இருவருக்கும் உரியது. பெரியாழ்வாருக்கு உரிய இச்சிறப்பினைப்,

***பரிவாலே வில்லிபுத்தூர் பட்டர்பிரான் பெற்றான்***
***பெரியாழ்வா ரென்னும் பெயர்***

(உபதேச ரத்தின மாலை .பா. 18)

என்று உபதேசரத்தினமாலை குறிப்பிடுகின்றது. இறைவன்பால் கொண்ட பரிவால் இத்திருப்பெயர் ஆழ்வாருக்கு உரியதானது. சான்றோர்க் கெல்லாம் தலைவனாகத் திகழ்ந்த சிறப்பைப் பெற்றாராதலின் அவர் பட்டர்பிரான் என்ற பெயரும் பெற்றார். இத்தகைய சிறப்புக்களால் பெரியாழ்வாருக்கு உரிய உயரிய இடம் விளங்கும்.

நம்மாழ்வாரை அவையவியாகவும் ஏனைய ஆழ்வார்களை அவையவங்களாகவும் கூறுதல் வைணவ மரபு. அவற்றில் பெரியாழ்வாரைத் திருமுகமாகக் கூறுதலுண்டு. திருமுகமும் ஓர் அவயவியாகத் கொள்ளக் கூடியதே. அதைப் போன்று பெரியாழ்வாரும் மற்றை ஆழ்வாரைக் காட்டிலும் சிறப்புடையவராகத் திகழுகின்றார்.

ஆழ்வார், ஆச்சாரியர்களில் இறைவனுக்கு மாமனாரான பெருமை இருவருக்குரியது. ஆழ்வார்களில் பெரியாழ்வாருக்கும், ஆச்சாரியர்களில் எங்களாழ்வானுக்கும் உரியது இச்சிறப்பு. பெரியாழ்வார் இயற்பெயர் விட்டுணுசித்தன் என்பது. எங்களாழ்வானும் விட்டுணு புராணத்திற்கு விட்டுணுசித்தியம் எனும் விளக்கம் எழுதி விட்டுணு சித்தன் எனப்பெயர் பெற்றார். ஆதலின் விட்டுணுசித்தன் எனும் பெயர் வைணவத்தில் சிறப்பிடம் பெறுகின்றமை விளங்கும். வில்லிபுத்தூராழ்வார் என்பது பெரியாழ்வாரைக் குறிக்கும். பிற்காலத்தில் பாரதம் எழுதிய வில்லி புத்தூராழ்வாருக்குப் பெரியாழ்வார் பொருட்டாகவேப் பெயரிட்டனர். இவற்றால் பெரியாழ்வார் பெயர் சிறப்புடையதாகக் கொள்ளப் பெற்றிருந்தது என்பது விளங்கும்.

ஆழ்வார்களனைவரும் திருமாலைப் போற்றிப் பாடினராயினும் வைணவ சமயத் தத்துவங்களையும் திருமாலின் பரத்துவத்தையும் முழுமையாக வெளியிட்டருளியதாய் வரலாறு இல்லை. ஆழ்வார்களின் தலைவரான நம்மாழ்வார் பாசுரங்களுக்கும் பிற்காலத்தில் தான் தத்துவங்களின் அடிப்படையில் பொருள் கூறப்பெற்றது. முழுமையான சமயக் கொள்கை இராமாநுசர் காலத்தில் வகுத்து உரைக்கப் பெற்றது. இவற்றுக்கு மேலாகப் பெரியாழ்வார் காலத்திலேயே இவர் திருமாலின் பரத்துவத்தை நிறுவி மற்ற மதங்களினும் வைணவமே மேம்பட்டது என்று எடுத்துரைத்தார் என்பதை அவர் வரலாற்றின் வாயிலாய் உணரலாம். ஆதலின் வைணவ சமய கொள்கைக்கு முழுமையான வடிவம் கொடுத்ததில் முதன்மையாகத் திகழ்ந்தவர் பெரியாழ்வார் எனக் கொள்ளலாம்.

பெரியாழ்வார் முறையான கல்வி பயின்றதாக அவருடைய இலக்கியங்கள் வாயிலாகவோ, குருபரம்பரை மூலமாகவோ அறிய இயலவில்லை. ஆயினும் அவர் இறையருளால் வேதார்த்தங்களை உணர்த்தி அனைவரையும் திருமாலடியாராக்கினார். வான்மீகி உரைத்த முதற் செய்யுளே எல்லாப் பொருள்களையும் விளக்கியது போலவும், பாஞ்ச சன்னியத்தாலே ஒற்றுண்ட துருவன் எல்லாமுணர்ந்த ஞானி யானது போலவும் அமையும் சிறப்பு இவர்க்குரியது. ஆழ்வாரின் திருப்பல்லாண்டு வேதச் சுருக்கானது என வைணவர்களால் போற்றப் பெறுகின்றது.

சைவ சமயக்குரவரான சம்பந்தர் பாண்டியனைச் சைவனாக்கிப் பாண்டிய நாட்டில் சைவம் தழைக்கச் செய்தார். திருநாவுக்கரசரும் பல்லவ மன்னன் மகேந்திரனைச் சைவனாக்கினார். இவ்வாறு மன்னர் களைச் சைவ மதத்திற்கு மாறச் செய்து சைவம் தழைக்கச் செய்த பெருமை சைவத்தில் போற்றப்பெறுகின்றது. அதனையொத்த சிறப்பு வைணவத்தில் பெரியாழ்வாருக்கு மட்டுமே உண்டு. பாண்டியனை வைணவனாக்கிப் பாண்டிய நாட்டில் வைணவம் வளர்த்தவர் பெரியாழ்வார்.

ஆழ்வாராதிகள் அனைவர்க்கும் திருமால் அருள்புரிந்த விதம் வெவ்வேறாக அமையும். முதல் மூவாழ்வாரிடத்தும் அந்தர்யாமியாய் இருந்து ஆட்கொண்டருளினான். திருமங்கையாழ்வாரிடம் மணவாளனாய் வந்து திருமந்திரம் ஓதுவித்தான். திருமழிசை ஆழ்வாருக்குச் சொன்ன வண்ணம் செய்து பெருமையைக் கூட்டிவித்தான். நம்மாழ்வாருக்கும் பெரியாழ்வாருக்கும் கருட வாகனனாய்க் காட்சி தந்தருளினான். நம்மாழ்வார் அவ்வரிய காட்சியைத் தான் மட்டும் கண்டு மகிழ்ந்தார். பெரியாழ்வாரோ அவ்வருட்காட்சியைத் தானும் கண்டு மகிழ்ந்து ஏனை யோர்க்கும் காட்டி மகிழச்செய்தார். தம்மைச் சார்ந்தார்க்கும் பரம் பொருளைக் காட்டிப் பேற்றினுக்கு ஆளாக்கிய சிறப்புப் பெரியாழ்வாருக்கு மட்டுமே உரியது.

கண்ணனை இந்தியாவின் ஆத்மா என்று கூறுவதுண்டு. இந்தியா வின் ஆத்மா இளமை உடையதாய்ப் புராண இதிகாசங்களில் திகழ்கின்றது. அக்கண்ணனைத் தமிழில் போற்றித் துதித்தவர்கள் ஆழ்வார்கள். குழந்தைக் கண்ணன் கவிஞர்களின் பாக்களில் தவழ்ந்து சிறப்புடைய தெய்வமாகத் திகழ்கின்றான். அக் கண்ணனின் இளமையைத் தமிழ்ப் பாக்களில் தவழச் செய்தவர்களில் பெரியாழ்வார் முதன்மை யானவர்.

### *வைணவத்தில் பெரியாழ்வாருக்குரிய இடம்*

வைணவ சமயத்தின் அடித்தளமாய் விளங்கும் ஆழ்வாராதிகள் அனைவரும் சிறப்புடன் போற்றப் பெறுகின்றனர்.

ஒருவரினும் ஒருவர் மேம்பட்டவராய் உரைக்கும் பான்மையால் அவர்களின் சிறப்பு வெளிப்படுகின்றது. திருமாலின் அம்சமாய்த் தோன்றிய ஆழ்வார்கள் அனைவரையும் ஆச்சாரியர்கள் போற்றிச் சிறப்பித்துக் கூறுகின்றனர். அதனால் ஆழ்வார்களுக்குரிய சிறப்பிடம் நன்கு விளங்கும். ஈண்டுப் பெரியாழ்வாருக்குரிய சிறப்பிடம் விளக்கப் பெறுகின்றது.

## ஆண்டாள்

பெரியாழ்வாரின் புண்ணிய புதல்வியான ஆண்டாள், பெரியாழ்வார் கண்ணன் பால் கொண்ட ஈடுபாட்டையும் அவனது செயல்களில் அவர் கண்ட இன்பத்தையும் கீழ்க்காணுமாறு குறிப்பிடுகின்றார்.

*செல்வர் பெரியர் சிறுமா னிடவர்நாம் செய்வதென்*
*வில்லி புதுவை விட்டுசித் தர்தங்கள் தேவரை*
*வல்ல பரிசு அருவிப்ப ரேலது காண்டுமே*

(நா. திருமொழி. 10.10)

என அமையும் தொடர்கள் அதனை விளக்கும் கண்ணனை நேரில் அழைத்து அனுபவித்தமை இங்கு ஆண்டாளால் உரைக்கப் பெறுகின்றது.

*செம்மை யுடைய திருவரங்கர் தாம்பணித்த*
*மெய்மைப் பெருவார்த்தை விட்டுசித்தர் கேட்டிருப்பர்*

(நா. திருமொழி 11.10)

என அமையும் தொடர்களும் இறைவனை நேரில் அனுபவித்தமையை விளக்கும்.

## நாதமுனிகள்

ஆழ்வார்களில் திருமாலுக்கு மகளை மணம் செய்வித்த பெருமை பெரியாழ்வாருக்குரியது. நாலாயிரத்தில் முன்னதாய் அமையும் பெரியாழ்வார் பிரபந்தங்களுக்குத் தனியனாய் அமைவன மூன்று பாடல்கள். பிற்கால ஆச்சாரிய பரம்பரையின் தலைவரான நாதமுனிகளின் தனியன் இறைவர்க்கு மாமனாரான பெருமையால் பெரியாழ்வாரைத் துதிக்கின்றது. அவருக்குரிய தனிச்சிறப்புக்களில் இது முதன்மையானது. அமரர்களாலும் வணங்கப்பட்டவர் என நாதமுனி குறிப்பது ஆழ்வாருக்குரிய இடத்தைக் காட்டும்.

## பிள்ளைப்பெருமாள் ஐயங்கார்

அஷ்டப்பிரபந்தத்தின் ஆசிரியர் இவர். தம் பிரபந்தங்களில் ஆழ்வார்களின் அருளிச் செயல்களை ஆங்காங்கு உரைத்துச் செல்கின்றார்.

பெரியாழ்வார் 'வையகமெண் பட்டர்பிரான்' எனக் குறிக்கப் பெறுகின்றார். இறைவனைக் கண்டபோது தன் நன்மை கருதாது வையகமாகத் திகழ்ந்த மாலுக்குப் பல்லாண்டு பாடிய சிறப்பைப் பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் குறிக்கின்றார். ஆழ்வார்களில் பெரியாழ்வாரை முதன்மைப் படுத்திப் 'புதுவை நகர் பட்டர்பிரான் சரண்கள் போற்றி' எனச் சரணடைகின்ற தன்மையையும் கூறுகின்றார். இவை பல்லாண்டு பாடியமையால் பெரியாழ்வார் பெற்ற சிறப்பினைக் காட்டுவன.

## *கருடவாகனப் பண்டிதர்*

ஆழ்வார்களின் வரலாற்றைக் காவிய அமைப்பில் கூறும் நூல் திவ்விய சூரிசரிதம். பெரியாழ்வாரைத் திவ்வியாத்ம குணங்களில் சிறந்தவர் என்றும் வேதத்தின் உருவான கருடனின் அம்சமாகத் தோன்றியவர் என்றும் பெரியபிராட்டியுடன் கூடிய நாராயணனின் அருளுக்குப் பாத்திரமான வரென்றும் இந்நூல் குறிக்கின்றது.

## *பாண்டியபட்டர்*

இறைவனின் தத்துவத்தை விளக்கிக் கிழியறுத்தவர் பெரியாழ்வார். அவருடைய சிறப்பைக் கூறின் அது கீழ்மையில் சேரும் வழியறுக்கும் என்கிறார் பாண்டியபட்டர். திருப்பல்லாண்டின் தனியன் வழி இது விளக்கப்பெறுகின்றது.

## *பிள்ளை லோகாச்சாரியர்*

அட்டாதச ரகசியங்களை அருளி வைணவத்தில் சிறப்பிடம் பெறும் ஆச்சாரியராவர் இவர். வைணவ தத்துவங்களை விளக்குவது இவருடைய வசன பூஷணம். ஆழ்வார்களனைவரும் மங்களாசாசனத்தால் சிறப்பினைப் பெற்றவர்கள். அவர்களிலும் பெரியாழ்வாருக்கு ஏற்றம் உரைக்கின்றது இந்நூல். ஆழ்வார்களின் தலைவராக நம்மாழ்வார்க்கு உரைக்கப்பெறுவது போலப் பெரியாழ்வாருக்குரிய சிறப்பு மங்களா சாசனத்தால் உரைக்கப்பெறுகின்றது.

***ஆழ்வார்கள் எல்லாரையும் போல அல்லர் பெரியாழ்வார்***

(ஸ்ரீவசன. சூ.254)

***அவர்களுக்கு இது கதாசித்தம்; இவர்க்கு இது நித்யம்***

(ஸ்ரீவசன. சூ.255)

என அமையும் சூத்திரங்கள் அதனை விளக்குவன.

மற்றுமோர் சிறப்பு லோகாச்சாரியாரால் உரைக்கப் பெறுகின்றது. வேயர் குலத்துதித்த சோழிய அந்தணர் ஆழ்வார். உயர் குலத்துப் பிறந்தா ராயினும் வைசிய குலத்துப் பிறந்த கண்ணனிடம் ஆழ்வாருக்கு ஈடுபாடு ஏற்பட்டது. அவர்தம் புதல்வியும் கண்ணனிடம் ஈடுபாடு கொண்டாள். பகவத் தொண்டிற்குக் குலம் ஓர் இடையூறில்லை எனும் செய்தி இவராலும் ஆண்டாள் நாச்சியாராலும் விளக்கம் பெறுகின்றது.

## *அப்பிள்ளை*

ஆழ்வார்களில் நம்மாழ்வாரும் பெரியாழ்வாரும் பிறந்த ஊர் விளங்கத் தோன்றியவராவர். அவர்கள் அவதரித்த பதிகளும் வைணவத்தில் போற்றப் பெறுகின்றன. இதனை அப்பிள்ளை தம் வாழித் திருநாமத்தில் உரைக்கின்றார்.

***திருக் குருகைச் சடகோபன் திருவடிகள் வாழியே***

என நம்மாழ்வாரும்,

***வில்லிபுத் தூர் நகரத்தை விளங்க வைத்தான் வாழியே***

எனப் பெரியாழ்வாரும் துதிக்கப் பெறுகின்றனர்.

## *மணவாளமாமுனிகள்*

ஆழ்வார்களைப் பற்றியும், ஆச்சாரியர்களைப் பற்றியும் வைணவத் தில் பல நூல்கள் எழுந்துள்ளன. இவற்றில் மணவாள மாமுனிகளின் உபதேச ரத்தின மாலையும் ஒன்று. இந்நூல் 'பெரியாழ்வாருக்கு ஒப்போரிலை இவ்வுலகு தனில்' என்று உரைக்கின்றது.[10]

## *அழகிய நம்பிதாசர்*

தமிழில் செய்யுள் வடிவிலமைந்த குருபரம்பரை நூல்கள் ஐந்தாகும். அதில் வடிவழகிய நம்பிதாசர் எழுதிய குருபரம்பரையும் ஒன்று. பெரியாழ்வார் பிரபந்தத்தை நூற்று ஐம்பத்திரண்டு பாடல்களில் எடுத்துரைக்கின்றது இந்நூல். பெரியாழ்வார் இவ்வுலகைத் திருத்த அவதரித்தவர் என்பதைப்,

***பொய்த் திறத்தார் புலைச்சர்ப்பம் பொடியாகக் கருடனைத்தன்***
***சித்திரத்தாற் பெரியாழ்வா ராயுலகைத் திருத்தென்றான்***

(குருபரம்பரை பா.4.)

என அக்குரு பரம்பரை எடுத்துரைக்கின்றது.

### *வேதாந்த தேசிகர்*

வடகலை வைணவ ஆச்சாரியர்களில் இவரும் ஒருவர். இவரும் இறைவன் கருடாவாகனனாய்த் தோன்றியபோது பெரியாழ்வார் பல்லாண்டு பாடியதைக் கூறிப் போற்றுகின்றார்.

மற்ற ஆழ்வார்களைக் காட்டிலும் வேறொரு சிறப்பும் பெரியாழ்வாருக்குள்ளது. இவருடைய வாழ்க்கையாலும் தத்துவத்தாலும் கவரப்பெற்ற விசய நகரப்பேரரசின் மன்னரான கிருட்டிண தேவராயர் சிறப்புடைய, ஒரு காவியத்தை இயற்றியுள்ளார். அக்காவியம் 'ஆமுக்த மால்யதா' என்றும் 'விட்டுணு சித்திவா' என்றும் பெயர் பெறும். இக்காவியம் பெரியாழ்வாரின் வாழ்க்கையைப் பற்றிக் கூறுவது. ஆழ்வாரின் வளர்ப்பு மகளான ஆண்டாளைப் பற்றியும், திருவரங்கனிடம் காதல் கொண்ட சிறப்பைப் பற்றியும், ஆழ்வாரின் வைணவ கொள்கைகள் பற்றியும் எடுத்துரைக்கின்றது. இக்காவியமே வைணவம் தெலுங்கு இலக்கியங்களில் கலப்பதற்கும் காரணமாய் அமைந்துள்ளது எனலாம்.

மேற்கண்ட எடுத்துக்காட்டுகளால் ஆழ்வார்களில் சிறப்புமிக்க ஒருவராகப் பெரியாழ்வார் திகழ்கின்றார் என்பது அறிய வருகிறது. வைணவத்தில் அவருக்கு அளிக்கப்பெறும் இடம் பெரியதிருவடி எனப்பெறும் கருடனுக்கு அளிக்கப்பெறும் இடத்தையொத்தது. கருடன் எப்போதும் திருமாலைத் தாங்கி இருப்பதுபோல வைணவ சமயத் தத்துவத்தைத் தாங்கி இருப்பவர்களில் பெரியாழ்வார் முதன்மையானவர்.

### *பாசுரங்கள்*

நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் முதலாவதாய் அமையும் சிறப்புப் பெரியாழ்வார் பிரபந்தத்திற்கு உரியதாகிறது. நாலாயிரத்தில் எண்ணிக்கை வகையால் மிகுதியான பாசுரங்களைப் பாடியவர் வரிசையில் பெரியாழ்வார் மூன்றாம் இடத்தைப் பெறுகின்றார். மற்றை இருவர் நம்மாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் ஆவார். பெரியாழ்வார் பாடிய பாசுரங்கள் நானூற்று எழுபத்து மூன்று. நம்மாழ்வார் பாசுரங்கள் திராவிடவேதம் எனப்படும். திருமங்கை யாழ்வாரின் ஆறு பிரபந்தங்களும் ஆறங்கங்கள் என்று அழைக்கப் பெறுகின்றன. பெரியாழ்வாருடைய திருப்பல்லாண்டு வேத வேதாந்தங்களுக்குப் பிரணவமாக அமைந்து விளங்குகின்றது.

பெரியாழ்வார் இயற்றிய பிரபந்தங்கள் இரண்டு. இவை திருப் பல்லாண்டும், பெரியாழ்வார் திருமொழியும் ஆகும். திருப்பல்லாண்டை ஒரு பிரபந்தமாயும், பெரியாழ்வார் திருமொழியை வேறு பிரபந்தமாயும்

கொள்ளலாம். இதுவன்றி இரண்டையும் ஒரே பிரபந்தமாயும் கொள்ளு கின்ற சிறப்பும் காணப்பெறுகின்றது. பெரியாழ்வாரின் திருப்பல்லாண்டு வைணவத்தில் சிறப்பிடம் பெறுகின்றது. நாலாயிரத்தில் சிறிய பிரபந்தங் களில் ஒன்றாக அமையும் இத்திருப்பல்லாண்டு பன்னிரு பாசுரங்களைக் கொண்டது. முதற்பாசுரம் மட்டும் குறள்வெண் செந்துறையாகவும் மற்றப் பதினொரு பாசுரங்களும் அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்த மாகவும் அமைந்துள்ளன. இப்பன்னிரு பாசுரங்களும் வைணவத்தின் தத்துவ விளக்கமாக அமைகின்றன.

பெரியாழ்வார் திருமொழி நானூற்று அறுபத்தொரு பாசுரங்களைக் கொண்டது. இப்பிரபந்தம் கீழ்வரும் கருத்துப் பொருளை உள்ளடக்கி அமைகிறது எனலாம். கண்ணன் பிள்ளைப் பருவச் செயல்கள், திவ்விய தேசங்கள், அகத்துறைப் பாசுரங்கள், அனுமன் அடையாளம் உரைத்தது. திருநாமச் சிறப்பு, அருள் வேட்டல், அருளனுபவம் என்பன அவை. இப்பாசுரங்களை நோக்க இவை ஒரே காலத்தில் பாடப்பெற்றவையல்ல என்பது விளங்குகிறது. இறைவனிடம் கொண்ட ஈடுபாடு மிகமுற்றிய நிலையில் இறையுணர்வு ஈற்றில் இடம் பெறுவதால் பெரியாழ்வாரின் வாழ்க்கையின் விளக்கமாக இப்பாசுரங்கள் அமைகின்றன.

பெரியாழ்வாரின் இலக்கியத்தில் இருநூற்றுக்கும் மேலான பாசுரங்கள் கண்ணனின் இளமைப் பருவச் செயல்களைக் கூறுவன. திவ்விய தேசங்கள் பற்றி ஆழ்வாரமைக்கும் பாசுரங்கள் இயற்கை வர்ணனையுடனும், பக்திச்சிறப்புடனும் அமைகின்றன. ஈற்றிலமையும் பெரியாழ்வாரின் இறையுணர்வு ஏனைய ஆழ்வார் பிரபந்தங்களில் அமையுமாற்றைவிட இறைத்தன்மையை இனிது விளக்குவன. சீதைக்கு அனுமன் அடையாளம் உரைத்தமை என அமையும் திருமொழி இராமாயண நிகழ்ச்சிகளை வரிசைப்படுத்தி உரைப்பதில் முதன்மை யானது.

பாசுரங்களை அமைப்பதிலும் பெரியாழ்வார் பல்வகையான சந்தங்களைக் கையாளுகின்றார். கலித்தாழிசை, கலித்துறை, கலி விருத்தம், அறுசீர், எழுசீர், எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தங்கள் முதலியனவும், தரவு கொச்சகக் கலிப்பாவும் இடம் பெற்றுள்ளன. ஒரே பிரபந்தத்தில் பலவகையான பாவினங்களைக் கையாளும் சிறப்புப் பெரியாழ்வாருக்கு மட்டுமே உரியது. பாசுரங்கள் பல்வகையான சந்தங்களால் அமைந் துள்ளதால் அவை இனிமை பயப்பனவாய் அமைந்து பெரியாழ்வார் பெரும் புலவர் வரிசையில் சிறப்பிடம் பெற வழி வகுக்குகின்றன.

பாசுரங்களில் எளிய நடையை அமைத்து இலக்கியத்தைச் சிறப்பிக்கின்ற தன்மையும் பெரியாழ்வாரிடம் அமைகின்றது. ஆழ்வார் தம் இலக்கியத்தில் வட்டாரச் சொற்களையும், வழக்குச் சொற்களையும் இடம்பெறச் செய்து இலக்கியத்தை எளிமையாக்குகின்றார். கண்ணன் பிள்ளைப்பருவ செயல்களைப் பாடும்போது அவை மிகுதியும் பயன் படுத்தப்பட்டிருப்பது நோக்கத்தக்கது.

மேற்கூறிய கருத்துக்களால் வைணவ சமய அடிப்படையிலும், இலக்கிய அடிப்படையிலும் பெரியாழ்வார் பாசுரங்கள் சிறப்பிடம் பெறுகின்றன என்பது விளங்கும்.

வடமொழியிலும் பெரியாழ்வார் புலமை உடையவராகத் திகழுகின்றார். கல்பசூத்திரம் எனும் நூல் அவரால் எழுதப்பட்டதாக அறியப்படுகின்றது.

## குறிப்புகள்

1. மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு (13-ஆம் நூற்றாண்டு). ப.317
2. மேற்படி. ப.318
3. மு. இராகவையங்கார், ஆழ்வார்கள் காலநிலை, ப.48
4. மேற்படி. ப.66
5. மேற்படி. பக். 81-82
6. T.A. Gopinatha Rao, History of Sri Vaishnavism p.23
7. டாக்டர். மா. இராசமாணிக்கனார், ஆழ்வார்கள் காலம், நாலாயிர திவ்வியப் பிரபந்தம், ப.43.
8. மேற்படி
9. Dr. N. Subbu Reddiar, Religion and Philosophy of Nalairam, with Special Reference to Nammalvar, P. 191-192
10. உபதேச ரத்தின மாலை பா.17



2

# திருப்பல்லாண்டு

இப்பூவுலகில் மாதவனின் ஆணையால் வந்து அவதரித்தவர்கள் ஆழ்வார்கள். அவர்களுள் பெரியாழ்வாருக்கு வைணவத்தில் சிறப்பிடம் பெறவைத்தது திருப்பல்லாண்டு. வைணவப் பூங்காவில் வாடாதமலராய் இருந்து நல்மணம் வீசும் சிறப்பு இவருக்குரியது. நந்தவனத்தொண்டில் ஈடுபட்டு மாயோனின் அருட்திறத்துக்கு ஆளான ஆழ்வார்களில் இருவர் இடம் பெறுவர். ஒருவர் பெரியாழ்வார், மற்றவர் தொண்டரடிப் பொடியாழ்வார். தொண்டரடிப்பொடியாழ்வார் பூமாலையொடு பாமலையாகிய திருமாலையையும், திருப்பள்ளி எழுச்சியையும் பாடி மாயோனைப் போற்றினார். பெரியாழ்வார் பூமாலை, பாமாலைகளொடு சூடிக்கொடுத்த சுடர்க்கொடியையும் அளித்துப் பேறுபெற்றார். ஆழ்வாரின் பாமாலை திருப்பல்லாண்டு, பெரியாழ்வார் திருமொழி என்பன.

வையமளந்தானை வாழ்த்திப்பாடும் பாசுரங்களைக்கொண்டது திருப்பல்லாண்டு. மகன் பெருமையைக் கேட்ட தாய் பேரவாவால், அவன் பெருமையை அடையக் காரணமாக இருக்கும் நிகழ்ச்சியைக் காண விரும்பியது போல் திருமாலும் பரதத்துவ நிர்ணயம் செய்த பெரியாழ்வார் முன் கருட வாகனனாய் வந்து தோன்றினான். மாயோன் பேரெழில் கண்ட பட்டர்பிரான் இப்பேரெழில் உடைய பெருமானுக்குக் கண்ணெச்சில் யாதாகிலும் நேருமோ என்றஞ்சி யானை மணிகளைத் தாளமாகக் கொண்டு பல்லாண்டு பாடினார். திருமங்கை யின் வாழ்வில் மாலவன் மணவாளனாய் வந்து ஆட்கொண்டருளினான். தொண்டரடிப்பொடிக்கு அவரறியாது வந்து அருள் கொடை நல்கினான். பெரியாழ்வாருக்கோ கருடவாகனனாய் வந்து அருளினான். இதுவே பெரியாழ்வாரின் பெருமைக்கான காரணங்களில் சிறந்ததாய்த் திகழ்கின்றது. மாதவன் அருட்காட்சி நல்கியபோது பெரியாழ்வார் மங்களாசாசனம் செய்த திருபல்லாண்டு அவர் வைணவ சமயத்தில் சிறப்பிடம் பெற வழிவகுத்தது. ஆழ்வார் அனைவருள்ளும் பட்டர்பிரானைப் பெரியவராக்கியது இத்திருப்பல்லாண்டு.

*மங்களா சாசனத்தில் மற்றுள்ள ஆழ்வார்கள்*
*தங்களார் வத்தளவு தானன்றிப் - பொங்கும்*
*பரிவாலே வில்லி புத்தூர்ப் பட்டர்பிரான் பெற்றான்*
*பெரியாழ்வார் என்னும் பெயர்*

(உபதேசரத்தினமாலை . பா. 18)

எனும் பாடல் இறைவன்பால் பெரியாழ்வார் கொண்ட பரிவால் அவர் பேறு பெற்றதை விளக்கிக்காட்டும்.

நம்மாழ்வார் பாட அவருடைய பாடல்கள் நூற்றெட்டுத் திவ்விய தேசப்பெருமான்களாலும் கேட்கப் பட்டதாகச் செய்தி உண்டு. இங்குத் திருமால் கருடவாகனாய் வந்தது அதனை ஒத்தது. மேலும் அதற்குச் சிறப்பினைத் தரக்கூடிய வேறு ஒன்றும் உண்டு.

நாலாயிர திவ்வியப் பிரபந்தப் பாசுரங்களனைத்தும் மால் கேட்டு மகிழும் வண்ணம் அமைந்தனவே. திருமாலே சேவை சாதித்திருக்கும் போது அவனுடன் ஏனையோரும் கேட்டு மகிழும் வண்ணம் அமைந்தது இத்திருபல்லாண்டு ஒன்றே. நம்மாழ்வார்,

*கூரார் ஆழி வெண்சங் கேந்திக் கொடி யேன்பால்*
*வாராய் ஒருநாள் மண்ணும் விண்ணும் மகிழவே*

(திருவாய்மொழி. 6.9.1.)

எனப் பாடுகின்றார். இத்தகையபேறு பெரியாழ்வாருக்குக் கிடைத்தது. மாலின் எழில் கண்ட பெரியாழ்வார்,

*வடிவார் சோதி வலத்துறை யுஞ்சுட ராழியும் பல்லாண்டு*
*படைபோர் புக்கு முழங்கும்அப் பாஞ்ச சன்னியமும் பல்லாண்டே*

(திருப்பல்லாண்டு . பா. 2.)

என்று பாடுகின்ற சிறப்பு அவருக்குக் கிடைத்த பேற்றினை விளக்கும்.

இறைவனை வாழ்த்திப்பாடும் இலக்கிய வகையில் இது முதன்மை யானது. இலக்கிய வகையில் முன்பு அரசர்களுக்கு அமைந்த யாண்டுநிலை என்பதே பின்பு கடவுளருக்குப் பாடப்பெறும் திருப் பல்லாண்டாயிற்று[1]. பத்தி செய்யும் முறைகளில் இத்திருப்பல்லாண்டு சிறப்பிடம் பெறுகிறது. நீடுவாழ்க என்று வாழ்த்துவது பல்லாண்டு பாடுதல் என்று பெயர் பெற்றிருக்கிறது. அகப்பொருளில், பிரிந்து சென்ற தோழியர் தலைவியை மீண்டும் வந்து கூடும்போது 'போற்றும் பல்லாண்டும் கூறுவர்' என இறையனார் களவியல் உரை கூறுகின்றது. பல்லாண்டு பாடுவதைத் திருவாரூர் பதிகத்தில் அப்பர் குறிப்பிடுகின்றார்[2]. ஆதலின் வாழ்த்துதல் எனும் பொருளில் பண்டு தொட்டுப் பல்லாண்டு கூறுதல் இருந்து

வந்திருக்கிறது. சைவ சமயத்திலும் ஒரு திருப்பல்லாண்டு உண்டு. அது ஒன்பதாம் திருமுறையில் அமைகிறது. பெரியாழ்வாரின் திருப்பல்லாண்டு போன்று சைவ சமய வழிபாட்டு மரபில் அதுவும் இன்றியமையாத இடம் பெற்றுள்ளது.

வைணவ சமயத்தில் பன்னிரண்டு எனும் எண் சிறப்பிடம் பெறுகின்றது. திருமாலின் திருநாமங்கள் பன்னிரண்டு; ஆழ்வார்கள் பன்னிருவர்; அதைப் போன்று திருப்பல்லாண்டில் அமைந்துள்ள திருப்பாசுரங்களும் பன்னிரண்டு. இவை வைணவ சமயக் கருத்துக்களின் சாரமாகக் கொள்ளப்படுகின்றன. இவ்வகையில் அமையும் சிறப்புக்களும் திருப்பல்லாண்டிற்குப் பக்தி முறையில் பேரிடம் பெற வழிவகுத்தன.

திவ்வியப் பிரபந்தத்தில் முதல் தொடரால் பெயர் பெற்றவையான அமையும் பிரபந்தங்கள் மூன்று. (1) திருப்பல்லாண்டு, (2) அமலனாதிப் பிரான் பதிகம், (3) கண்ணிநுண் சிறுத்தாம்பு என்பன அவை. இவற்றில் முதலாவதாக அமைவது திருப்பல்லாண்டு. கோவில்களில் முதன்மையாக ஓதப்பெறும் சிறப்பு ஏனைய பிரபந்தங்களுக்கு இல்லையென்பது இங்கு நோக்கத்தக்கது.

ஆழ்வார் பன்னிருவரில் மாயோனுக்கு அணுக்கமாக இருந்து பாசுரங்கள் பாடியவர்களில் பெரியாழ்வாரும், தொண்டரடிப்பொடியாழ் வாரும் இன்றியமையாதவர்கள். தொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலைத் துயில்விப்பதற்குத் திருமாலையையும், துயிலெழுப்புவதற்குத் திருப்பள்ளியெழுச்சியையும் பாடினார்.

'அரங்கத்தம் மாபள்ளி யெழுந்தரு ளாயே' என ஒவ்வொரு பாசுரத்திலும் ஈற்றில் அமையும் தொடர் அதனை விளக்கும். இதனினும் வேறுபட்டதாகத் திருப்பல்லாண்டு அமைகின்றது. பெரியாழ்வார் தம்மிற் சிறியாரை வாழ்த்துதல் போன்று பிரபந்தம் அமைக்கின்றார். அவ்வகையில் அவருடைய பரிவு வெளிப்படுவதாகக் கொள்வர்.

வேதாந்த மதங்களில் பக்தி சிறப்பிடம் பெறுகின்றது. பக்திசெய்யும் முறையில் (1) இறைவனைத் துதித்தல், (2) இறைவனின் திருநாமம் போற்றல், (3) எழுந்தருளியுள்ள தலங்களைக் தரிசித்தல், (4) இறைவனை வாழ்த்துதல் முதலான நான்கு நிலைகளைக் காணலாம். சைவ மரபில்,

***நமச்சிவாய வாழ்க நாதன்தாள் வாழ்க***

(சிவபுராணம்.1)

எனப் பாடுகின்றார் மணிவாசகர். இதுவன்றிப் போற்றி என இறைவனை

இறைஞ்சி நிற்கும் நிலையும் வைதிக சமயங்களில் மேற்கொள்ளப் பட்டிருக்கிறது.

*போற்றி என்றே கைகளாரத் தொழுதுசொன் மாலைகள்*
*ஏற்ற நோற்றேற்கு இனியென்னகுறை யெழுமையுமே*

( திருவாய்மொழி.4.5.1.)

என்றுரைக்கின்றார் நம்மாழ்வார். வெல்க எனத் துதித்துப் போற்றும் மரபும் காணப்படுகிறது. மாணிக்கவாசகர்,

*வேகம் கெடுத்தாண்ட வேந்த னடி வெல்க*

(சிவபுராணம் 6.6)

எனப் பாடுகிறார். இவ்வாறு அமையும் வாழ்க, போற்றி, வெல்க எனும் சொற்களைக் காட்டிலும் பல்லாண்டு எனும் சொல் பாடப்பட்ட நோக்கத்தையும், பொருளையும், காலத்தினையும் நோக்க மேன்மேலும் சிறப்புடையதாய் அமைகிறது. திருப்பல்லாண்டில் பெரியாழ்வார் காட்டும் உணர்வு எளிதானது. தான் அடைந்த பேற்றினை இவ்வையம் பெற வேண்டும்; எங்கும் பரந்திருக்கும் பரம்பொருளின் அருட்கொடை அனைவர்க்கும் கிடைக்க வேண்டும் என்று அவர் கொண்ட பேரவா திருப் பல்லாண்டில் தெளிவாகின்றது. முதலிரு பாசுரங்களைத் தவிர ஏனைய பத்துப் பாசுரங்களிலும் 'கூறுமினே' 'கூறுதுமே' என மற்றவரைப் பல்லாண்டொலி எழுப்பச் சொல்கின்றார். இதில் அவருடைய பக்திப் பெருக்கு வெளியாகின்றது. மேலும் தானள்ளிப் பருகிய அமுதத்தினை அனைவரும் அள்ளிப் பருகிப் பேரின்பப் பெருவாழ்வு பெறவேண்டும் என்ற எண்ணமும் தெளிவாகின்றது.

திருமந்திரத்தின் தெளிபொருளைக்கூறி நரகம் புகவும் தயங்காது இருந்தார் இராமாநுசர். தாம் கண்ட பெருமாளின் உருவைக்காட்டி அனைவரும் ஆனந்தக் களிப்படையச் செய்தார் பெரியாழ்வார். இந்நிகழ்ச்சியே எம்பெருமானாரின் செயலுக்குக் காரணமாய் இருந்தது எனக்கொள்ளின் அது தவறாகாது.

பண்டை வேதத்தின் ஆரம்பத்திலும் முடிவிலும் உச்சரிக்கப் பெறுவது ஓங்காரமாகிய பிரணவமாகும். இப்பிரணவம் வேதத்தின் சாரமாகும். ஓம் எனும் அப்பிரணவத்தில் மூவேழுத்துக்கள் அடங்கி உள. அகரம், உகரம், மகரம் மூன்றும் மூன்று வேதங்களில் இருந்து எடுக்கப்பட்டவை. இருக்கு, எசுர், சாமம், ஆகிய மூன்று வேதங்களையும்

ஆய்ந்து அவற்றின் உயிர்நிலைகளான மூன்று எழுத்தினையும் எடுத்து ஒன்று சேர்த்ததே இப்பிரணவமாகும். திராவிட வேதமாகிய திவ்வியப் பிரபந்தத்திற்கு இப்பல்லாண்டு பிரணவமாக அமைந்துள்ளது. இதனைக்,

*கோதிலவாம் ஆழ்வார்கள் கூறுகலைக் கெல்லாம்*
*ஆதித்திருப் பல்லாண்டு ஆனதுவும் - வேதத்துக்கு*
*ஓமெனும் அதுபோல் உள்ளதுக்கெல் லாம்சுருக்காய்*
*தான்மங் கலமாத லால்*

(உபதேச ரத்தினமாலை. பா. 19)

என உரைக்கின்றார் மணவாள மாமுனிகள் .

வைணவ மரபில் மறைபொருள்கள் மூன்று எனக் கொள்ளப் பெறும். இவை மோட்சமாகிய முட்சுக்குப் படியாய்த் திகழ்வன இவற்றின் உண்மையை உணர்ந்தால்தான் பரமபதம் கிடைக்கும். இதனை விளக்குமுகமாக அமைந்துள்ளது திவ்வியப் பிரபந்தம். திவ்வியப்பிரபந்தக் கருத்தினைப் பன்னிரு பாடல்களில் பெரியாழ்வார் கூறிவிடுகின்றார். இவ்வகையிலும் வேதத்தின் சாரமாகத் திருப்பல்லாண்டு கொள்ளப் பெறுகின்றது.

### *சீவனும் ஈசுவரனும்*

மங்களாசாசனத்தில் பெரியாழ்வாருக்கு ஏற்றம் உரைக்கப் பெறுகின்றது. இம்மங்களாசாசனத்தின் வழி சீவனுக்கும், ஈசுவரனுக் குமுள்ள தொடர்பு விளக்கப்பெறுகின்றது. திருமாலை நல்லாச் சாரியராகக் கொள்ளுதல் வைணவ மரபு. ஆச்சாரியனின் நல்லருள் கிடைப்பதற்கு வழிகளைச் சீடன் மேற்கொள்ளுதல் வேண்டும். அதில் மங்களா சாசனமும் ஒன்றே. அது தினசரியில் இருத்தல் இன்றியமையாததாகும். மங்களாசாசனம் பாடுதல் இறைவனின் சொரூப நிலைக்கு வேறானதாகத் தோன்றும். ஆழ்ந்து நோக்கி அக்கருத்து தவறு என்பது விளங்கும்.

பிரணவத்தால் திருமாலே காப்பாற்றுகின்றவனாகவும், தான் அவனால் காப்பாற்றப் படுகின்றவனாகவும் உணர்வான் சீவன். தனக்கு விருப்பமில்லாதவற்றை நீக்குதல் முதலானவற்றுக்குத் திருமாலே பொருளாவான் எனச் சீவன் அறிவதால், காப்பவன், காக்கப்படும் பொருள் எனும் இரண்டும் சீவனால் நன்கு உணரப்பெறும். அப்போது இரண்டிற்கு முரிய நிலைகள் மாறாதிருக்கும். திருமாலின் பேரழகினையும், மென்மையையும் காணும் சீவன், அஞ்ச வேண்டாத அந்நிலையில்

அவனுடைய தூய தன்மையை நினைப்பதற்கு ஆற்றல் இல்லாது மனம் ஈசுவரனைக் காப்பாற்ற வழிதேடும். அப்போது மேற்கூறிய நிலைமாறித் தன்னைக் காப்பவனாகவும் ஈசுவரனைக் காப்பாற்றப்படும் பொருளாகவும் கொள்ளும் நிலை ஏற்படும்[3]. இத்தகுநிலை பெரியாழ்வாரிடம் காணப்பெறுகின்றது.

### *சீவனுக்குண்டாகும் சிறப்பு*

பிரணவத்தின் பொருளுணர்ந்த சீவன் திருமாலின் சொரூப நிலையை நினைத்தல் வேண்டும். அப்போதே அவனைத் தனக்கு விருப்பமில்லாதவற்றை நீக்குபவனாகவும், ஆற்றல் அருளுபவனாகவும் உணர்வான் சீவன். இத்தகு நிலையால் அறிவில்லாதவனும், ஆற்றல் இல்லாதவனும், தகுதியில்லாதவனுமாகிய சீவன் தன்னைக் காத்துக் கொள்ளும் நிலை ஏற்படும். அதனால் இறைவன் திருநாமத்தாலே தன்னைத்தான் காத்துக் கொண்டு, அவனுடைய மென்மையையும், அழகையும் நினைத்தபோது இறைவனுடைய எல்லையில்லாத ஆற்றலை மறந்து குழைச்சரக்காக நினைத்துத் திருமாலைக் காப்பாற்றுபவனாகக் கொண்டு மங்காளசாசனம் செய்யப் படுகின்றது[4]. இதனால் சீவனுக்குரிய முதிர்ச்சிநிலை உருவாகிப் பரமபதம் கிடைக்க வழி ஏற்படுகின்றது.

இவ்வாறு சீவனுக்குரிய மங்களாசாசனம் பெரியாழ்வாருக்கு எப்போதும் உளதாகக் கொள்ளப்பெறுகின்றது. வைரத்தை உருக்கச் செய்யும், ஆண்களைப் பெண்ணுடை உடுத்தச் செய்யும் பேரெழில் கொண்டவன் திருமால். அத்தகு இறைவனின் வடிவத்தை நினைத்தாலே மேன்மேலும் அனுபவிக்க வேண்டும் எனும் எண்ணம் எழும். திருமாலின் எழில் நிலை அருகியே கிடைக்கப்பெறும். ஆழ்வார்கள் அனைவரும் அத்தகைய நிலையைத்தான் அனுபவித்தார்கள். ஆனால் பெரியாழ் வாரோ, திருமாலின் எழில் நலம் கண்டபோது அப்பேரெழில் பெருமானுக்குத் துன்பம் வருமோ என்ற ஐயம் கொண்டு அன்பு வயப்பட்டவராக மங்களாசாசனம் செய்கிறார். அதனால்தான் மங்களாசாசனத்தில் மற்றுள்ள ஆழ்வார்களைக் காட்டிலும் சிறந்து விளங்குகின்றார் பெரியாழ்வார்.

அனுபவத்தில் ஈடுபட்டிருக்கும் ஆழ்வார்களின் கண்ணையும் கருத்தையும், ஈர்த்து ஆழங்காற்படுத்தும் இயல்புடையது திருமாலின் பேரழகு. அதற்கு மேன்மேலும் காப்பு இடும்படியாக மங்களாசானத்தில் ஈடுபட்ட பெரியாழ்வாருக்கு அதுவே காரணமாயிருக்கிறது.

## *மற்றைய ஆழ்வார்களும் பெரியாழ்வாரும்*

மற்றைய ஆழ்வார்கள் பகவானுடைய அனுபவத்தில் ஈடுபட்டவராய் இருந்து அவ்வனுபவம் நீங்கும்போது அவர்களிடத்து ஆற்றாமை கரைபுரண்டு ஓடும். அதற்குக் காரணம் இறைவனின் பேரெழிலை இன்னும் அனுபவிக்க வேண்டும் என்ற எண்ணம். பெரியாழ்வாரோ பாகவதர்களை அழைத்து, அவர்களுக்கும் மங்களாசாசனம் செய்கின்றார். இதுவே அவரை மற்ற ஆழ்வார் களிடமிருந்து உயர்த்திக்காட்டுகிறது.

## *திருப்பல்லாண்டின் நோக்கம்*

இறைவனின் மென்மைக் குணத்தைக் கண்டு கலங்கி அதற்கு என்னவருமோ என்று அஞ்சும் பெரியாழ்வாரின் அச்சத்தைப் போக்கி மல்லர்களைத் தனக்கு வருத்தம் சிறிதுமின்றி அழித்த தோள் வலியைக் காட்டினான் திருமால். அதனைச் சிறிதும் மதியாது அசுரர்களும், இராக்கதர்களும் கலந்து போரில் புகின் என்னாவது என்று அதற்கு அஞ்சி அத்தோள்களுக்கு மங்களாசாசனம் செய்வது முதல் நோக்கம்.

உண்டான அமங்கலம் நீங்கவும், இல்லாத மங்கலம் உண்டாகவும் அருள் செய்யும் பெரிய பிராட்டியார், தம்மைப் பிரியமாட்டாதே இருக்க தமக்கு வரும் அமங்கலம் உண்டோ எனவும், உமக்கும் துன்பம் வராது எனவும் திருமால் தன்னுடன் திருமகளுக்குரிய தொடர்பினைக் காட்டினான். இத்தகைய சேர்த்திக்கு இடர்வரின் என்ன செய்வது என்றஞ்சிப் பெரியாழ்வார் பெரியபிராட்டிக்கு மங்களா சாசனம் செய்கின்றார்.

ஆழ்வாருக்கு இவ்வச்சம் மேலும் வளர்ந்தது. இத்தொடர்புக்குக் கல்மதில் இட்டாற்போல் ஆழ்வார்களும் பாகவதர்களும் அமைந் துள்ளார்கள் எனத் தன்னைச் சுற்றியுள்ள சரணார்த்திகளைக் காட்டிப் பல்லாண்டு பாடுகின்றார். அவர்களுக்கும் தீங்குவரின் யாது செய்வது எனும் நோக்கத்தில் சுடராழியையும் பாஞ்ச சன்னியத்தையும் கூறிப் பல்லாண்டு பாடுகின்றார்.

## *பிரதிகூலரை அனுகூலராக்கியது*

வேறு பயன்களை விரும்பாமையால் அநுகூலரான பகவத் சரணார்த்திகளை மங்களாசாசனத்திற்குத் துணையாகக் கூட்டிக் கொண்டதால் மட்டும் ஆழ்வார் மனம் அமைதிபெறவில்லை. உலகு புரக்கும் கடவுளை அனைவரும் உணர வேண்டும் என்ற எண்ணம் கொண்டவர் ஆழ்வார். அதனால் வேறு பயன்களைக் கருதுபவர்களான

கேவலர்களையும் செல்வத்தையே விரும்புபவர்களையும் மங்களா சாசனத்திற்கு அநுகூலராக்கிக் கொள்ள நினைக்கிறார்.

உடைமைப்பொருளை உள்ளவாறு உணரும் ஞானமும், பகவானையே பொருளாகக் கொண்ட பக்தியும், பகவானுக்குப் புறம்பாய் இருக்கும் பொருள்களில் வரும் விரக்தியும் உடையவர்கள் அநுகூலராவர். ஆதலால் ஒன்று தோன்றும், மற்றவை மறைந்து தோன்றும். இவர்களின் வடிவு கண்டவுடனேயே இவற்றுடன் இவர்களுக்குரிய தொடர்பு விளங்கும். பிரதிகூலர்கள் இவர்களிலிருந்து வேறுபட்டவர்கள். அநுகூலருக்கும், பிரதிகூலருக்குரிய வேறுபாடு கீழ்க்காணுமாறு அமைகிறது.[5]

| *அநுகூலர்* | *பிரதிகூலர்* |
|---|---|
| 1) பிரணவத்தில் மகரத்தால் ஆன்மா உடம்பிற்கு வேறுபட்டிருக்கும் தன்மையை உணர்ந்தவர்கள். | ஞானம் முதலானவற்றைக் கெடுப்பவர்கள். காணப்பெறும் இவ்வுடலுக்கு அப்பால் ஓரான்மா உண்டென்றுணராமல் உடலில் நான் என்றும் அகங்காரமேற்றி அதனையே ஆன்மாவாய் விரும்புகின்றவர்கள். |
| 2) ஆன்மா இறைவனுக்கு அடிமைப் பட்டிருக்கும் தன்மையை யுணர்ந்தவர்கள். | உடலுக்கு வேறான ஆன்மாவை அறிந்திருந்தும் அதனைத் தனக்குரியதாய் நினைத்து ஒரு பொருளிலும் சேடத்துவத்திற்கு இசையாதவர்கள். இவர்கள் **சுவதந்திரர்** எனப்பெறுவர். |
| 3) உகரத்தால் ஆன்மா இறைவனுக்கு அன்றிப் பிறருக்கு அடிமைப்படாத நிலையில் இருப்பது என்பதை உணர்ந்தவர்கள். | சேடத்துவத்தை இசைந்திருந்தும் அதனை அடைதற்குத் தகுதி இல்லாத மீற்றைய பொருள்களில் பயன் படுத்துபவர்கள். இவர்கள் ***அந்ய சேட பூதர்* எனப்படுவர்.** |
| 4. நம பதத்தால் ஆன்மா ஒருவனையே உபாயமாகக் கொண்டிருக்கும் தன்மையை உணர்ந்தவர்கள் | பெருமையுடைய பெருமாளின் தன்மை பற்றிய சேடத்துவத்தை உடையவராய் இருந்தும், அவனைப் பற்ற உபாயம், அவனுடைய திருவடித் தாமரைகளைச் சரணம் செய்தல் |

| | |
|---|---|
| | என்றிராமல் கர்மம் ஞானம் முதலானவற்றை உபாயமாக நினைப்பவர்கள் இவர்கள் **உபயாந்திர நிட்டர்கள்** எனப் படுவர். |
| 5. நாராயண பதத்தால் ஆன்மா இறைவன் ஒருவனையே இனிய வனாகக் கொண்டிருக்கும் தன்மையை உணர்ந்தவர்கள். | திருமாலின் திருவடித் தாமரை யைப் பற்றி இருந்தும், தாங்கள் செய்த பிரபத்தியை உபாயமாக நினைத்தும், கைங்கர்யத்தைத் தங்கட்கு இனியதாக நினைத்தும் இருப்பவர்கள். இவர்கள் **சுவப்பிர யோசனப் பரர்** எனப் படுவர். |

இவற்றில் திருமாலின் திறத்தை முழுமையாக உணராத பிரதிகூலரையும் அனுகூலராக்கப் பெரியாழ்வார் பல்லாண்டு பாடுகின்றார்.

முற்காலத்தில் செய்த செயல்களைப் பிற்காலத்தில் எண்ணிப் பாடுதல் நோக்கங்களில் ஒன்றாக அமைகிறது. ஆதலின் அவதாரங்களில் நிகழ்த்தப்பட்ட செயல்களுக்கும் பல்லாண்டு கூறி மங்களாசாசனம் செய்யப்பெறுகின்றது.

## *திருப்பல்லாண்டின் நுவல் பொருள்*

திருமந்திரம், துவயம், சரமசுலோகம் எனும் மூன்று மறைபொருள்களும் வைணவத்தின் தத்துவங்களாகும். இவற்றுள் திருமந்திரம் 'ஓம் நமோ நாராயணாய' என்று அமையும். 'ஓம்' என்பதைத் திருமந்திரப்பகுதியும், 'நம' என்பதைத் துவயப்பகுதியும், நாராயணாய என்பதைச் சரமசுலோகப் பகுதியும் விரித்துரைக்கும். இத்தகு நோக்கில் அமைந்துள்ளது திருப்பல்லாண்டு.

***பல்லாண்டு பல்லாண்டு பல்லா யிரத்தாண்டு பலகோடி நூறாயிரம்***
***மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா வுன் சேவடி செவ்வித்திரு காப்பு***

(திருப்பல்லாண்டு. பா.1)

என அமையும் முதற்பாசுரம் ஏனைய திவ்வியப்பிரபந்த பாசுரங்களுக்கு முகவுரையாகக் கொள்ளப்பெறுவது.

'மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா' என்பதும் நின்சேவடி என்பதும் திருமாலுக்கு என்றும் அருளும் புனிதத் திருவடிவம் உண்டென்பதை விளக்குகின்றன. மேலும் அவனுடைய, இயல்பையும்

வீரம் பொருந்திய, அழகுடைய இளமையான, எளிமையான கல்யாண குணங்களையும் அவை உணர்த்துகின்றன. நின் சேவடிச் செவ்வித்திருக் காப்பு என்பது அவனுடைய திருவடிகளிலே இடை விடாத கைங்கர்யத்தை உணர்த்துகிறது. அடியோமொடும் என்பதால் சேதனர்கள் பலர் என்பதும் அவர்கள் நித்யமானவர்கள் என்பதும் பெறப்பட்டது. பின்னர்த் திருமகள், நிலமகள் சேர்த்தியும் சங்கு சக்கர ஆயுதங்களோடு உணர்த்தப்பட்டன.

முதலிரு பாசுரங்களும் மூன்று மறை பொருள்களையும் உணர்த்தி விடுவதாய்க் கொள்வர். அடியோமொடும் என்பது பிரணவமாகிய ஓம் என்னும் சொல்லிற்கும் பல்லாண்டு என்பது நம என்னும் சொல்லிற்கும் பொருளைத் தெரிவிக்கின்றன. முதல் பாட்டில் உள்ள 'மல்லாண்ட திண்தோள்' என்பது விக்கிரகயோகத்தையும், சௌந்தர்ய வித்யாதி ஞானபோகத்தையும், இரண்டாம் பாட்டு விபூதி யோகத்தையும் சொல்வதால் நாராயண சப்தப்பொருள் விளக்கப் பெறுகிறது; 'உன் சேவடி செவ்வித்திருக்காப்பு' என்பது ஆர்த்தியில் பிரார்த்திக்கிற அர்த்தமும் சொல்கிறது என்பர்[6].

முதலிரு பாசுரங்களுமே விசிட்டாத்வைத தத்துவ விளக்கப் பொருளாக, வேதத்தின் சாரமாகத் திகழ்வது கண்கூடு. இச்சிறப்பாலும் அரசவையில் பரம்பொருள் தத்துவம் கூறிய தன்மையாலும் பெரியாழ்வார் விசிட்டாத்வைத தத்துவ விளக்கப் படைப்பாளர்களில் ஒருவராகத் திகழ்ந்து இராமாநுசருக்கும் வழி காட்டினார் எனக் கொள்ளலாம்.

பக்தி செய்கின்ற பான்மையை இத்திருப்பல்லாண்டு விளக்கி நிற்கும் மாட்சி மிக்க சிறப்புடைய ஒன்றாகும். முன்கூறிய இரு பாசுரங்களன்றி, ஏனைய பத்துப் பாசுரங்களும், உலகிலுள்ள பக்தர்களில் வகையைச்சுட்டி அவர்கள் உய்வதற்கான வழியைக் கூறுகின்றன. பக்தி செய்யும் வகையினர் நால்வர். அந்நால்வகையினருமே இறையருளை வேண்டுபவர்களேயாவர். அதனைக் கண்ணன் பகவத் கீதையில் குறிப்பிடுகின்றான்.

> ***செல்வத்தை இழந்து துக்கிப்பன்; செல்வத்தினையே அடைய விரும்புகின்றவன்; ஆத்மாவை அடைய விரும்புகின்றவன்; என்னையே அடைய விரும்புகின்றவனான ஞானி எனப்படும் நால்வகைப் பாக்கியசாலிகளும் என்னிடம் பக்தி செய்கிறார்கள்*** ...
>
> (பகவத் கீதை. அத். 7. சுலோ.10)

என அமையும் பகவத் கீதையின் கூற்று அதனை விளக்கும்.

இவர்களில் இழந்த செல்வத்தை நினைத்து துக்கிப்பவர்களும், பெருஞ் செல்வத்தையே நினைத்துப் பக்தி செய்பவர்களுமாகிய இருவரையும் இணைத்துச் செல்வத்தையே விரும்புகின்றவர்கள் எனக் கொள்ளலாம். இவர்கள் முதல் வகையினர். ஆத்மாவை அடைய விரும்பு கின்றவர்கள் இரண்டாம் வகையினர். எல்லாவற்றுக்கும் மேலான மாலின் கலியாண குணங்களில் ஈடுபட்டுப் பகவானிடம் பக்தி செலுத்தும் பகவத் சரணார்த்திகள் மூன்றாம் வகையினர். இவ்வாறு கண்ணன் வகுத் துரைத்த நால்வகையினரையும், மூவகையினராகப் பகுத்து அவர்களை மங்களாசாசனம் செய்ய அழைக்கின்றார் பெரியாழ்வார்.

மூவகைப் பக்தருள்ளும் தன்னையொத்த பகவத் சரணார்த்திகளை முதலில் அழைக்கின்றார் பெரியாழ்வார். 'வாழாட் பட்டு நின்றீர் உள்ளீரேல்' எனத் தொடங்கும் பாசுரம் இதனை விளக்குகின்றது. இறைவனையே உபாயமாகவும், உபேயமாகவும் கருதுபவர்கள் பகவத் சரணார்த்திகள். மாதவனிடம் மற்றொரு பயனும் எதிர்பாராத பண்பினர். முக்தியின் பயனை இவ்வுடலை விட்ட ஆன்மாவால் மட்டுமே அனுபவிக்க முடியும். ஆனால் பக்தியின் பயனையோ, இவ்வுடலுடன் கூடிய ஆன்மா வால் அனுபவிக்க இயலும். இது தென்னை வைத்தவன் அதன் பயனைத் தானே அனுபவிப்பது போன்றது. இத்தகு நிலையில் பெரியாழ்வார் பக்தியில் கடைவாயிலில் நின்று ஏனையோரையும் அழைக்கும் சிறப்பைக் காண முடிகின்றது.

திருமாலை வழிபடும் முறைகளில் அர்ச்சாவடிவங்களும் ஒன்று. அவதாரக் காலங்களில் வாழாதாரும், அந்தர்யாமியாக உணர இயலா தாரும் பக்தி செய்ய வழி வகுப்பது இவ்வடிவங்கள். இவ்வர்ச்சாவதார உற்சவநாளில் அங்குரார்ப்பணத்திற்கு மண் சுமத்தலும், திருமணத்திற்கு அபிமானியாக இருப்பதுமாகிய இவ்விரு முறைகளும் பக்தி செய்யும் வழிகளில் ஒன்று.

அடுத்தமையும் பாசுரத்தில் பெரியாழ்வார் ஆத்மானுபவத்தை அடைய விரும்புபவர்களை அழைக்கின்றார். பகவத்சரணார்த்திகள் இப்பிறப்பிலேயே பயனடைவர். செல்வத்தை விரும்புகிறவர்கள் அடுத்த பிறப்பிலாவது பயனடைவர். ஆனால் ஆத்மானுபவத்தை விரும்பு கின்றவர்கள் ஒரு போதும் இறைவனை அடையவே இயலாது. அதனை எண்ணி அவர்களை அழைக்கின்றார் ஆழ்வார்.

சஞ்சிதம், பிராரத்துவம்,ஆகாமியம் எனும் மூவினைகளுள் இவ்வாத்மா சஞ்சிதப்பயனை அடைந்து, பிராரத்துவ வினைப்பயனை நுகர்ந்து ஆகாமியமாகிய எதிர்கால வினைப்பயனற்று பரமபதத்திற்கு

வெளியில் ஆத்மானுபவத்தை அனுபவித்துக் கொண்டிருப்பவர்கள் கைவல்யார்த்திகளாவர். ஆத்மானுபவத்தை அடைய ஊழிஊழி தோறும் தவமிருக்க வேண்டும். ஐம்புலனடக்கித் தேகத்தை ஒடுக்கி ஆத்ம தியானம் செய்தல் வேண்டும். ஆனால் பரமபதத்தை அடைவது அதனினும் எளிது. அதனை 'ஏடு நிலத்தில் இடுவதன் முன்னம்' எனும் பாசுரம் விளக்குகின்றது.

கைவல்யார்த்திகள், சரணார்த்திகளாகத் திகழ ஆழ்வார் கூறும் வழிகள் இரண்டு. (1) கூடும் மனமுடையவராய் வரம் பொழிதல் (2) நாடும் நகரமும் நன்கறிய நமோ நாராயணா என்று கூறுதல் என்பன அவை. இவற்றை நோக்கக் கைவல்யம் பெறச் செய்யும் முயற்சிகளை விட, திருமாலை அடைய செய்யும் முயற்சிகள் எளிதானவை என்பது விளக்கமுறும்.

செல்வத்தை விரும்புபவர்கள் இருவகையினர். இழந்த செல்வத்தை எண்ணி அதனை அடைய விரும்பி இறைவனை வழிபடுகின்றவர் முதல்வகையினர். அவர்கள் அர்த்தர்கள் எனப்படுவர். தங்கட்கு இதுவரை இல்லாத செல்வத்தை அடைய வழிபடுபவர்கள் அர்த்தார்த்திகள் எனப்படுவர். இவர்கள் இரண்டாம் வகையினர். இவ்விருவகை யினரையும் ஒன்றாகக் கொண்டு திருமாலை வணங்க அழைக்கின்றார் பெரியாழ்வார்.

***அருளில்லார்க் கவ்வுலகம் இல்லை பொருளில்லார்க்***
***கிவ்வுலகம் இல்லாகி யாங்கு***

(திருக்குறள் - 247)

என குறிப்பர் முப்பால் முனி. இரு பொருளையும் தரவல்லவன் திருமால் என கொள்வர் வைணவர். இதனை 'அண்டக்குலத்துக்கு' எனும் பாசுரம் விளக்குகின்றது. இப்பாசுரத்தில், செல்வத்தை விரும்புபவர்கள் இறைவனின் ஆயிரம் நாமங்களை ஓதவும் வேண்டும் என்கிறார் பெரியாழ்வார்.

பெரியாழ்வார் இப்பாசுரங்களில் இறைவனை அடைவதற்குக் கூறும் வழிகள் யாவும் எளிமையானவை. மெய்வருத்தமின்றிப் பரமபதம் அடைய அவர் கூறும் வழிகள் இயல்பானவை. ஏனைய வழிகள் தரும் பயன்களை விட இறைவனை அடைய இவர் கூறும் வழிகள் மிக வேறுபாடுடையவை. மாலிடம் பக்தி செய்வதால் வரும் பயன், ஒரு சிறு ஆலவித்தை பெருமரமாய் வளர்ந்து பயன்தருதலை ஒத்தது என்பது ஆழ்வாரின் முடிபு.

## பக்தியின் பயன்

இவ்வாறு மூவகையினரும் மாயோனிடம் பக்தி செய்வதால் கிடைக்கப் பெறும் பயனும் திருப்பல்லாண்டில் உரைக்கப் பெறுகின்றது. அதனை விளக்குவதே 'நெய்யிடை நல்லதோர் சோறும்' எனும் பாசுரம் இப்பிறவிக்குக் காரணமாக இருப்பவன் திருமால். அதற்கு நன்றி செலுத்துவதும், அவனிடம் பக்தி செலுத்துவதும் ஒன்றே. இப்பக்திக்கும் பயனை இப்பிறவிலேயே கொடுத்து விடுகின்றான் திருமால். அவனை மனத்தால், வாக்கால், மெய்யால் வணங்குவது பக்தி. அதற்குப் பலனையும் மூன்று முறைகளால் தரவல்லவன் திருமால். 'நல்லதோர் சோறு', 'அத்தாணிச் சேவகம்', 'கழுத்துக்குப்பூண்', 'காதுக்குக் குண்டலம்' இவை இறைவனால் இம்மெய்க்கு அளிக்கப்பெறுவன. பல்லாண்டென்று ஒலி எழுப்புவதால் வரும் பயன் நாவால் வருவது. பல்லாண்டென்று அனைவரும் பாட இறைவன் கருடவாகனக் காட்சி தொடர்ந்தது வாக்கால் அமைந்த பயன். இனி மனத்தால் உணரும் பயன், இப்பிறப்பெனும் பாம்பிற்குப் பகையான அருளென்னும் கருடக்கொடியை உடையவன் திருமால் என்பது அருளென்னும் பொருளால் பிறப்பறுக்கவல்லான் மணவாளன் என்பது இதனால் விளக்கமுறும். இவ்வாறு மெய், நா, மனம் எனும் மூன்றாலும் உணரத்தக்கவன் திருமால் என்பது திருப்பல்லாண்டு காட்டும் தெளிவு.

திருப்பல்லாண்டு பக்திச்சிறப்பாலும் இலக்கியச் சிறப்பாலும் போற்றப்பெறுகின்றது. இத்தகைய சிறப்புடைய இத் திருப்பல்லாண்டைக் கலை என்று வைணவர்கள் கொள்கின்றனர்.

இறைவனுக்குரிய இத்திருப்பல்லாண்டு வைணவப்பதிகள் தோறும் ஓதப்பெறுகின்றது.

*எல்லா விடத்திலும் எங்கும் பரந்து பல்லாண்டொலி*
*செல்லா நிற்கும் சீர்தென் திருமாலிருந்த சோலையே*

(பெரியாழ்.4.2.2.)

எனும் தொடர் திருமாலிருஞ்சோலையில் பல்லாண்டொலி எழுந்தமையைக் குறிக்கும். இதனால் வைணவ மரபில் திருப்பல்லாண்டு பெறும் சிறப்பு விளங்கும்.

## ஒப்பாய்வு

பக்தி இயக்கத்தால் வளர்ந்த சைவ, வைணவ சமயங்களுக்குப் பொதுவாக அமையப்பெற்ற கூறுகள் பலவுள. தத்துவ அடிப்படையில் அவை வெவ்வேறாக அமையினும், பக்தியின்பால் அவை ஒன்று

பட்டவையே. இறைவன் எழுந்தருளியுள்ள இடங்களைப் பாடுதல்; இறைவன் திருநாமம் ஓதுதல்; அடியவர் தொண்டு; தத்துவக் கருத்துக் களை அவ்வக் கடவுளரே முதலில் வெளியிட்டமை முதலானவை அவற்றிற்குச் சான்றுகளாகும். இவையாவும் இலக்கியங்கள் வாயிலாக அறியப்படுவன. இலக்கியங்களிலும் கூட இவ்விரு சமயங்களின் பொதுவான கூறுகள் அமைந்துள்ளன. இவ்விரு சமயங்களின் கருத்துக் களை வெளிப்படுத்தும் இன்றியமையாத நூல்களான நாலாயிரமும் திருமுறைகளும் தொகுப்பு நூல்களாக அமைந்திருப்பதும் ஒரு சான்று. சிற்றிலக்கியங்களாகவும், வாய்மொழி இலக்கியங்களின் அமைப்பிலும் தொகுப்பிலக்கியங்கள் அமைந்திருப்பது மற்றொரு சான்று.

அற்புத நிகழ்ச்சிகள் நிகழ்ந்த பின்னரோ, அல்லது இறைவன் அதனை நிகழ்த்தும் பொருட்டோ திருமுறைப்புலவர்களும் ஆழ்வார்களும் பாடிய பாடல்கள் அவர்தம் சமய இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளன. அவ்வகையில் இரு சமயங்களிலும் ஒத்து அமையும் இலக்கியம் திருப்பல்லாண்டாகும். சைவ சமயத்திற்கான திருப்பல்லாண்டு சேந்தனா ரால் பாடப்பெற்று ஒன்பதாம் திருமுறையில் இடம் பெற்றுள்ளது. பதின் மூன்று பாசுரங்களைக் கொண்டது அத்திருப்பல்லாண்டு.

## *வேறுபாடுகள்*

பெரியாழ்வாரின் திருப்பல்லாண்டும், சேந்தனாரின் திருப்பல் லாண்டும் பாடப்பெற்ற சூழ்நிலைகள் வெவ்வேறானவை. ஆழ்வாரின் பெருமையைக் கண்ட திருமால் அவருடைய சிறப்பை விளக்கும் பொருட்டும் அவரைக காணவேண்டும் என்ற அவாவாலும் கருட வாகனாய்க் காட்சி தந்தான். இது தாயன்பை ஒத்தது. சேந்தாழ்வாரின் திருப்பல்லாண்டு வேறுவகையானது. குலத்துப் பிறந்த அடியாரின் பக்திச் சிறப்பை வெளிக்காட்டும் பொருட்டாகச் சிவன் அசரீரியாகக் குரல் கொடுத்துச் சேந்தனாரைத் திருப்பல்லாண்டு பாடப் பணித்தான். திருப்பல்லாண்டு பாடியதும் ஓடாத தில்லைத் தேர் ஓடியது. ஆதலின் திருப்பல்லாண்டு இரண்டும் எழுந்த சூழ்நிலைகள் வெவ்வேறானவை என்பது விளக்கமுறும்.

## *ஒப்புமைகள்*

இரு திருப்பல்லாண்டுகளிலும் பொதுவாக அமைந்துள்ள கூறு கள் நோக்கத் தக்கன. (1) அடியவர்களைப் பல்லாண்டு கூற அழைத்தல். (2) இறைவன் சிறப்பினை எடுத்துக்கூறி அருளியமை எண்ணிப் பல்லாண்டு

கூறல், (3) இறைவன் முன் நிகழ்த்திய செயல்களை எடுத்துக் கூறிப் பல்லாண்டு கூறுதல். (4) அவ்வக் கடவுளர்க்குரிய விண்மீன் நாளைப் போற்றுதல் என்பன அவை.

## அடியவர்களை அழைத்தல்

பக்திச் சமயங்கள் அடியவர்க்குச் சிறப்பிடம் தருவன. தொண்டருக்குத் தொண்டராய் இருப்பது அச்சமயங்களில் போற்றப் பெறுகின்றது. அடியவர் கூட்டமாய்க் கூடி இறைவன் திருநாமம் கூறுதல் பிறவிப் பெருங்கடலைக் கடக்க வழியாகும். இருசமயப் புலவர்களுமே அந்நிலையை எடுத்துரைக் கின்றனர்.

***வாழாட் பட்டுநின் றீருள்ளி ரேல்வந்து மண்ணும்மணமும்கொண்மின்***
***கூழாட் பட்டுநின் றீர்களை யெங்கள் குழுவினில் புகுதலொட்டோம்***

(திருப்பல்லாண்டு. பா.3)

என்று குறிப்பிடுகின்றார் பெரியாழ்வார். இதனையே சேந்தனாரும்,

***மிண்டு மனத்தவர் போமின்கண் மெய்யடியார் கள்வந்து வம்மின்***
***கொண்டும் கொடுத்தும்குடி குடியீசற் காட்செய் மின்குழாம் புகுந்து***

(திரு.திருப்பல்லாண்டு. பா.2)

என்று குறிப்பிடுகின்றார்.

## அருளியமை எண்ணிப் பல்லாண்டு பாடுதல்

செயல்பாடுகள் அனைத்திற்கும் இறைவனே காரியமாகவும், காரணமாகவும் இருக்க வல்லவன். அவனருளாலே அவன்தாள் வணங்கி என்று குறிப்பிடுவார் மணிவாசகர். இறைவற்குப் பல்லாண்டு கூறுவதிலும் இத்தெளிவு இருசமயப் புலவர்களுக்கு உரியதாகிறது.

***மெய்யிட நல்லதோர் சாந்தமுந் தந்தென்னை வெள்ளுயி ராக்கவல்ல***

(திருப்பல்லாண்டு. பா)

என்று தன்னைத் தூய்மைப்படுத்திய திருமாலைப் போற்றுகின்றார் பெரியாழ்வார்.

இதனை, ஒத்த கருத்தினை விளக்க,

***பட்டனுக் கென்னைத் தன்பாற் படுத்தானுக்கே பல்லாண்டு கூறுதுமே***

(திரு.திருப்பல்லாண்டு. பா.3)

எனும் தொடரைச் சேந்தனார் எடுத்தாளுகின்றார்.

சைவமும் வைணவமும் தத்தம் கடவுளரை ஒப்பற்ற பரம்பொருள் எனக் குறிக்கின்றன. அவர்கள் நிகழ்த்திய செயல்களைக் கூறிப் பெருமையை எடுத்தியம்புகின்றன. சிவனைப் பிறவாயாக்கைப் பெரியோனாகக் கொள்வர் சைவர். திருமாலுக்குப் பிறப்பினைக் கூறி அவதாரங்களாய் அவன் நிகழ்த்திய செயல்கள் வைணவர்களால் போற்றப் பெறுகின்றது. சிவனின் செயல்களை இதிகாசங்களும், புராணங்களும் பலவாகக் கூறுகின்றன. அவற்றில் சிலவற்றைச் சேந்தனார்,

***வில்லாண்ட கனகத் திரள்மேரு விடங்கன் விடைப்பாகன்***

(திரு. திருப்பல்லாண்டு. பா. 4)

***பாலுக்குப் பாலகன் வேண்டியழுதிடப் பாற்கடலீந்த பிரான்***

(திரு. திருப்பல்லாண்டு.பா9)

***மாலுக்குச் சக்கரம் அன்றருள் செய்தவன்***

(திரு. திருப்பல்லாண்டு. பா)

***தாதையைத் தாளற வீசிய சண்டிக் கிவ்வண்டத் தொடுமுடனே***
***பூதலத்தோரும் வணங்கப் பொற்கோ விலும்போ னகமும் அருளி***

(திரு. திருப்பல்லாண்டு. பா. 10)

என்று எடுத்துரைக்கின்றார். பெரியாழ்வாரும் தம் கடவுளான திருமால் முன் நிகழ்த்திய அவதாரச் செயல்கள் சிலவற்றை எடுத்துரைக்கின்றார். நரசிம்மம், இராமன், கண்ணன் முதலான அவதாரங்களின் செயல்கள் ஆழ்வாரால் எடுத்துரைக்கப் பெறுகின்றன.

பெரியாழ்வார் மாயோனுக்குரிய திருவோண நன்னாளைக் குறிக்கின்றார்.[7] சேந்தனாரும் சிவனுக்குரிய திருவாதிரை நன்னாளைக் குறிக்கின்றார்[8]

## பரம்பொருள் பற்றிய விளக்கம்

பக்திச் சமயங்கள் தத்தம் இறைவனைப் பரம்பொருட் தன்மை உடையவன் என்று குறிக்கின்றன. ஏனைய தெய்வங்கள் தம் கடவுளுக்குள் அடக்கம் என்றும் கூறுகின்றன. இதன் நோக்கம் தத்தம் கடவுளரை மேம்படுத்தி உரைப்பதுதான். சைவ, வைணவ சமயங்களின் நூல்கள் அதனைப் பகர்கின்றன. இரு திருப்பல்லாண்டுகளும் இக்கருத்துக்கு விலக்கல்ல.

பெரியாழ்வார் பாண்டியன் அவையில் மாயோன் பரம்பொருட் தன்மையை உடையவன என்பதை வேத வேதாந்த பொருள்கொண்டு

விளக்கினார். பரம்பொருட் தத்துவம் உணர்ந்த யாவரும் திருமாலே அத்தகையவன் என உணர உணர்த்தினார். ஆழ்வாரின் திருப்பல்லாண்டு பரம்பொருட் தன்மையை நேரடியாய் விளக்காது அடியவரைத் திருமாலுடன் இணைக்கின்றது. பக்தர்களின் இடையே இருந்து பல்லாண்டு பாடினார் பெரியாழ்வார். பரம்பொருள் தன்மையை உணர்ந்தாரிடம் அதனை விளக்குவது தேவையன்று என்று எண்ணிப் பெரியாழ்வார் பல்லாண்டு பாடினார். ஆதலின் ஏனையக் கடவுளரைத் திருமாலுக்கு அடங்கிய வராகவோ, அவர்களின் மேம்பட்டவராகவோ பெரியாழ்வார் கூறவில்லை.

ஆனால் சேந்தனாரின் திருப்பல்லாண்டில் மேற்கூறிய கருத்து வெளிப்படையாகத் தோன்றுகின்றது. சிவனின் பரம்பொருட் தன்மையை விளக்க ஏனைய கடவுளர் சிவனைத் தொழ நின்றனர் என்றுரைக்கின்றார்.

*புரந்தரன் மாலயன் பூசலிட்டு ஓலமிட்டு இன்னம் புகலரிதாய்*

(திரு. திருப்பல்லாண்டு. பா. 6)

என்றும்,

*சேவிக்க வந்தயன் இந்திரன் செய்கண் மாலெங்கும் திசைதிசைய*

(திரு. திருப்பல்லாண்டு. பா. 5)

என்றும் ஏனையக் கடவுளர் வந்து தொழ நின்ற செய்தி உரைக்கப் படுகின்றது. ஆதலின் பக்தர்களேயன்றித் தேவர்களையும் அழைத்துப் பல்லாண்டு கூறும் தன்மை சேந்தனாரின் திருப்பல்லாண்டில் அமைகின்றது. இதனால் சிவனின் பரம் பொருட் தன்மையும் விளக்கப்பெறுகின்றது.

## அடியவரும் - திருப்பல்லாண்டும்

குடிகுடி வந்து இறைவனைத் தொழும் சிறப்பு அடியார்களுக் குரியது.

*கொண்டும் கொடுத்தும் குடிகுடி ஈசற்காட் செய்மின் குழாம்புகுந்து*

(திரு. திருப்பல்லாண்டு. பா. 2)

என்று உரைக்கின்றார் சேந்தனார். "குடிகுடி யாட் செய்கின்றோம்" என்று உரைக்கின்றார் பெரியாழ்வார். செல்வநம்பியாகிய அடியாரோடும் கூடிப் பல்லாண்டு பாடியதைக் குறிக்கின்றார் இவர். சேந்தனாரும் அடியாரொடு பல்லாண்டு பாடியதைக் கூறுகின்றார். அதனை,

*மழைவிடை யாற்கு வழிவழி ஆளாய் மணம்செய் குடிபிறந்த*
*பழவடி யாரொடும் கூடிஎம் மானுக்குப் பல்லாண்டு கூறுதுமே*

(திரு. திருப்பல்லாண்டு. பா.11)

என்றமையும் தொடர்கள் விளக்கும். ஆதலின் அடியவரோடு இணைத்துப் பாடுவதன் நோக்கமாக இவ்விரு திருப்பல்லாண்டுகளும் அமைகின்றன.

திருப்பல்லாண்டு இரண்டிலும் அமையும் கருத்துக்கள் பல பொது வானவை. காலத்தால் பிந்தையதான சேந்தனாரின் திருப்பல்லாண்டு பெரியாழ்வாரின் திருப்பல்லாண்டை அடியொற்றி எழுந்ததே. வைணவத் தில் பெரியாழ்வாரின் திருப்பல்லாண்டுக்கு அளிக்கப் பெறும் சிறப்பும் சைவத்தில் சேந்தனாரின் திருப்பல்லாண்டுக்கும் அளிக்கப் பெறுகிறது. திவ்வியப்பிரபந்தத்தில் எந்தப்பிரபந்தம் ஓதப்பெறினும் முதலாவதாகப் பெரியாழ்வாரின் திருப்பல்லாண்டை ஓதிய பின்னரே ஏனையவற்றை ஓதுவர். இச்சிறப்புச் சைவத் திருப்பல்லாண்டுக்கு வேறு வகையில் அமைகிறது. வழிபாடுகளில் பஞ்சபுராணம் ஓதுதல் மரபு. அவற்றில் ஒன்றாகத் திருவிசைப்பா திருப்பல்லாண்டு இடம்பெறுகிறது.

---

## குறிப்புகள்

1. மு. சண்முகம் பிள்ளை, தமிழ் இலக்கியக் கொள்கைகள், ப.95
2. தேவாரம் 4.20.10
3. வசனபூஷணம், பக். 409 - 410
4. மேற்படி. ப.411
5. மேற்படி. பக்.440 - 441
6. திருப்பல்லாண்டு வியாக்கியானம், ப.40
7. திருப்பல்லாண்டு .பா.6
8 திருவிசைப்பா திருப்பல்லாண்டு. பா.12

# 3

# கண்ணன் பிள்ளைத் தமிழ்

ஓர் இலக்கியம் எழுந்த காலத்தில் அதற்கு ஒரு பெயரிட்டு அழைத்தல் மரபே. ஆனால் அதனை ஓர் இலக்கிய வகையின் பெயரிட்டுக் குறிக்கும் மரபு பண்டைக்காலத்தில் அமையவில்லை. சங்க இலக்கியங் களான அகநானூறு, புறநானூறு, ஐங்குறுநூறு முதலானவை தொகுப்பு இலக்கியங்களாக அமைந்துள்ளன. பிற்காலத்தில் எழுந்த பக்தி நூல்களும் தொகுக்கப்பட்டுத் திருமுறைகளாகவும், திவ்வியப் பிரபந்தமாகவும் வடிவம் பெற்றன. இவ்வாறு தோன்றிய காலத்தன்றிப் பிற்காலத்தில்தான் பெரும் பான்மைத் தமிழ் நூல்கள் தொகுக்கப்பட்டுத் தனிப் பெயர்பெற்றன.

இவ்வகையில் அமைந்தனவே தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்கள் எனும் சிற்றிலக்கியங்கள். பிரபந்தம் என்பது வடசொல்; செம்மையாக்கப்பட்டது என்பது சொல்லின் பொருள். செய்யுள் என் பதற்கும் நன்கு அமைக்கப்பட்டது என்பதே பொருள்.

நன்கு செய்யுளால் அமைக்கப்பட்டது எனும் பொருளைத் தருவதே பிரபந்தம் எனும் சொல்லாட்சி. பிரபந்தம் என்பது எல்லா இலக்கியங் களையும் குறிப்பதாயினும், சிறப்பாகச் சிற்றிலக்கிய வகையையே குறிப்பதைக் காணலாம். பிரபந்தம் எனும் சொல்லை வைணவர்கள் மிகுதியாகப் பயன்படுத்துகின்றனர். அதனை வழக்கிற்குக் கொண்டு வந்தவர்கள் அவர்களே. பதின் மூன்றாம் நூற்றாண்டில் கூட பிரபந்தம் எனும் வழக்கு சிற்றிலக்கியங்களைக் குறிக்கும் சொல்லாக அமையவில்லை.[1]

பேரிலக்கியங்களாய் அமையாது அளவால் சிறியனவாக அமையும் இலக்கியங்கள் சிற்றிலக்கியங்கள் ஆகும். சங்க காலத்தும் அதனை அடுத்த பதினெண்கீழ்க்கணக்குக் காலத்தும் அளவால் சிறியனவாக எழுந்த நூல்கள் உள. ஆயினும் அவை களவழிநாற்பது, கார்நாற்பது என்றாற்போன்று எண்ணிக்கையின் அடிப்படையில் பெயரிடப்பட்டன. கி.பி. 5-ஆம் நூற்றாண்டு தொடங்கி இன்றளவும் அளவால் சிறியனவாக அமையும் இலக்கியங்களைச் சிற்றிலக்கியங்கள் என வரையறை செய்யும் சிறப்பைக் காணலாம். சிற்றிலக்கியங்களுக்கு அளவு வரையறை இல்லை யாயினும், பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் அமையும் நானூறு பாடல்களை உடைய பழமொழி நானூறு, நாலடி நானூறு போன்ற நானூறு பாடல்களை உடைய கோவை முதலானவையும் அமைகின்றன. இவற்றால்

சிற்றிலக்கியம் என்பது மரபு வழிபட்ட சொல்லாகின்றது. மேலும் இலக்கணம் அல்லது அளவால் எண்ணிக்கை வரையறை உடையதாக அமையவில்லை என்பதும் விளங்கும்.

சிற்றிலக்கியம் முதலான புதுப்புது இலக்கியத் தோற்றத்திற்குத் தொல்காப்பியத்திலேயே சான்று காணப்பெறுகின்றது.

***விருந்தே தானும் புதுவது கிளந்த யாப்பின் மேற்றே***

(தொல், சொல்.237)

எனும் நூற்பாவுக்குப் பேராசிரியர்,

***புதுவது கிளந்த யாப்பின் மேற்றே என்றது என்னை யெனின், புதிதாகத்தாம் வேண்டியவற்றால் பல செய்யுளும் தொடர்ந்து வரச்செய்வது. இது முத்தொள் ளாயிரமும் பொய்கையார் முதலாயினோர் செய்த அந்தாதிச் செய்யுளும் என உணர்க, கலம்பகம் முதலானவும் சொல்லு***

(தொல், சொல், பேரா. உரை. ப.342)

என உரைக்கின்றார். நச்சினார்க்கினியரும் இக்கருத்தினையே வலி யுறுத்துகின்றார்.

***முத்தொள்ளாயிரமும் பின்னுள்ளார் பாட்டியல் மரபில் கூறிய கலம்பகச் செய்யுள் முதலியவற்றைப் பாடுதலுமாயிற்று.***

(தொல். சொல். நச். ப. 82)

என அவர்தம் உரை அமையும். ஆதலின் பாட்டியல் மரபில் அடங்காத முத்தொள்ளாயிரமும் விருந்தாகக்கொள்ளப்பட்டது. பாட்டியல் மரபு பற்றிய நூல் நச்சினார்க்கினியர் காலத்தில் அமைந்துவிட்டது என்பதும். அது சிற்றிலக்கியங்களின் இலக்கணம் கூறுவது என்பதும் இதனால் விளங்கும். இவரது காலம் பதினான்காம் நூற்றாண்டு. தொல்காப்பியர் காலம் தொடங்கி இவரது காலம்வரை விருத்தத்தால் அமைந்த இலக்கியங்கள் பல. அவற்றில் பாட்டியல் நூல்களில் அமையும் இலக்கியங்கள் பெரும் பங்கின.[2]

பாட்டியல் நூல்கள் பலவாக அமையும். அவற்றில் காலத்தால் முதன்மையான பன்னிரு பாட்டியல் தொடங்கிப் பிரபந்த தீபிகை வரை யுள்ள நூல்கள் பிரபந்தங்கள் தொண்ணூற்றாறு என வரையறுத்துக் கூறவில்லை. முதலாவதாக அமையும் அகத்தியனார், இந்திரகாளியர், அவியனார் எழுதிய பாட்டியல் நூல்கள் கிடைக்கவில்லை. முழுமையான வடிவுடைய பாட்டியல் நூலாய்க் கிடைப்பது பன்னிரு பாட்டியலே. இது பத்தாம் நூற்றாண்டில் தோன்றியது. இதில் எழுபத்து நான்கு வகைப்

பிரபந்தங்களின் இலக்கணம் கூறப்பட்டுள்ளது. இந்நூல் ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த புலவர்களின் மேற்கோள்களால் அமைகிறது.[3]

தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களை முதலில் அறிமுகப் படுத்துவது கி.பி.14-ம் நூற்றாண்டில் எழுந்த சிவத்தெழுந்த பல்லவன் உலாவாகும். 'தொண்ணூற்றாறு கோலப் பிரபந்தங்கள் கொண்ட பிரான்' என அதில் கூறப்பட்டிருக்கிறது.[4] சைவ தத்துவம் 96 என்பது போலப் பிரபந்தம் 96 என்று எப்படியோ புகுந்துவிட்டது. சிலம்பில் பாசண்ட சாத்தன் எனவரும் தொடரில் உள்ள பாசண்டம் என்பதற்குத் தொண் ணூற்றாறு வகை சமய சாத்திரக்கோவை என்று பொருளுரைக் கின்றார் அடியார்க்குநல்லார். சமயச் சாத்திர தருக்கக்கோவை 96 வகை என்பது போலப் பிரபந்தங்களும் 96 எனக் கொண்டனர் போலும். 96 வகை பிரபந்தங்களின் போக்கினைத் தெளிவாய் உரைத்தவர் வீரமாமுனி வராவார். இவர் கி.பி. 1838-ல் அச்சிட்டு வெளிப்படுத்திய தொன்னூல் விளக்கம் செய்யுள் மரபியலில் 96 பிரபந்தங்கள் இவையெனச் சுட்டியுள்ளார்.

இப்பிரபந்தங்களைப்பற்றிப் பாட்டியல் நூலகளும் கி.பி. 8-ம் நூற்றாண்டு தொடங்கி இலக்கணம் வகுத்து வந்துள்ளன . காலத்தால் பழமையானதாக அமையும் சிற்றிலக்கியங்கள் அந்தாதி, ஆற்றுப்படை முதலியவை. ஆதலின் சிற்றிலக்கியங்கள் தொல்காப்பியர் காலந் தொட்டே ஏதோ ஒரு வடிவுடன் திகழ்ந்தவை என்பதும், பின்னரே சிற்றிலக்கிய வகைகளின் சிறப்புப்பெயர் பெற்றன என்பதும் விளங்கும். இத்தகு இலக்கியங்களில் பிள்ளைத்தமிழும் ஒன்று. பிள்ளை இன்பம் பற்றிக் கூறும் இவ்விலக்கியத்தின் தொடக்கம் தொல்காப்பியம் தொடங்கி அமைந்துள்ளது. தொல்காப்பிய மரபியலில்,

*குழவியும் மகவும் ஆயிரண் டல்லவை*
*கிழவ வல்ல மக்கட் கண்ணே*

(தொல், மரபியல், நூ.23)

என மக்கட்குரிய இளமைப்பெயர்கள் காணப்பெறுகின்றன. கிழவ வல்ல என்ற மிகையானே ஆண்பிள்ளை, பெண்பிள்ளை எனப் பிள்ளைப் பெயரும் மக்கற்பாற்படுவன என்கிறார் பேராசிரியர்.[5] ஆதலின் பிள்ளை என்னும் சொல் பிற்காலத்தில் மக்களைக் குறிப்பதாயிற்று. வழக்கு முறையால் அமைந்த இச்சொல் இலக்கியத்தில் இடம்பெற்றது கி.பி. 8-ம் நூற்றாண்டுக்கு மேல் எனலாம். ஆயினும் பிள்ளைப் பருவத்தைப் பாடும் மரபு தொல்காப்பியர் காலம் தொடங்கி இருந்து வந்திருக்கிறது.

மக்களைப் போற்றியும் புகழ்ந்தும் பாடுதலும், அறம், பொருள், இன்பம் பற்றிப் பாடுதலும் செந்துறைப்பாடாண் பாட்டு எனப்பெறும். செந்துறை என்பது மக்களை மக்களாகவே பாடுதல். சங்க இலக்கியங்களில் அவ் வகை பாடல்கள் அமைந்துள்ளன. 'குழவி மருங்கினும் கிழவதாகும்'[6] எனும் நூற்பாவுக்கு நச்சினார்க்கினியர்,

***மருங்கென்றதனால் மக்கட்குழவியாகிய ஒருமருங்கே கொள்க தெய்வக் குழவி இன்மையின் இதனை மேல வற்றோடு ஒன்றாது வேறு கூறினார். தந்தையரிடத்தன்றி ஒரு திங்களில் குழவியைப் பற்றிக் கடவுள் காக்க என்று கூறுதலாலும் பாராட்டு மிடத்துச் செங்கீரையும், தாலும், சப்பாணியும் முத்தமும், வரஉரைத்தலும், அம்புலியும், சிற்றிலும், சிறுதேரும், சிறுபறையும் எனப் பெயரிட்டு வழங்குவதாகும் என்பது***

(தொல். புறத். நச்.ப. 261)

என உரைக்கின்றார். இதனால் பிள்ளைத்தமிழின் முதன்மைக் கூறு தொல்காப்பியத்திலேயே அமைந்து கிடக்கின்றது என்பது விளங்கும்.

பெற்றோர்க்குப் பிள்ளையிடம் உள்ள அன்பிற்கு ஈடாக இவ் வுலகத்தில் வேறு ஒன்றைக் காட்ட இயலாது. அக்குழவி தரும் இன்பம் அரசர்க்காயினும் பாமரர்க்காயினும் ஒன்றாகவே அமையும். பிள்ளை இன்பத்தைப் பாடுவதில் ஒரு சிறப்புள்ளது. துய்த்தார் பெறும் இன்பத்தைக் கற்பாரும் பெறயியலும். இவ்வகையின் அமையும் பாடல்கள் சங்க இலக்கியங்களில் அருகியே காணப்பெறுகின்றன. சங்க இலக்கியங்கள் கற்பியல் வாழ்க்கையைக் கூறியபோதிலும் பிள்ளை இன்பத்தைப் பெரிதாகக் காட்டவில்லை. தலைவன் தலைவியன்றி ஏனையோரும் அனுபவிக்கும் சிறப்புடையது இவ்வின்பம். ஆதலால் இது புறத்துறையில் வைக்கப்பட்டது எனலாம்.

அகத்துறையில் பிள்ளையைக் குறிப்பதாக அமையும் பாடல்கள் சிலவே எனலாம்.

***கழிவினும் வரைவினும் நிகழ்வினும் வழிகொள
நல்லவை உரைத்தலும் அல்லவை கடிதலும்
செவிலிக்கு உரியவாகும் என்ப***

(தொல். கற்பு. நூ.12)

என அமையும் கற்பியல் நூற்பா மக்களுடன் தலைவி வாழும் இல் லறத்தைச் செவிலிக் கூற்றாகக் கூறுகின்றது.[7] அதுவன்றி நன் மக்களைப் பெற்றவர்கள் பிறப்பின் நற்பயனை அடைந்தவர்களாகக் கருதப்பெற்றனர்.

*எழுபிறப்பும் தீயவை தீண்டா பழிபிறங்காப்*
*பண்புடை மக்கட் பெறின்*

(திருக்குறள். 62)

என்று குறளும் எடுத்துரைக்கின்றது. ஐங்குறு நூறில் சில பாடல்களில் மக்களுடன் தலைவன் தலைவியர் இனிது இருக்கும் நிலை கூறப் பட்டுள்ளது.

*பாணர் முல்லை பாடச் சுடரிழை*
*வாணுத லரிவை முல்லை மலைய*
*இனிது இருந்தனனே நெடுந்தகை*
*துனிதீர் கொள்கைத்தன் புதல்வனொடு பொலிந்தே*

(ஐங்குறுநூறு. 408)

என அமையும் பாடல் மூலம் இனிதான இல்லற வாழ்வின் அடையாள மாகப் பிள்ளைச் செல்வம் கருதப்பட்டமையும், அதனால் வருகின்ற இன்பத்தைத் தலைவன் தலைவியர் அனுபவித்தனர் என்பதையும் அறியலாம். இல்லற வாழ்வின் இன்பத்திற்கு அடிப்படையாக அமைவது இப்பிள்ளை இன்பம் என்ற கொள்கை உடையவராகத் தமிழ்ப் புலவர்களும் மக்களும் இருந்திருக்கின்றனர். கற்பியல் வாழ்வில் ஐங்குறுநூறு காட்டும் பாடல்கள் புதல்வர்க்கு இன்றியமையாத இடத்தைத் தந்துள்ளன. முல்லைத் திணையில் அமையும் செவிலிக்கூற்று பத்தும் தலைவன் தலைவியர் புதல்வனுடன் இனிது இருக்கும் நிலையைக் கூறுவன. புதல்வனின் 'சிறுதேர் உருட்டும் தளர்நடை கண்டு'[8] தலைவன் சிறுநகை பயிற்றி இன்பம் அடைந்ததை ஐங்குறுநூறு கூறுகின்றது. மற்றொரு பாடல் மகன் விளையாட காதலித் தழீஇ தலைவன் இருந்ததைக் கூறுகின்றது.[9]

அன்புக்குழந்தைக்கு ஈடான செல்வம் மனிதர்க்கு வேறொன் றில்லை. 'குழந்தையும் தெய்வமும்' ஒன்று என்று கூறுவர். அக்குழந்தை தரும் இன்பம் பற்றிய பாடல் ஒன்று புறநானூற்றில் அமைகிறது. பாண்டியன் அறிவுடைநம்பியின் பாடலது. அப்பாடல் ஒன்றே குழந்தை இன்பம் பற்றிய கருத்தைத் தரவல்லதாகப் புறநானூற்றில் அமைகிறது.

*குறுகுறு நடந்து சிறுகை நீட்டி*
*இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்*
*நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்*
*மயக்குறு மக்களை இல்லோர்க்குப்*
*பயக்குறை இல்லைதாம் வாழும் நாளே*

(புறநானூறு.பா.188)

என அமைகிறது அப்பாடல். தாமுணர்ந்த பிள்ளை இன்பம் ஏனையோரும் பெற இயலும் என்பதை உணர்ந்து பாண்டியன் வடித்திருக்கும் இப்பாடல், பிள்ளை இன்பத்தின் கருத்தை வெளிப்படுத்துவதாகக் கொள்ளலாம்.

பிள்ளை இன்பம் பற்றி அமையும் கருத்துக்கள் திருக்குறளிலும் காணப்பெறுகின்றன. மக்கட்பேற்றின் சிறப்பைக் கூறுவதற்காக அமைக்கப் பட்டனவாயினும், அவற்றில் சில பிள்ளை இன்பத்தையும் கூறுகின்றன.

*மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றவர்*
*சொற்கேட்டல் இன்பம் செவிக்கு*

(திருக்குறள்.65)

என்றமையும் குறள் அதற்குச் சான்றாகும்.

பெறுவதற்கரிய பிள்ளை இன்பம் பற்றியமையும் கருத்துக்கள் சங்ககாலம் தொட்டே வழங்கி வந்திருக்கின்றன. இவற்றில் முழுமையான வடிவமே பிள்ளைத் தமிழாக உருவெடுத்து வளர்ந்தது.

## *பிள்ளைத்தமிழ் இலக்கியம்*

பாட்டுடைத் தலைவனின் பிள்ளைப் பருவத்தில் பத்துப் பருவங்களைப் பாடுவது பிள்ளைத்தமிழ் இலக்கியமாகும். இப்பிள்ளைத் தமிழ் இலக்கியத்தின் முதல் நூலாக அமைவது ஒட்டக்கூத்தரின் குலோத்துங்கச் சோழன் பிள்ளைத் தமிழாகும். இது கி.பி.12-ம் நூற்றாண்டில் தோன்றியது. ஆயினும் பிள்ளைத்தமிழ் இலக்கணம் கூறும் பன்னிரு பாட்டியல் கி.பி.10-ஆம் நூற்றாண்டிலேயே தோன்றிவிட்டது. அதனால் கி.பி.10 ஆம் நூற்றாண்டிற்கு முன்னரே பிள்ளைத் தமிழ் நூல்கள் தோன்றிவிட்டன என்பது தெளிவு. பெரியாழ்வார் கண்ணனைப் பற்றிப் பாடும் பாசுரங்கள் பிள்ளைத்தமிழ் என்று அமையாவிட்டாலும், கண்ணனின் பிள்ளைப் பருவத்தைப் பாடுவன. ஆதலின் பின்வந்த பிள்ளைத்தமிழ் நூல்களுக்கு ஆழ்வாரின் பாசுரங்கள் முன்னோடியாகின்றன.

## பன்னிரு பாட்டியலும் பிள்ளைத்தமிழும்

பன்னிரு பாட்டியல் பதினைந்து நூற்பாக்களில் பிள்ளைத் தமிழ் இலக்கணம் உரைக்கின்றது. இவற்றில் பொய்கையார், பரணர், இந்திரகாளியர் முதலானோரின் மேற்கோள்கள் எடுத்தாளப்பட்டுள்ளன. இந்திரகாளியரின் ஐந்து மேற்கோள்கள் இங்கு இடம்பெறுகின்றன.

பிள்ளைப்பாட்டு மூன்று திங்கள் முதல் இருபத்தொரு திங்கள் வரை ஒன்றித்த மாதங்களில் பாடப்பெறுவது. காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வாரானை, அம்புலி, சிற்றில், சிறுபறை, சிறுதேர் முதலான பருவங்களில் பாடப்பெறும். தாய், தந்தை, பாட்டன், பாட்டி இவர்களை முன்னமைத்துக் கூறுதல் நெறியாகும். பெண்பாற்காயின் ஈற்றில் உள்ள சிற்றில், சிறுபறை, சிறுதேர், நீக்கிச் சிற்றில் இழைத்தல், சிறு சோறாக்கால், குழமகன், ஊசல், பன்னிரு ஆண்டில் நோன்பு நோற்றல் முதலாயின கூறப்பெறுகின்றன [10].

காப்பு பாடுவதற்குரிய கடவுளராகப் பதின்மூவர் உரைக்கப் பெறுகின்றனர். காப்பு பாடுவதற்குரிய முதற் கடவுளாகத் திருமால் அமைதல் வேண்டும். அதற்கான காரணமும் பன்னிரு பாட்டியலில் உரைக்கப் பெறுகின்றது. ஆசிரிய விருத்தமும், கட்டளைக் கலித்துறையும், கலி விருத்தமும் பிள்ளைத் தமிழுக்குரியனவாகக் கூறப்பெற்றுள்ளன. நெடு வெண்பாட்டில் அமைதலும் உண்டு. ஆசிரிய விருத்தத்தில் அமைப்பதும் உண்டு.[11] பிள்ளைத் தமிழில் ஆண்பாலுக்கு உவமையாகச் சொல்லப் படுவன இவை என்றும் பெண்பாலுக்கு உவமையாகச் சொல்லப்படுவன இவை என்றும் உரைக்கப்பெறுகின்றன.

இவ்வாறு அமையும் இலக்கணங்களுக்கு இந்திரகாளியரின் நூற்பாக்கள் சில மேற்கோள்களாக அமைகின்றன. அவர் ஆண்பாற் பிள்ளைத்தமிழ் பாடுவதற்குக் காலவரையறைாக பதினாறு ஆண்டினைக் கொள்கின்றார். பெண்பாற்பிள்ளைத் தமிழ் பாடுவதற்குப் பூப்பு நிகழும் காலம் எல்லையாக உரைக்கப்பெறுகின்றது[12]. பிள்ளைப்பாட்டிற்குரிய பருவங்களாக அவர் குறிப்பன பதினான்கு. பிறப்பு, ஓசை, காப்பு, வளர்ச்சி, அச்சமுறுத்தல், செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வாரானை, அம்புலி, சிற்றில், குழமகன், ஊசல் முதலாயினவாகும். இதனால் பன்னிரு பாட்டியலில் இருந்து இந்திரகாளியர் இலக்கணத்தால் வேறுபட்டுத் திகழ்வது விளங்கும். இவர் ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். பெரியாழ்வாரை ஒன்பதாம் நூற்றாண்டினராகக் கொண்டாலும் இவ்விலக்கணங்கள் அவருடைய பிள்ளைத்தமிழ் இலக்கியத்திற்கு ஒத்து வரவில்லை. மேலும்

இலக்கணங்களை மனதிற் கொண்டுதான் பெரியாழ்வார் கண்ணன் பிள்ளைத் தமிழ் பாடினார் என்பதற்கில்லை. அவருக்குக் கண்ணனின் பிள்ளைப் பருவம் பாடுபொருளாக அமைந்தது. அதற்குப் பிள்ளைத் தமிழின் பருவங்கள் உதவின.

ஆண்பாற் பிள்ளைத் தமிழ் பாடுவதற்குக் காலவரையறையாகப் பதினாறு ஆண்டினைக் கொள்கின்றார் இந்திரகாளியார். கண்ணன் பிறந்தது முதலாக அவன் ஆநிரை மேய்த்து வந்தது ஈறாக ஆழ்வாரால் உரைக்கப் பெறுகின்றன. கண்ணனின் வயது பற்றிய குறிப்பு எங்கும் காணப் பெறவில்லை. இவ்விடத்து மூன்று திங்கள் தொடங்கி இருபத்தொரு திங்கள் வரைப்பிள்ளைத் தமிழ் பாடுதல் வேண்டும் எனும் மரபு பெரியாழ்வாரால் மேற்கொள்ளப்பெறவில்லை.

இந்திரகாளியர் கூறும் பருவங்கள் பதினான்கு. அவற்றுள பெரும்பான்மை பெரியாழ்வார் குறிப்பிடும் பருவங்களுடன் ஒத்து அமைவன. பிறப்பு, ஓகை என்பவை கண்ணன் பிறந்தவுடன் ஆயர்பாடி மக்கள் அடைந்த மகிழ்ச்சியை ஆழ்வார் பாடும் திருமொழிகளுடன் ஒப்பிடத்தக்கவை. அச்சமுறுத்தல் என இந்திரகாளியர் கூறும் பருவம் அப்பூச்சி காட்டுகிறான் என ஆழ்வார் குறிக்கும் திருமொழியுடன் ஒத்தமைவதாய்க் கொள்ளலாம். செங்கீரை, தால், சப்பாணி முதலான பருவங்கள் பெரியாழ்வாருடைய பாசுரங்களிலும் அமைகின்றன.

இந்திரகாளியர் அமைக்கும் பருவங்கள் பிற்காலத்துப் பாட்டியல் நூல்களில் அவ்வாறே அமையாது வேறு வகையில் அமைந்தன. முத்தம், வாரானை, அம்புலி, முதலான இந்திரகாளியர் அமைக்கும் பருவங்களில் முத்தப்பருவம் ஆழ்வாரிடம் அமையவில்லை. வாரானை என்பது தளர்நடைப் பருவத்தை ஒத்தது எனக்கொள்ளலாம். அம்புலிப்பருவம் ஆழ்வாரால் பாடப் பெறுகின்றது. சிற்றில் பருவத்தை ஆழ்வார் தனியே பாடவில்லை. குழமகன், ஊசல் முதலிய பருவங்கள் பெண்பாற்குரியன. இவ்வாறு இந்திரகாளியர் பருவங்களை வரையறுத்தபோதும்,

*என்றனர் பிறவும் தொன்னெறி மரபில்*
*தத்தம் மரபிற்குத் தகுவன புகறல்*
*எத்திறத் தோர்க்கும் உரியன என்ப*

(பன்னிரு பாட்டியல். நூ.82)

என்று குறிப்பிடுகின்றார். இதனால் பிள்ளைத் தமிழ்ப் பருவங்களை வரையறை செய்யாது, பாடும் புலவரின் தன்மைக்கு ஏற்ப, பிள்ளைத் தமிழ் அமையும் என அவர் குறித்தமையும் விளங்கும். 'என்ப' எனப் பிறர்

கூற்றாய் அவர் அமைக்கும் தொடர் ஒன்பதாம் நூற்றாண்டிலேயே பிள்ளைத்தமிழ் இலக்கணத்துக்குட்பட்ட நூல்களும், உட்படாத நூல்களும் இருந்தன என்பதை விளக்கும்.

பிள்ளைத்தமிழுக்கு உரியனவாகக் கூறப்பெறும் பாவகை கொச்சகக் கலியும் நெடுவெண்பாட்டும் ஆகும். பெரியாழ்வார் இதிலும் முழுமையாக ஒத்துப்போகவில்லை. தரவு கொச்சகக் கலிப்பாக்கள் சில திருமொழிகளில் அமைந்துள்ளன. நெடுவெண்பாட்டு அமையவில்லை. கலித்துறை, கலிவிருத்தம், கலித்தாழிசை முதலானவையும், ஆசிரிய விருத்தமும் இடம் பெற்றுள்ளன.

இந்திரகாளியர் பருவங்களை அமைத்துக் கூறும் வகையில் பன்னிரு பாட்டியல் பருவங்களைக் கூறவில்லை. காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வாரானை, அம்புலி, சிற்றில், சிறுபறை, சிறுதேர் எனப்பருவங்கள் முறைப்படுத்தப்பட்டுள்ளன. இவற்றின் அடிப் படையிலும பெரியாழ்வார் பருவங்களை அமைக்கவில்லை. இவையன்றி வேறுபல பருவங்களும் இவரால் பாடப்பெறுகின்றன.

காப்புப் பருவம் பிள்ளைத் தமிழில் முன்னதாக அமையும். இது காப்புக் கடவுளாகிய திருமால் பற்றி அமைதல் வேண்டும். இதனை ஆழ்வார் அமைக்காது இதனின்றும் வேறுபட்ட இரு பருவங்களை அமைக்கின்றார். கண்ணன் பிறந்ததனால் ஆயர்பாடி மக்கள் கொண்ட மகிழ்ச்சிப்பெருக்கும், அதனை அடுத்துத் திருப்பாதாதி கேச வருணனையும் அமைகின்றன. இவை ஏனைய பிள்ளைத்தமிழ் நூல்களில் அமையப் பெறாதவை.

## *செங்கீரைப் பருவம்*

பெரியாழ்வாரின் பாசுரங்களில் முதல் பத்தில் ஒன்பது திரு மொழிகளே பிள்ளைத்தமிழ்ப்பருவங்களுடன் ஒத்து அமைவன. அவற்றில் அமையும் பருவங்களில் செங்கீரையும் ஒன்று. கீர் என்பது சொல் எனும் பொருளைத் தரும். செங்கீரை என்பதற்குக் குழந்தைகள் ஒலியை எழுப்பும்போது அமையும் மழலையைக் குறிக்கும் சொல்லாகக் கொள்ளலாம். செம்மை இல்லாத தொடையைச் செந்தொடை என்று கூறுவது போலப் பொருள் விளங்காக் குழந்தையின் ஒலியை செங்கீரை எனக் குறித்தனர். பெரியாழ்வார் இம்மழலையை 'மழலை முற்றாத இளஞ்சொல்' எனக் குறிக்கிறார். இது ஆழ்வாரின் பாசுரங்களில் முதல் பத்தில் ஐந்தாம் திருமொழியாக அமைகின்றது.

இச்செங்கீரைப் பருவம் குறித்து வேறு கருத்துக்களும் உள. ஆடுக செங்கீரை எனும் செய்யுள் வழக்கைக் கொண்டு குழந்தைகள் ஒரு காலை மடக்கி மறு காலை நிமிர்த்தி இரு கைகளையும் நிலத்தில் ஊன்றி முகத்தை மேல் நிமிர்ந்து ஆடுதலாகிய பருவத்தைக் குறிக்கும் என ஒரு சாரார் குறிப்பிடுவர். இவ்வாறு ஆடுகின்றபோது சுற்றத்தார் சொல்லிய சொற்களைச் சொல்ல வேண்டும் என்று வேண்டிக்கொள்வதாக இரு கருத்துக்களையும் இணைத்துக் கூறுவாருமுளர். குழந்தை முகமசைக்கும் நிலையையே மிகவும் குறிப்பது வழக்கம்.

### *தாலப்பருவம்*

தாலாட்டு என்பது தால் என மருவி வழங்குவது. குழந்தையைத் துயிலச் செய்வார் தம் நாவை அசைத்தலும், பாட்டு பாடுதலும் வழக்கம். நாவினை அசைத்துப்பாடும் 'தாலோதாலேலோ' என்ற சொல்லிறுதியுடன் இப்பருவச் செய்யுட்கள் முடிவடையும். பிள்ளைத்தமிழ்ப் பருவங்களில் இதுவும் ஒன்றாக அமையும். பெரியாழ்வார் இப்பருவத்தை தம் திருமொழியில் முதல் பத்தில் மூன்றாவதாக அமைக்கின்றார்.

### *சப்பாணிப்பருவம்*

பிள்ளைத்தமிழில் நான்காவதாக அமையும் இப்பருவம். குழந்தை கையோடு கை சேர்த்துக் கொட்டும் விளையாட்டினைக் கூறுவது. இப் பருவமும் ஆழ்வாரின் பாசுரங்களில் அமைகின்றது. இதனை முதல் பத்தில் ஆறாம் திருமொழியில் அமைக்கிறார் ஆழ்வார்.

### *முத்தப்பருவம்*

ஐந்தாவதாக அமையும் பருவம் இது. குழந்தையை முத்தம் தாவெனத் தாயும், பிறரும் வேண்டுவதைக் கூறுவது. ஆழ்வார் இந்தப் பருவத்தைப் பாடவில்லை. ஆயினும் கண்ணனின் முத்தத்தால் கிடைக்கும் இன்பத்தை விளக்கும் பாசுரம் அமைகின்றது.

***தன்னைப்பெற்றோர்க்குத் தன்வா யமுதம்தந் தென்னைத் தளிர்ப்பிக்கிறான்***

(பெரியாழ். 1.7.4)

என அமையும் தொடர் அதை விளக்கும்.

### *வாரானைப் பருவம்*

ஆறாவதாக அமையும் பருவம் இது. தளர்நடை இட்டு வரும் குழந்தையை வாவென அழைத்தலைக்கூறுவது. இப்பருவத்தைப் பாட்டியல் நூல்கள் வாரானை எனக் குறிப்பிடுகின்றன. ஆழ்வார் தம் பாசுரங்களில் தளர்நடை என்று உரைக்கின்றார். இப்பருவம் முதல் பத்தில் ஏழாம் திருமொழியாக அமைகிறது.

### *அம்புலிப்பருவம்*

நிலவைக் குழந்தையோடு விளையாட வாவென்று அழைத்தலைக் கூறுவது. இவ்வாறு அழைக்கும்போது சாம, பேத, தான, தண்டம் எனும் வகையால் முறையே அம்புலிக்கும், பாட்டுடைத் தலைவனுக்கும் ஒப்புமைக் கூறுதலும் வேற்றுமை கூறுதலும், வரின் விளையும் நன்மை கூறுதலும் வராவிடின் விளையும் தீமை கூறுதலும் மரபு இப்பருவம் ஆழ்வார் பாசுரங்களில் முதல் பத்தில் நான்காம் திருமொழியாக அமைகிறது.

### *சிற்றில், சிறுபறை, சிறுதேர்*

ஆண்பாற் பிள்ளைத் தமிழக்குச் சிறப்பாக அமைவன இவை. சிற்றில் பருவத்தில், சிற்றிலிழைத்து விளையாடும் சிறுமியர், பாட்டுடைத் தலைவன் சிற்றிலை அழிக்கும்போது எம் சிற்றிலை அழியாதொழிக எனப்பாடுவதாகக் குறிப்பர். சிறுபறைப்பருவத்தில் பாட்டுடைத் தலைவனைச் சிறுபறை முழக்கும்படியும், சிறுதேர் பருவத்தில் சிறுதேர் உருட்டும்படியும் கூறுவது மரபு. இம்மூன்று பருவங்களும் பெரியாழ்வாரால் பாடப்பெறவில்லை. கண்ணன் சிற்றில் சிதைத்ததை இரு இடங்களில் குறிக்கின்றார் ஆழ்வார்.

*செப்போது மென்முலை யார்கள் சிறு சிறுசோறு மில்லும் சிதைத்திட்டு*

( பெரியாழ்.2.8.3)

என்றும்,

*சிற்றில் சிதைத்தெங்கும் தீமைசெய்து திரியாமே*

(பெரியாழ்.3.2.2.)

என்றும் அமையும் அவை. பெரியாழ்வாரின் மகளான ஆண்டாள் கண்ணன் சிற்றில் சிதைத்தலை நாச்சியார் திருமொழியில் இரண்டாம் பத்தில் அமைத்துப்பாடுகின்றார்.

### *ஆழ்வாரே அமைத்துப் பாடுவன*

புலவர்கள் தாம் உணர்ந்ததை அப்படியே வெளிப்படுத்தும் ஆற்றல் உடையவர்கள். அவ்வெளிப்பாடு இலக்கண வரையறைக்குட் பட்டு நிகழ்வதுமுண்டு; உட்படாது அமைதலும் உண்டு. கண்ணனின் இளமைப் பருவத்தில் தாம் உணர்ந்த இன்பத்தைப் பெரியாழ்வார் பாட நினைத்தார். பிள்ளைத்தமிழ் அதற்கு உதவியது. உணர்ச்சிப் பெருக்கால் வரையறை இல்லாது அவருடைய பிள்ளைத்தமிழ்ப் பருவங்கள் பலவாக அமைந்தன. பிள்ளைத்தமிழ்ப் பருவங்களுடன் ஒத்து ஆழ்வார் அமைக்கும் பருவங்கள் ஐந்து. எஞ்சியவை ஆழ்வாரே புதிதாக அமைத்தவை.

### அச்சோப்பருவம்

அச்சோவச்சோ என்பது குழந்தையை அணைத்துக்கொள் என ஒருதரத்திற்கொருதரம் கூறி நிற்பது. இது குறிப்பிடைச் சொல்லாய் அமைகின்றது. அச்சோப்பருவத்தில் ஆழ்வார் அமைக்கும் பாசுரங்கள் யாவும் தாய் தன் குழந்தையை அணைத்துக்கொள்ள வேண்டுவதாய் அமைகிறது.

*அங்கைக ளாலேவந் தச்சோவச்சோ ஆரத் தழுவாவந் தச்சோவச்சோ*

(பெரியாழ் 1.8.2)

என்றாற் போன்று அமைவன அதற்குச் சான்றாகும்.

### புறம்புல்கல்

தாய் தன் குழந்தையைக் கட்டிக் கொள்ள வேண்டி நிற்பது. தன்முதுகினைக் கட்டிக்கொள்ளும்படிக் குழந்தையைக் கூறுவதாய் அமைவது. இக்காலத்து உட்புமூட்டை சுமத்தல் எனும் வழக்கு ஈண்டுக் கருதத்தக்கது.

### அப்பூச்சிக் காட்டல்

பிள்ளை பூச்சி காட்டி விளையாடுக என்பது இதன் பொருள். தாய் காட்டக் கண்ட சேய் அச்செயலைச் செய்து ஏனையோரை அச்சுறுத்து வதாகவும், அவர்களும் அச்சுறுவதாகவும் அமையும்.

### பால் உண்ண அழைத்தல்

பிள்ளை, விளையாட்டில் ஈடுபாடு கொண்டு பசி மறந்து இருந்த போது தாய் தன் குழந்தையைப் பால் உண்ண அழைத்தலைக் கூறுவது. ஆழ்வாரின் பிள்ளைத் தமிழ் மிக்க இயல்பாய்த் திகழ்வது என்பதற்கு இப்பருவம் தக்க சான்றாகும். குழந்தை பால் உண்ணும் தன்மையை இயற்கையான நிலையில் எடுத்துரைக்கின்றார் பெரியாழ்வார், 'திளைத்து உதைத்துப் பருகிடாயே'[13] 'முத்தனைய முறுவல் செய்து மூக்குறுஞ்சி முலையுணாயே'[14] என அமையும் தொடர்கள் மேற்கண்ட கருத்துக்கு அரணாவன.

### காதுகுத்தல்

பிள்ளைகளுக்குக் காது குத்தும் மரபு இன்றும் காணப் பெறுகின்றது. காதுகளுக்கு அழகிய அணியை இட்டு மகிழும் பொருட்டாகக் காது குத்தும் பழக்கம் ஏற்பட்டது. மற்றப் பிள்ளைத்தமிழ் நூல்களில் இப் பருவம் அமையவில்லை. அசோதை கண்ணனைக் காது குத்திக்கொள்ள அழைத்தலைக் கூறுவது இப்பருவப்பாசுரங்கள் . காது குத்தும்போது

ஏற்படும் வலியைத் தாங்க இயலாத நிலையில் கண்ணனுக்கு வேண்டு வதைத் தந்து அவனை மகிழ்விக்க நினைக்கும் அசோதையின் மொழிகள் இனிமை மிக்கவை. 'இனிய பலாப்பழம் தந்து' எனவும் 'போர்த்தும் பெரியன அப்பம் தருவன்' எனவும் 'நாவற்பழம் தருவன்' எனவும் அசோதை கூற்று அமைகின்றது.

## *நீராட அழைத்தல்*

இது தொடங்கி மூன்று திருமொழிகள் கண்ணனை அசோதை அழகு செய்வதைக் கூறுவன. கண்ணனை நீராட அழைத்தல் முதலாவதாக அமைகிறது. கண்ணன் பிறந்தது திருவோண நாளாகும் எனக் கூறி நீராட அழைக்கும் சிறப்பு இத்திருமொழிக்குரியது.

## *குழல்வாரக் காக்கையை வாவெனல்*

நீராட்டிய பின் குழந்தைகளுக்குக் குழல்வாருதல் தாயர் இயல்பு. கண்ணனுக்குக் குழல் வாருகின்ற செய்தியை அசோதை கூறுவது இப்பருவம். காக்கையை வாவென அழைத்துக் கூறிச் சிறார்களை மகிழ்வித்து அவர்களுடைய சிந்தையை மாற்றிக் குழல் வாரல் உலக இயல்பு. இதனைப் பெரியாழ்வார் ஒரு திருமொழியில அமைக்கின்றார்.

## *கோல் கொண்டு வாவெனல்*

கோல்கொண்டு வா எனக் காக்கையைக் கூறி அழைக்கும் திருமொழி இது. ஆயர்குலச்சிறார்கள் ஆநிரை மேய்க்கச் செல்லும் போது தன்னுடன் கோல்கொண்டு செல்லுதல் வழக்கம். கண்ணன் அதன் பால் அவாவுற்று அசோதையிடம் கேட்டான் என்றும், அதற்கு அசோதை காக்கையை அழைத்துக் கூறுவதாகவும் அமைவது இத்திருமொழி.

> ***சிறுகன்று மேய்ப்பார்க்கோர் கோல் கொண்டுவா***
> ***தேவபிரா னுக்கோர் கோல் கொண்டுவா***
>
> (பெரியாழ். 2.6.3.)

என்றமையும் தொடர்கள் அதற்குச் சான்றாகும்.

## *பூச்சூட்டல்*

நீராட்டிக் குழல் வாரிய பின் தன் பிள்ளையின் எழிலை மிகுதிப் படுத்த எண்ணிப் பலவாறாக மலர்களைச் சூட்டி மகிழ்தல் தாயர்க்கு இயல்பு. அசோதை கண்ணனைப் பூச்சூட்டிக் கொள்ளுமாறு அழைப்பது இப்பருவத்தில் குறிக்கப்பெறுகின்றது. கண்ணனுக்கு விருப்பம் தோன்று மாறு பல வண்ண மலர்களைத் தொடுத்து வைத்திருப்பதாக அசோதை கூறுவது இத்திருமொழியின் சிறப்பு.

### காப்பு

காப்பு என்பது தீயவை அணுகாதவாறு இடப்பெறுவது. காப்பு என்பது நாணால் கட்டப்படுவதைக் குறிக்கும். கண்ணனை அசோதை அழைக்கும் முறையைக் காணின் அது பொருந்துவதாக அமையவில்லை. மாலை வேளையில் நாற்சந்தியிடை நிற்காதே என்றும் கண்ணனைக் காப்பிட வருவாயாக என்றும் அழைப்பதாக அமைகிறது இத்திருமொழி. காப்பு என்பதைத் திருமண்ணை நெற்றிக்கு இட்டுக்கொள்வது எனவும் கொள்ளலாம். பெரியாழ்வாரும் 'மண்ணும் மணமும் கொண்மின்' என்று கூறுதலால் இக்கருத்து ஏற்புடைத்து ஆகின்றது.

### குறும்புச் செயல்கள்

கண்ணன் இளமைப் பருவத்துடன் தொடர்புடையனவாக ஆழ்வார் அமைக்கும் குறும்புச் செயல்கள் பற்றிய திருமொழிகள் இரண்டாகும். ஆயர்பாடி ஆய்ச்சியரிடம் கண்ணன் செய்த குறும்புகள் முதலில் அமைகின்றன. அடுத்தமையும் திருமொழி சிறு பெண்களுக்குக் கண்ணன் செய்த தீமைகளைக் கூறுவது. இவை இரண்டும் ஆய்ச்சியரின் கூற்றாகவும், சிறுமகளிரின் கூற்றாகவும் அமைந்துள்ளன.

### அம்மம் தர அஞ்சல்

கண்ணன் செயல்களைக் கண்ட அசோதை அவனுக்கு முலை யுண்ணத் தருதற்கு மறுப்பதாய் அமைவது இத்திருமொழி. இது கண்ணனின் குறும்புச் செயல்களையும், அவனுடைய தெய்வத் தன்மையையும் மிக்கு வெளிப்படுத்துவதாக அமைகின்றது.

### அசோதை இரங்கல்

ஆயர் குலச்சிறார்கள் ஆநிரை மேய்க்கச் செல்லுதல் அவர்தம் குலமரபு. தம் குல மரபிற்கு ஏற்பக் கண்ணனை ஆநிரை மேய்க்க அனுப்பிய அசோதை அவன் சென்ற கானகத்தின் கொடுமை எண்ணி இரங்கி உரைப்பதாய் அமையும் பாசுரங்களைக் கொண்டமைவது இத்திருமொழி.

### அசோதையின் மகிழ்ச்சி

கானகம் சென்ற கண்ணன் ஆநிரை மேய்த்துத் திரும்பும் அழகினைக் கண்டு அசோதை அடையும் மகிழ்ச்சியைக் கூறுகின்றது ஒரு திருமொழி. இதில் தன்னுடைய பெருமித உணர்வு வெளிப்படும் வகையில் அசோதை பாடுவதாய் 'ஆழ்வார் அமைக்கும்' பாசுரங்கள் இன்னிமை ரிக்கவை.

கண்ணன் பற்றி அமையும் பெரியாழ்வாரின் பாசுரங்கள் இலக்கண வரையறையுடன் அமைந்த மற்றப் பிள்ளைத்தமிழ் நூல்களுடன் வேறு பட்டுத் திகழ்கின்றன. அதற்குக் காரணம் பெரியாழ்வார் கண்ணன் பால் கொண்ட உண்மையான பிள்ளைப் பாசமே எனலாம். முதல் பத்தில் அமையும் ஒன்பது திருமொழிகளும் இரண்டாம்பத்தின் பத்துத் திரு மொழிகளும், மூன்றாம் பத்தின் மூன்று திருமொழிகளும், இயல்பான வாழ்வின் அன்றாட குழந்தை வளர்ப்பின் செயல்களாக அமைந்து விட்டன. இவ்வாறு கண்ணனிடம் கொண்ட அன்பின் காரணமாக எழுந்த பாசுரங்கள் 'கண்ணன் பிள்ளைத்தமிழ்' எனும் பெயர் கொள்ளத்தக்கன. இப்பிள்ளைத் தமிழே மற்றப்பிள்ளைத் தமிழ் நூல்களுக்கும் வழிகாட்டி யாகவும் அமைந்துள்ளது.

## *கண்ணன் பிள்ளைத்தமிழும் பிள்ளைத்தமிழ் இலக்கியமும்*

ஒப்பற்ற பரம்பொருளை மண்ணுக்கு கொண்டு வந்து மனிதனாக வாழவைத்துப் பாக்களமைத்துப் பிள்ளைத்தமிழ் இலக்கியத்துக்கு அடித்தளம் அமைத்த பெருமை பெரியாழ்வாருக்குரியது. முதலதான குலோத்துங்கச் சோழன் பிள்ளைத்தமிழ் மானிடரைப் பாடுவதாய் அமைகிறது. ஆயினும் பின்னர் எழுந்த பிள்ளைத் தமிழ் நூல்களில் கடவுளரைப் பற்றியனவே சிறப்பாக அமைந்துள்ளன. அவற்றுக்கெல்லாம் முன்னோடியாக அமையும் சிறப்புக் கண்ணன் பிள்ளைத் தமிழுக்கு உரியது. காப்புப்பருவத்தில் திருமாலை முதலில் குறித்தல் வேண்டும். பிள்ளைத் தமிழ் நூல்களுக்கு எல்லாம் முதன்மையதாக அமையும் இவ்விலக்கியம் பிள்ளைத் தமிழ் இலக்கியத்திற்கும் காப்பாக அமையவல்லது.

'குழவி மருங்கிலும் கிழவதாகும்', எனும் தொல்காப்பியப் புறத்திணை நூற்பாவுக்குக் கண்ணனையும், முருகனையும் பாடும் மரபினைத் தமிழக மக்கள் மேற்கொண்டதைக் காட்டுவர். முல்லை நிலக் கடவுளான மாயோனையும, குறிஞ்சி நிலக்கடவுளான சேயோனையும், குழந்தையாகக் கொள்வது தமிழகத்துக்குரியது. பிற்காலத்தில் எழுந்த பிள்ளைத் தமிழ் நூல்கள் முருகனைப்பற்றியனவாக மிகுதியும் அமைந்தன. ஆயினும் அவை முருகனைக் குறிஞ்சி நிலத்துடன் இணைத்துப் பாடு வனவாக அமையவில்லை. ஆனால் கண்ணனைப் பற்றிய பாசுரங்கள் ஆநிரை மேய்க்கச்சென்றது முதலானவற்றைக் கூறி ஆயர்குல மக்களுடன் அவன் வாழ்ந்த நிலையை படம் பிடித்துக்காட்டுகின்றன என்பது சிறப்பாக நோக்கத்தக்கது.

பிள்ளைத்தமிழ் நூல்களில் அமையும் பருவங்கள் தாயர் கூற்றாக அமைவது மரபு. ஆயினும் அவற்றில் அமையும் நடையும் பொருளு ணர்ச்சியும் தாயின் கூற்றாக உணரச்செய்யாது . கடவுளர் பற்றிய

இலக்கியமாக உணரச்செய்யும். கண்ணன் பிள்ளைத் தமிழ்ப் பாசுரங்கள் படிப்பார் யாவர்க்கும் தாயுணர்வு ஊட்டி இலக்கியத்துடன் ஒன்றச் செய்துவிடும். அதற்குப் பெரியாழ்வார் கொண்ட நடையழகும், பொருட் சிறப்பும், உணர்வோட்டமும் காரணங்களாகும்.

கடவுளரைப் பற்றிய பிள்ளைத்தமிழ் நூல்கள் பொதுவாகப் பக்திப் பெருக்கால் மட்டுமே அமைய, பெரியாழ்வாரின் பாசுரங்கள் சிறப்பாகத் தாயொருத்தியின் உணர்ச்சிப் பெருக்காய் அமைந்து கற்பாருக்கு இன்பம் பயப்பன.

*மைத்தடங் கண்ணி அசோதை தன்மக னுக்கு இவை*
*ஒத்தன சொல்லி உரைத்த மாற்றம்*

(பெரியாழ்.1.4.10)

என அசோதையின் கூற்றாய் அமைக்கும் பாசுரம் உணர்ச்சிப்பெருக்கால் இலக்கியம் அமைந்ததைக் விளக்கும்.

கடவுளரைப் பாட்டுடைத் தலைவனாகக்கொண்டிருக்கும் பிள்ளைத்தமிழ் நூல்கள் துதிப்பாடல்களை ஒத்து இறைவன் பெருமையை எடுத்துக்கூறுவன. ஆனால் இவற்றிலும் சிறப்புடையதாகக் கண்ணன் பிள்ளைத் அமைகின்றது. இலக்கிய இன்பமும், இறைத்தன்மையும் பயப்பதில் இப்பிள்ளைத்தமிழ் முதன்மையானதாகத் திகழ்கிறது.

பிள்ளைத்தமிழ் நூல்கள் இயற்றமிழ் சிறப்பைப் பெறுவன. ஆயினும் அதனின்றும் மேம்பட்டு நாடக இலக்கியமாகவும் அமையும் சிறப்புக் கண்ணன் பிள்ளைத் தமிழுக்கு உரியதாகின்றது. ஆய்ச்சியர்களின் கூற்றும், ஆய்ச்சிறுமிகளின் கூற்றும் இதற்குச் சான்றாக அமையும். அசோதை கண்ணனைக் காதுகுத்திக் கொள்ள அழைத்தலும், கண்ணன் மறுப்பும் நாடக நடையில் அமைந்துள்ளமை மற்றுமொரு சிறப்பு.

சங்க இலக்கியங்களில் கண்ணன் பற்றிய செய்திகள் அமையினும் கண்ணன் வரலாறு தெளிவாகக் கூறப்பெறவில்லை. வடமொழியில் விட்டுணுபுராணம், பாகவதம் முதலியன கண்ணனின் வரலாற்றைக் குறிப்பன. அவற்றிலிருந்து பெறப்பட்ட செய்திகளைக் கொண்டு தனி இலக்கியம் செய்த பெருமை ஆழ்வாருக்குரியது.

தமிழகத்தின் பக்தி சமயங்களான சைவமும் வைணவமும் தத்தமக்குரிய நூல்களாகத் திருமுறைகளையும், திவ்வியப் பிரபந்தத்தையும் கொள்கின்றன. தொகுப்பு நூல்களான அவற்றில் பல சிற்றிலக்கிய வகைகளும் இடம் பெற்று உள்ளன. ஆயினும் பிள்ளைத் தமிழ் அமைப்பில் விளங்கும் இலக்கியம் இது ஒன்றே.

கண்ணனைப் பிள்ளையாகப் பாடும் மரபு பண்டைக்காலந் தொட்டு வளர்ந்து இன்றளவும் திகழ்கின்றது. கண்ணனைத் தன் தோழனாயும், சேவகனாயும் காணும் பாரதியின் பாக்களுக்குக் கண்ணன் பிள்ளைத்தமிழே காரணமாக அமைந்தது எனலாம்.

பிற்காலத்தெழுந்த பிள்ளைத்தமிழ் நூல்கள் வழிபாட்டுத் தலத்து இறைவனின் பெருமையைப் பேசுவதற்காக அமைந்தன. ஆனால் கண்ணன் பிள்ளைத் தமிழ் தன் மனஉவப்புக்கடவுளை வெவ்வேறான பதிகளில் எழுந்தருளியுள்ளதாகக் குறிக்கின்றது. கண்ணன் அவதரித்த இடமாகத் திருக்கோட்டியூரைக் குறிக்கும் ஆழ்வார், திருவெள்ளறை அமர்ந்த கடவுளைக் காப்பிட அழைக்கின்றார். இவ்வகையாலும் கண்ணன் பிள்ளைத் தமிழ் ஏனைய பிள்ளைத்தமிழ் இலக்கியங்களில் இருந்து மாறுபட்டுத் திகழ்கின்றது.

மேற்கண்ட கருத்துக்களால் கண்ணன் பிள்ளைத்தமிழ் மற்றைய பிள்ளைத்தமிழ் இலக்கியங்களிலிருந்து வேறுபட்டு அமைந்தாலும், பிள்ளைத்தமிழ் இலக்கியங்களுக்கு இதுவே முன்னோடியாக அமைகிறது என்பது விளங்கும்.

## *பெரியாழ்வாரின் தாயன்பு*

அசோதையாக ஆழ்வார் அமைக்கும் பாசுரங்கள் பக்திப் பெருக்கால் மட்டும் அமையவில்லை. உன்னதமான தாயன்பின் உணர் வாகவும் வெளிப்படுகின்றது. இவ்வித வெளிப்பாட்டில் கடவுளைப் பாடுகின்றார் எனும் உணர்வு நீங்கி இயல்பான மானிடக்குழந்தையைப் பாடுகின்றார் என்ற உணர்வு ஏற்படுகின்றது. ஆழ்வாரின் பாசுரங்கள் அசோதையின் தாயன்பைப் பலவாறாக எடுத்துரைக்கின்றன. அதற்கு ஆழ்வார் அசோதையின் கூற்றாகப் பாசுரங்களை அமைத்தலும் ஒரு காரணம்.

## *கண்ணனின் முத்தம்*

தாயர்தம் பிள்ளையின் முத்தத்தால் பேருவுவகை கொள்ளும் இயல்பினர். முத்தத்தால் அடையும் இன்பம் அசோதையாலும் அனு பவிக்கப் பெறுகின்றது. இதனை அசோதை தன் வாயமுதம் தந்தென்னைத் தளிர்விப்பிக்கிறான் என உரைக்கின்றாள். அவ்வின்பம் ஆழ்வாரால் அசோதையின் கூற்றாக அமையினும், ஆழ்வாரின் உளப்பாங்கு இங்கு வெளிப்படுகின்றது.

### தளர்நடை தரும் இன்பம்

குழந்தை இளம் பருவத்தில் தளர்நடை பயிலும் எழில் காணும் தாயர்க்கு ஏற்படும் மகிழ்ச்சி அளவிடற்கரியது. இயல்பான குழந்தை இன்பத்தில் ஈடுபட்ட அசோதைக்குக் கண்ணன் எழில் பெற நடக்கும் சிறப்பு இன்பம் பயக்கிறது. இவ்விள மழலையின் எழில் நடையை,

***செவ்வாயூறியூறி யிற்றுயிற்று விழநின்று***

(பெரியாழ்.1.7.7)

என்றும்

***பெருநீர்த் திரையெழு கங்கையிலும் பெரியதோர் தீர்த்தபலம்***
***தருநீர்த்திரு சண்ணம் துள்ளஞ் சோரத் தளர்நடை நடவானோ***

(பெரியாழ். 1.7.10)

என்றும் அழகு பெற அனுபவிக்கின்றாள் அசோதை. குழந்தைப் பருவத்தின் ஒவ்வொரு செயலிலும் இன்பம் காணும் தாயன்பு ஈண்டு ஆழ்வாரால் படைக்கப்பெறுகின்றது.

### அழுகை பொறுக்காத அசோதை

தம் பிள்ளையின் அழுகைக் குரல் கேட்கின் விரைந்தோடி வந்து வேண்டுவன செய்ய விழையும் சிறப்புத் தாய்மைக்குரியது. கண்ணனின் அழுகைக்குரல் கேட்டு அசோதை,

***தத்தம் மக்கள் அழுதுசென்றால் தாய்மாரவர் தரிக்கில்லார்***

(பெரியாழ் 2.2.6)

என விரைந்தோடி வந்து கண்ணனுக்கு வேண்டுவன தரும் அசோதையின் அன்பு பெரியாழ்வார் வாயிலாக வெளிப்படுகின்றது.

### மகனால் தாயடைந்த பெருமை

மகனால் வரும் பெருமையை மிக்கு விரும்பும் இயல்புடையவள் தாய்.

***ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்***
***சான்றோன் எனக்கேட்ட தாய்***

(திருக்குறள்.69)

என்று குறளும் கூறுகின்றது. தம் பிள்ளையின் பெருமை கண்டு அசோதையின் மனம் மகிழ்கின்றது. கண்ணனின் செயல் கண்டு அவன் 'ஆயர் புத்திரனல்லன்; அருந்தெய்வம்' என ஆயர்பாடியே மகிழ்ந்தது. அதனால் 'என்ன நோன்பு நோற்றாள் கொலோ இவனைப்பெற்ற

வயிறுடையாள் என்னும் வார்த்தை எய்துவித்தான்' என்னும் சிறப்பைத் தான் பெற்றது எண்ணி அசோதை இறும்பூது அடைகின்றாள். அசோதைக் கன்றி ஆழ்வாருக்கும் இம்மகிழ்ச்சி உரியது.

தான் பெற்ற பிள்ளை எத்தகைய துன்பம் செய்யினும் அதனைப் பொறுத்து நீராட்டி வளர்த்தல் தாயாரின் இயல்பு. கடவுளைக் குழந்தையாகப் பெற்றவர்க்கும் இத்தகு இயல்பு உரியதே. ஆயினும் கண்ணன் அருட் குழந்தை என்பதை அசோதை உணர்ந்தும் மானிடத் தாயன்பினை அவனிடம் காட்டுகின்ற மாட்சி ஆழ்வார் பாசுரங்கள் வழி வெளிப் படுகின்றது. பேய்ச்சி முலை உண்டு அவள் உயிர் குடித்த பின்னும் அசோதை அம்மம் தந்ததைக் கூறித் தன் தாயன்பை வெளிப்படுத்து கின்றாள்.

## *குறை சொல்லாத்தன்மை*

ஆய்ச்சியர் தலைவியான அசோதை தயிர், பால், வெண்ணெய் முதலியவற்றைச் சேர்த்து வைக்கவும், கண்ணன் அவற்றைத் திருடித் தின்றான். இவ்வுண்மையை வெளிக்கூறின் இதனைக்கேட்போர் பெற்றதாயே தம்பிள்ளையைக் குற்றம் சொன்னாள் எனும் பொல்லாங்கு வரும் என்று அஞ்சி மறந்தும் உரையாட மாட்டேன் என உரைப்பது தாயுணர்வின் வெளிப்பாட்டைக் கூறுவதாகும்.

## *பிள்ளையின் எழில் துய்த்தல்*

பிள்ளைகள் தெருவிற் திரிந்து விளையாடிவரும் புழுதி அளைந்த அவர்தம் பொன்மேனி காணின் தாயர்க்குப் பேருவுவகை உண்டாகும். இதனை அசோதையிடம் காணமுடிகின்றது. இவ்வுணர்வு தாயால் மட்டுமே அனுபவிக்கப்பெறும். ஏனையோர் காணின் புழுதி அளைந்த மேனியைப் பொறுக்கார்.

> ***காணப் பெரிதுவப்பன் ஆயினும் கண்டார் பழிப்பார்***
> ***நாணெத் தனையும் இலாதாய் நப்பின்னை காணிற்நகும்.***
>
> (பெரியாழ்.2.5.9)

என்று தான் அனுபவிக்கும் இன்பத்தையும் ஏனையோர் பழிக்கும் தன்மையையும் அசோதை வாயிலாய் ஆழ்வார் குறிக்கக் காணலாம்.

## *அடித்தமை கண்டிரங்கல்*

பிள்ளையின் செயல் கண்டு சீற்றம் கொள்ளும் தாய் அவனை அடித்தல் உண்டு. அடித்தமை உணர்ந்து இரங்கும் இயல்பும் தாயர்க்குரியது. இயல்பான அவ்வுணர்வை அசோதையிடம் காணமுடிகின்றது. 'அள்ளி நீ

வெண்ணெய் விழுங்க அஞ்சாதே அடியேன் அடித்தேன்' எனக் கண்ணனை எண்ணி இரங்கும் தாய்மனம் அசோதை வாயிலாக வெளிப்படுத்தப் பெறுகின்றது.

### *பிறர் ஏசப்பொறாமை*

தன் குழந்தையைப் பிறர் ஏசுவதைக் கணமும் பொறாத அன்பு மனம் தாய்க்குரியது. தம் மக்கள் குற்றம் செய்யினும் அதனைக் குற்றம் எனக் கூறார். சிறார் பலர் கூடி விளையாடினும் அவருள் குறும்பு செய்வான் ஒருவன் பொருட்டே குற்றங்கள் உரைக்கப்பெறுவது இன்றும் காணப்படும் ஒன்று. தன்னோராயிரம் சிறாருடன் விளையாடும்போது மற்ற சிறார்கள் செய்யும் தீமைகளும் கண்ணன்பால் வந்துவிடும் என்று அஞ்சுகின்றது அசோதை மனம். தான் ஏசுதலைக் கூடப் பொறாத தாய்மனம், பிறர் ஏசுதலைப் பொறாததும் இயல்புதான்.

*ஏதேனும் சொல்லி அசல கத்தார்*
*ஏதேனும் பேச நான்கேட்க மாட்டேன்*

(பெரியாழ்.2.9.6.)

என அசோதை அதனை வெளிப்படுத்துகின்றாள். 'பரிபவம் பேசத் தரிக்க கில்லேன்' என்பதும் பிறர் ஏசுதலைப் பொறாததைக்குறிப்பது.

### *குலச் செயல்*

ஆயர் குலத்துக்குரிய செயல்களில் சிறார் ஆநிரை மேய்க்கச் செல்லுதலும் அடங்கும். கண்ணனை அவ்வாறு அனுப்பிய அசோதை அவனுடைய இளமை குறித்து வருந்தியும், செய்த செயல்கள் குறித்து நினைத்தும், தான் செய்த தவற்றை எண்ணி வருந்தியும் உரைக்கின்றார். கானகம் சென்ற கண்ணன் திரும்பி வருகின்றபோது அசோதை அடையும் மகிழ்ச்சி அளவற்றதாய் அமைந்து தாயுணர்வின் தன்மையை எடுத்துரைகின்றது.

இவ்வாறு பெரியாழ்வார் தாய்மை உணர்வின் ஒவ்வொரு சிறு கூறினையும் இலக்கியமாக்குகின்றார். அதனால் மற்றப் பிள்ளைத்தமிழுக்கு இல்லாத சிறப்புக் கண்ணன் பிள்ளைத்தமிழுக்கு உரியதாகின்றது. தாயுணர்வைப் பாடுவதில் பெரியாழ்வாருக்கு ஒப்பு வேறு ஒருவரில்லை என்று உரைக்கவும், இவ்விலக்கியம் வழிவகுக்கின்றது. கண்ணனுக்குத் தாயாக விளங்கும் ஆழ்வார் பிள்ளைத்தமிழ் இலக்கியவகைக்கும் தாயாக விளங்குகின்றார் என்பது முழுதும் பொருத்தம் உடையதாக அமையும்.

## *பிள்ளைத்தமிழின் பலன்*

கடவுள் பற்றிய பிள்ளைத்தமிழ் நூல்கள் அனைத்தும் புலவரின் பக்திப் பெருக்காலும் இறைவனின் அருட்சிறப்பைப் பெற்றதாலும் பாடப் பெறுபவை என்பர். அவற்றினும் கண்ணன் பிள்ளைத்தமிழ் ஒருவகையில் உயர்ந்து நிற்கின்றது. தாம் பெற்ற பேறு இவ்வையம் பெற வேண்டும் என்பது ஆழ்வார் திருவுள்ளம். கண்ணனைச் சேயாகப்பெற்ற பெரியாழ்வார் ஏனையோரும் தன்னைப் போன்று பிள்ளை இன்பத்தை அனுபவிக்க வேண்டும் என்னும் அவாவுடன் திகழ்கின்றார். இந்தக் கருத்து அவருடைய பாசுரங்கள் வழி வெளிப்படுகின்றது.

*மாயன் மணிவண்ணன்தாள் பணியும் மக்களைப் பெறுவார்களே*

(பெரியாழ்.1.7.11)

*வாய்த்த நன்மக்களைப் பெற்று மகிழ்வரே*

(பெரியாழ்.1.9.10)

*தமிழ்ப் பத்தும் வல்லார் மக்களைப் பெற்று மகிழ்வார் இவ்வையத்தே*

(பெரியாழ்.2.6.10)

என உரைத்துப்பிள்ளை இன்பம் பெற ஏனையோர்க்கும் பெரியாழ்வார் வழிகாட்டுகிறார். உலகத்தாரும் நன்மக்களைப்பெற்று மகிழ இப்பிள்ளைத் தமிழ் நூல் ஒரு வழியாக அமைகிறது. ஆதலின் இப்பிள்ளைத் தமிழ் இலக்கியத்தின் பயன் நன்மக்கட்பேறு ஆகும் என்பதும் உணரத்தகும்.

## *ஆழ்வார் குறிக்கும் பழக்கவழக்கங்கள்*

இலக்கியங்கள் அனைத்துமே அது எழுந்த காலச்சூழலை வெளிப்படுத்துவன. பெரியாழ்வாரின் கண்ணன் பிள்ளைத்தமிழ் அவர் கால மக்களின் பழக்க வழக்கங்கள் சிலவற்றைக் குறிக்கின்றது. அன்றாட நிகழ்ச்சிகளை ஆழ்வார் இலக்கியமாக அமைந்திருப்பதால் அவை இன்றியமையாத இடம்பெற வேண்டிய சூழல் ஏற்பட்டு விட்டது. குழந்தை பிறந்த பத்தாம் நாள் விழா கொண்டாடுதல்[15], குழந்தையின் அரையில் பல அணிமணிகளைக் கட்டுதல்[16], குழந்தைகளுக்கு மஞ்சளால் நாக்கு வழித்தல்[17], காது குத்துதற்குத் திரியிடல்[18], எண்ணெய் புளியம்பழம் கொண்டு நீராட்டுதல்[19], காப்பிடல்[20], திருட்டி கழித்தல்[21], நெல்லியோடு காய்ச்சின நீர் கொண்டு நீராட்டல்[22], மஞ்சளும், செழுங்கழுநீரும், வாசியும் கொண்டு நீராட்டல்[23], கண்ணனின் திருவோண நாள் கொண்டாடுதல்[24], தம் வீட்டு விழாவிற்கு வந்தவர்க்கு அடைக்காய் கொடுத்தல்[25], முதலானவை குறிக்கப் பெறுகின்றன.

## கண்ணன் பிள்ளைத் தமிழில் வாய்மொழி இலக்கியக் கூறுகள்

வரிவடிவ இலக்கியத்திற்கு அடிப்படையாக அமைவன வாய் மொழி இலக்கியங்களாகும். எந்த ஒரு இலக்கியக் கருத்தும் உடன் உதித்து வரிவடிவம் பெற்றுவிடுவதில்லை. மக்களிடையே வழங்கி வந்த பின்பு கவிஞர்களின் கற்பனை ஆற்றலால் ஓர் ஒழுங்கான வடிவம் பெற்று வரிவடிவமாக மாறுகின்றது. இவ்வாறு வாய்மொழி இலக்கியங்கள் வரிவடிவம் பெற்றமைக்குச் சான்றுகளாகப் பலவற்றைக் காட்டுவர். வாய்மொழியாகத் தொன்றுதொட்டு வழங்கி வந்த பாடல்களே பின்பு வரிவடிவம் பெற்றன என்பது ஹோமர் காப்பியங்களை வைத்து மெய்ப்பிக்கப்பட்டுள்ளது. இவ்வாறு பழமையான இலக்கியங்களன்றி எக்காலத்திலும் எழும் இலக்கியங்களிலும் இவ்வாய்மொழி இலக்கியப் பண்பு அமைந்திருக்கும்.

சங்க இலக்கியங்களிலும் வாய்மொழி இலக்கியக்கூறுகள் எடுத்துரைக்கப்பெறுகின்றன. அடைமொழிகள், சொற்கள், தொடர்கள், கருத்துக்கள் திரும்பத் திரும்ப வருவதைச் சுட்டிக்காட்டி அதற்கு வாய் மொழி இலக்கியப் பண்பின் தாக்கமே காரணம் என்பர். அகத்திணையிலும் தலைமக்கள் பெயர் சுட்டா நிலையும் இவ்வாய்மொழிக் கூறின் தாக்கமே என்பர். தொல்காப்பியம் கூறும் பிசி, பண்ணத்தி முதலானவையும் வாய்மொழி இலக்கியத்தின் கூறுகளாகக் கொள்ளப் பெறுவன.

சிற்றிலக்கிய வகைகளில் குறவஞ்சி, பள்ளு, முதலானவை வாய்மொழி இலக்கியங்களின் வடிவங்களாகும். இவையன்றி மற்றைய இலக்கியங்களிலும் இக்கூறுகள் அடங்கி இருப்பினும், அவை மறை முகமாகத் திகழ்வன. பிள்ளைத் தமிழிலும் இவ்வாய்மொழிக் கூறுகள் அடங்கியுள்ளன. பிள்ளைத்தமிழ்ப் பருவங்கள் பத்தும் மக்களின் அன்றாட வாழ்வில் இடம் பெறுவன. தாலும், அம்புலியும் இன்றும் மக்களிடம் காணப்பெறும் நிகழ்ச்சிகளோடு தொடர்புடையவை. இவையன்றி ஏனைய பருவங்களும் வாய்மொழியாகத் திகழ்வன. புலவர்கள் தம் கற்பனை நலத்தால் இவற்றை வரிவடிவம் ஆக்கிவிட்டனர்.

வாய்மொழி இலக்கியம் அமைய மொழி வடிவம், பொருள், சூழல் இவை மூன்றும் வேண்டும். அவ்வாறு அமைவதைப் புலவர்கள் தம் நோக்கில் சிறந்த உத்தியாகக் கொண்டனர். இம்முறையைப் பெரியாழ் வாரும் பயன்படுத்துவதை நன்கு உணரலாம். கண்ணனைப் பாலகனாய்க் கொள்ளும் மரபு பண்டைக்காலம் முதல் இன்றளவும் தமிழகத்தில் நிலவி

வருகிறது. கண்ணனின் சிறப்பைப் பாட எண்ணிய பெரியாழ்வாருக்கு இவ்வாய்மொழிக்கூறுகள் ஓர் இலக்கிய உத்தியாகப் பயன்பட்டது. அது பிள்ளைத் தமிழ் இலக்கியமாக மலர்ந்தது.

வாய்மொழி இலக்கியத்தில் காணப்பெறும் சொற்கள் பலவும், பல இடங்களிலும், பலராலும், பன்முறையாலும் பயன்படுத்தப்பட்டன வாக அமையும் இயல்பின. பெரியாழ்வார் அமைக்கும் பருவங்களில் காணலாகும் சொல்லாட்சிகள் பலவும் கடின நடையின்றி இலக்கண இடரின்றி வழக்குச் சொற்களாக அமைகின்றன. 'தந்தத்தின் சீப்பால்', 'குடையும் செருப்பும் கொடாதே' முதலிய தமிழகத்தில் வழங்கும் வழக்குச் சொற்களைக் கொண்டு பாசுரங்கள் அமைக்கின்றார் பெரியாழ்வார். மேலும் அவருடைய பாசுரங்களில் வட்டார வழக்கு மிகுதியும் பயின்றிருப்பது மேற்கண்ட கருத்தினை வலியுறுத்துவதாகும்.

இலக்கியத்தின் அடிப்படைக்கூறுகளையும், பின்வந்து கலந்துள்ள கூறுகளையும் பிரித்துக்காண நாட்டுப்புறக் கலைகள் இன்றியமையாதவை. கண்ணன் பிள்ளைத்தமிழில் இத்தகைய கூறுகளை எளிதில் கண்டு பிடித்து விடலாம். ஒரே காலத்து நிலவும் இருவகைப்பட்ட இலக்கிய நெறிகளான எழுத்து, வாய்மொழிகளின் சந்திப்பால் இருநெறிகளின் கதியும் மாறி இருக்கும் என்று குறிப்பர்[26].

இலக்கியங்களில் இடம்பெற்றுள்ள தாலாட்டு, அம்புலிப் பருவங்கள் வாய்மொழி இலக்கியங்களில் காணப்பெறும் கூறுகளின் பிரதிபலிப்புகள், இவற்றைக்கொண்டதே பிள்ளைத்தமிழ் இலக்கியம். பெரியாழ்வார் முதலில் இப்பருவங்களை எடுத்தாண்டாலும், பின் வந்த பிள்ளைத்தமிழ் இலக்கியங்களுக்கு இவை இலக்கணங்களாக வரையறுக்கப் பட்டுள்ளன. இது வாய்மொழி இலக்கியக் கூறு வரிவடிவ இலக்கியத்தில் இடம் பெற்றமைக்குச் சான்றாகும்.

பக்திப்பெருக்கால் எழுந்த இவ்வகையான இலக்கியங்கள் தெய்வங்களின் இளமைப்பருவத்தைப் பாடுவன. தெய்வங்களின் பெயரை இட்டு பிள்ளையை அழைக்கும் மரபு இன்றும் காணப்பெறுவது. பெற்ற பாலகனைக் கண்ணனாயும், முருகனாயும் எண்ணி மகிழும் தாயின் மணம் அதனைத் தாலாட்டில் வெளிப்படுத்துகின்றது. பக்தியால் எழுந்த பலன் வாய்மொழி இலக்கியத்தில் இடம்பெற்றமைக்கு இக்கருத்து சான்றாகும். இவற்றால் இருவகை இலக்கியங்களும் ஒன்றினை ஒன்று சார்ந்து வளர்ந்து வருகின்றன என்பது விளங்கும்.

### *தாலாட்டும் பெரியாழ்வாரும்*

பெரியாழ்வார் அமைக்கும் பருவங்களில் வாய்மொழி இலக்கியக்கூறுகள் சற்றென விளங்கும் பகுதி தாலாட்டாகும். குழந்தையை உறங்க வைக்க எண்ணும் தாய் தொட்டிலில் இட்டுத் தாலாட்டுவாள். அக்குழந்தை உறங்கும்வரை தாலாட்டுவது தாயர்தம் இயல்பு. இதனை ஒரு பருவமாக அமைக்கின்றார் ஆழ்வார். இத்தாலாட்டில் தாயரின் இயல்பான உணர்வு கருத்துக்களாய் அமைந்து கவிதை வடிவுடன் திகழ்கிறது.

பெரும்புலவரான பெரியாழ்வாரோ தன் கண்ணனைத் தாலாட்டு கையில் இயல்பான கருத்துக்களை அமைத்து உண்மையான தாயாகத் திகழ்கின்றார். அதனைத் தாலாட்டுப் பாசுரங்கள் வழி உணரலாம். தாலாட்டுப் பொருளின் பொது வடிவத்தை மூன்றெனக்கொள்வர். (1) குழந்தை (2) அதற்க வேண்டிய சாதனங்கள் (3) உறவினர் என அமையும் அவை.

1. ***குழந்தையை மையமாகக் கொண்ட பொருளின் விவரங்கள்:***

   (அ) குழந்தையின் அழகு, அருமருந்தன்ன தன்மை போன்றன

   (ஆ) குழந்தை பெறுவதற்குத் தாய் செய்த நோன்பு

2. ***சாதனங்களை மையமாகக் கொண்ட பொருளின் விவரங்கள்:***

   (அ) சாதனங்களின் அழகு, வேலைப்பாடு ஆகியவற்றைப் பாராட்டல்.

   (ஆ) அச்சாதனங்களைச் செய்தவர்களுக்கும், பரிசாக அளித்தவர்களுக்கும் நன்றி கூறுதல்.

3. ***உறவினரை மையமாகக்கொண்ட கருத்துக்கள்:***

   (அ) உறவினரின் செயல்வீரத்தை, ஈகைத்திறனை, செல்வ வளத்தைப் பாராட்டுதல்.

இவையே தாலாட்டுப் பாடல்களில் அடிப்படைக் கருத்துக்களாகும்[27]. இவை ஆழ்வாரின் தாலாட்டுப் பாடல்களில் மிக்கு இலங்குகின்றன.

1) தாலப்பருவத்தில் பெரியாழ்வார் பத்துப் பாடல்களை அமைக்கின்றார். கண்ணனின் எழில் நலம், எழில் திருமார்பு முதலியவை எடுத்துரைக்கப்பெறுகின்றன. இப்பருவத்திற்கு முன்னால் அமைந்துள்ள திருப்பாதாதிகேச வருணனை கண்ணனின் எழில் நலத்தை அப்படியே படம்பிடித்துக் காட்டுகின்றது. தெய்வத்தைத் தன் மகனாகப் பெற்றமையே

பெருமை தரத்தக்கதாகும். அதுவே அவனுடைய அருமருந்தன்ன தன்மையை விளக்கும்.

2. மாணிக்கங்கட்டி வயிரமிடைகட்டி
ஆணிப்பொன்னாற் செய்த வண்ணச் சிறுதொட்டில்
(பெரியாழ்.1.3.1)

எனப் பிரமன் அனுப்பி வைத்த தொட்டிலின் சிறப்பை அசோதை கூறுகின்றாள். ஈசன், இந்திரன், அமரர்கள், குபேரன், வருணன், திருமகள், நிலமகள், துர்க்கை முதலானோர் அனுப்பிய பரிசுப் பொருளின் வேலைப் பாடுகளும் அழகும் மிக்கு உரைக்கப் பெறுகின்றன. பரிசுப் பொருளை அனுப்பியவர்களுக்கு நன்றி கூறுவதாகப் பாசுரங்கள் அமையவில்லை.

3. எல்லாப் பாசுரங்களிலும் அவ்வக் கடவுளருக்குரிய சிறப்புக்கள் உரைக்கப்பெறுகின்றன. வழுவில் கொடையான் வயிச்சிரவணன் என அமையுமாறு வருணன் முதலான கடவுளரின் செல்வச் சிறப்புக்கள் வெளிப்படுத்தப்பெறுகின்றன.

தாலாட்டுப் பாடலின் அடிப்படையில் அமையும் ஆழ்வாருடைய பாடலின் பாவமைதியும் அத்தாலாட்டின் தன்மையை வெளிப்படுத்துவதாக அமைகிறது. அதன் வாயிலாகப் பெரியாழ்வாருடைய கண்ணன் பிள்ளைத் தமிழ்ப் பாடல்களில் மிகுதியாயும் வாய்மொழி இலக்கியத்தாக்கம் அமையப் பெற்றுள்ளமை விளங்கும்.

வாய்மொழி இலக்கியங்களில் தாலாட்டுக்குத் தனிச்சிறப்புண்டு. பொதுவாக நாட்டுப்புறப் பாடல்களில் ஓசையும், இனிமையும், பொருட் சிறப்பும், உணர்ச்சியும், உயிரோட்டமும் உள்ளன என்றாலும், தாலாட்டுப் பாடல்கள் நல்ல தமிழில் அமைந்து சிறந்த இலக்கியமாக இலங்குவதை இன்றும் காணலாம். அதனால்தான் கவிதை படைக்கும் புலவர்கள் தம்முடைய கவிதைகளில் இத்தாலாட்டினை எடுத்துக் கொண்டனர். கலையுருவின் ஊற்றுக்கண்ணாக விளங்கும் தாலாட்டினைப் பாடிய புலவர் வரிசையில் முதலிடம் பெறுபவர் பெரியாழ்வார்.

'குழவி மருங்கினும் கிழவதாகும்' எனும் தொல்காப்பிய நூற்பா குழவிப் பருவத்திலும் காமப்பகுதிப் பாடப்பெறும் என்பது நுதலிற்று எனக் குறித்துள்ளனர். காமப்பகுதியே குழந்தையிடத்துப் பேசப் பெறும் போது மற்றப் பொருள்களையும் இசைத்தல் இயல்பே என்ற பொருள் மறைபொருளாக விளங்குவது இயல்பு. பாடாண் திணையின் துறைகளைச் சொல்லும்போது தொல்காப்பியர், 'கண்படை கண்ணிய கண்படை நிலையும்'[28] என்ற நூற்பாவால் ஒரு துறையைக் குறிக்கின்றார். துயில் வதற்காகப் பாடப்பட்ட பாடல்கள் மன்னனுக்காகப் பாடப்பெற்றன

வென்றாலும் குழந்தையாய் இருந்த இளவரசர்க்கும் அது பொருந்து மாதலின் தாலாட்டு அதில் அடங்குவதாயிற்று. உறங்கப்புகு முன் பாடுதலையே 'கண்படை கண்ணிய கண்படை நிலை'[29] என்றார். பிற்காலத்தில் குழந்தைகளை உறங்க வைப்பதற்கு மட்டுமே அது வழங்கு வதாயிற்று; தாலாட்டு என்பதாயிற்று என்ற மு.வ.வின் கூற்றும் நோக்கத் தக்கது[30].

தொல்காப்பியர் காலத்தில் இடம்பெற்ற இந்நெறி பெரியாழ்வாரின் பிள்ளைத்தமிழில் தாலப்பருவமாகத் திகழ்ந்தது. தாலாட்டு பற்றிய குறிப்புகள் பல இலக்கியங்களிலும் அமைந்துள்ளன. இத்தாலாட்டு பதினைந்தாம் நூற்றாண்டு முதல் தனிப்பிரபந்த நிலையை அடைந்ததையும் அறிய முடிகிறது. தாலாட்டுப் பிரபந்தங்களில் கீதாசார தாலாட்டு மிகவும் பெயர் பெற்ற ஒன்றாகும். இத்தாலாட்டுகளில் தனி ஒருவரின் சிறப்பினைப் பற்றிய செய்திகளைக் காணமுடிகிறது. இருபதாம் நூற்றாண்டின் கவிஞர்களான பாரதிதாசன், கவிமணி, நாமக்கல் கவிஞர் முதலானோரும் தாலாட்டுப் புனைந்துள்ளனர். பத்தொன்பதாம் நூற்றாண்டில் வைணவப் பதிகளில் உறையும் பெருமாள் மீதும், தாயார் மீதும் தாலாட்டுக்கள் பாடப்பெற்றுள்ளன. இராசகோபால பெருமாள் தாலாட்டு, திருமாமகள் நாச்சியார் தாலாட்டு என்பன சிறந்த எடுத்துக் காட்டுக்கள். இவற்றால் தாலாட்டு இலக்கியத்தின் முன்னோடியாகவும் பெரியாழ்வாரின் தாலாட்டுப் பாடல்கள் அமைகின்றன என்பது விளங்கும்.

## *ஆழ்வாரும் அம்புலிப் பருவமும்*

முழுச்சந்திரனின் எழில் காண்பாரைக் கவரச்செய்யும் வெள்ளி போல் வெளிவந்து ஒளிவிடும் அதனைக் கண்டார் அதன் பேரழகினை வியந்து மகிழ்வர். அழகுணர்ச்சியை, அரிய பொருளைக் குழந்தைக்குக் காட்டின் அக்குழந்தை அதன் அழகிலே ஈடுபட்டுத் தம்செயல் மறந்து நிற்கும். இரவிலே குழந்தைகள் உண்ணும் பொருட்டாக அந்நிலவினைக் காட்டி உணவூட்டும் பழக்கம் இன்றும் தமிழகத்தில் காணப்பெறும் ஒன்று. அதன் அடிப்படைக்கருத்து குழந்தையின் கவனத்தை ஈர்த்து உணவருந்தச் செய்வது.

குழந்தைகளே நிலவை அழைத்து வினவுவதாகவும், பதில் உரைப்பதாகவும் அமையும் வாய்மொழிப்பாடல்களும் உள்ளன.

***அம்புலி அம்புலி எங்கே போறே***
***மலையான் குளத்துக்கு மண்ணெடுக்கப் போறேன்.***
***மண் என்னுத்துக்கு செப்பு பண்ண***
***செப்பு என்னத்துக்கு பணம் போட***

(காற்றிலே மிதந்த கவிதை.ப.81)

என்ற பாடல் அதற்குச் சான்றாக அமையும்.

குழந்தையின் அழுகையைப் போக்கும் வழிகளில் ஒன்று அம்புலி காட்டல், அம்புலிப்பருவம் பிள்ளைத்தமிழில் பத்துப் பருவங்களில் ஒன்றாக அமைகிறது. அப்பருவம் நிலவைக் குழந்தையுடன் ஆடச்சொல்லி அழைப்பது. வாய்மொழி இலக்கியக்கூறுகள் மிகுதியாய்ப் பெற்றிலங்கும் கலித்தொகையிலும் இவ்வம்புலி காட்டுதல் பற்றிய குறிப்பு வருகிறது.

*திங்கட் குழவி வருகென யான்நின்னை*
*அம்புலி காட்டல் இனிது*

(கலித்தொகை)

என அமையும் அக்குறிப்பு. பிற்காலப் பிள்ளைத்தமிழ் நூல்கள் அம்புலிக்கும் பாட்டுடைத் தலைவர்க்கும் ஒப்பு கூறி அம்புலியை அழைத்தலைக் குறிக்கின்றன. அவற்றில் சாம, பேத, தான, தண்டம் என்னும் முறைகள் கையாளப் பெறுகின்றன. பெரியாழ்வாரின் பிள்ளைத்தமிழில் இவற்றினும் வேறான அமைப்புக் காணப்பெறுகின்றது.

***கண்டுயில் கொள்ளக்கருதி கொட்டாவி கொள்கின்றான்***
***உண்டமுலைப் பாலறா கண்டாய் உறங்காவிடில்***

(பெரியாழ்.1.4.6.)

என உண்டது சீரணிக்கும் பொருட்டு நிலாவினை விளையாட அழைக்கின்றார். குழந்தைக்கு அம்புலியைக் காட்டும் வாய்மொழி இலக்கியப்பண்பை ஆழ்வார் புதுநோக்கில் அமைத்துள்ளார்.

## நடை அமைப்பில் வாய்மொழிக் கூறுதல்

சில கூறுகள் செய்யுள் முறையில் திரும்பத் திரும்ப பயன்படுத்தப் படும் முறையைக் காணலாம். இது ஒரு உத்தியாகவும் அமையும். வாய்மொழி இலக்கியத்தில் இம்மரபினை மிகுதியாகப் பின்பற்றுவதைக் காணலாம். வாய்மொழி இலக்கியத்தின் தாக்கத்தால் அமையும் இலக்கியங்களில் இம்மரபும் இடம் பெறுகின்றது. இவ்வாறு அமைவன வற்றை மூன்று வகையாகக் கொள்ளலாம். அவை (1) ஒலி வடிவம் (2) சொற்களமைப்பு (3) கருத்து விளக்கம்.

பெரியாழ்வார் பாசுரங்களில் இம்மூன்றுமே நின்று இலங்கி வாய்மொழி இலக்கியத்தின் தாக்கத்தினை வெளிப்படுத்துகின்றன. ஆரோ ஆரிராரோ எனத் தாலாட்டின் அமையும் ஒலிக்குறிப்பு இலக்கிய வடிவம் பெறும்போது தாலோதாலேலோ என்று அமைகிறது. அச்சோவச்சோ என்றும் ஒலிக் குறிப்புச் சொல்லும், அப்பூச்சி காட்டுகிறான் என்ற சொல்லும் திரும்பத்திரும்ப வரும் ஒலி வடிவத்துக்குச் சான்றாக அமைவன.

சொற்றொடர் அமைப்பும் திரும்பத் திரும்ப வந்து அமைகின்ற மையை ஆழ்வார் பாடல்களில் காணலாம்.

***அப்பன் வந்தப்பூச்சி காட்டுகிறான் அம்மனே வந்தப்பூச்சி காட்டுகிறான்***

(பெரியாழ்.2.1.6)

***அத்தன் வந்தப்பூச்சி காட்டுகிறான் அம்மனே வந்தப்பூச்சி காட்டுகிறான்***

(பெரியாழ்.2.1.7)

என வெவ்வேறு பாசுரங்களில் அமையினும், அவை சொற்றொடர்கள் திரும்பத் திரும்ப வந்து வாய்மொழிக் கூறினை விளக்குவதைக் காட்டு கின்றன.

வாய்மொழி இலக்கியங்களில் அடுத்து அமைவது, மீண்டும் மீண்டும் வரும் கருத்து விளக்கம். கருத்தினை விளக்கும் பொருட்டாக அவை திரும்பத் திரும்ப அமையும். கண்ணனின் அழகை அனுபவிக்கும் அசோதை ஒவ்வொரு உறுப்பின் எழிலையும் கூறி ஏனையோரையும் அழைத்துக் காட்டுகின்றாள்.

***தோள்களிருந்தவா காணீரே சுரிகுழலீர்வந்து காணீரே***

(பெரியாழ்.1.2.11)

***கைத்தலங்கள் வந்து காணீரே கனங்குழையீர் வந்து காணீரே***

(பெரியாழ்.1.2.12)

என்றமையும் தொடர்கள் கருத்துக்களை வலியுறுத்த திரும்பத் திரும்ப தொடர்கள் வருவதற்குக் காட்டாக அமைகின்றன.

## *விழாக்கள்*

பொதுவாகப் பெற்றோர் குழந்தைக்கு மூன்று விழாக்களைக் கொண்டாடக் காணலாம். அவையாவன, பெயரிடுதல், காது குத்துதல், முதலாண்டு நிறைவு என்பவை. இவை பற்றிய நிகழ்வுகள் வாய்மொழி இலக்கியத்தில் வெளிப்படக் காணலாம். இம்மரபின் தாக்கம் ஆழ்வார் பாடல்களிலும் அமைகிறது. கண்ணன் பிறந்த பன்னிரண்டாம் நாள் ஆயர் பாடியில் விழாக் கொண்டாடியதைப்,

***பத்துநாளும் கடந்த இரண்டாம் நாள் எத்திசையும் சயமரங் கோடித்து***

(பெரியாழ். 1.1.8)

என்று குறிப்பிடுகின்றார் ஆழ்வார். பன்னிரண்டாம் நாள் குழந்தைக்குப் பெயரிடுகின்ற மரபினை ஒட்டி இது அமைக்கப்பெறுகின்றது. ஆழ்வார் காதுகுத்தல் நிகழ்ச்சியையும், அமைக்கின்றார். காதுகுத்த அசோதை

அழைத்தலும், அதற்குக் கண்ணன் மறுப்புரையும் அமைவதால் அதனைக் கண்ணன் வளர்ந்த நிலையில் செய்ததாகவே கொள்ளலாம்.

பெரியாழ்வார் பலவகையாலும் வாய்மொழி இலக்கியக் கூறுகளை மிகுதியாக எடுத்தாளுகின்றார். வாய்மொழி இலக்கியப் பண்பும் வரிவடிவ இலக்கிய வடிவும் இணைந்து புதுவகையான பக்தி இலக்கியம் மலர ஆழ்வார் வழிவகுத்தார். வாய்மொழி இலக்கியத் தாக்கம் மிக்க மைந்த ஆழ்வாரின் பாடல்களை அடியொற்றி எழுந்த ஏனைய பிள்ளைத் தமிழ் நூல்களெல்லாம் இலக்கணத்தால் வரையறைக்குப்பட்டதாக அமைகின்றன. ஆனால் ஆழ்வாரின் கண்ணன் பிள்ளைத்தமிழ் இயல்பான உணர்வோடு அமைந்து விளங்குகின்றது.

## குறிப்புகள்

1. மு. அருணாசலம், இலக்கிய வரலாறு (10ஆம் நூற்றாண்டு) ப.212
2. மு. அருணாசலம், இலக்கியவரலாறு (14 ஆம் நூற்றாண்டு) ப.111
3. மு. சண்முகம் பிள்ளை, சிறு பிரபந்தங்கள், தமிழ் இலக்கியக் கொள்கைகள் 2, ப.75
4. மேற்படி. ப. 78
5. தொல். பேரா. ப.444
6. தொல். புறத். ப.29
7. தொல். கற்பியல். ப.88
8. ஐங்குறுநூறு 403
9. மேற்படி 406
10. பன்னிரு பாட்டியல் நூ.101-104
11. மேற்படி நூ 108 - 112
12. மேற்படி நூ 76 -77
13. பெரியாழ் 2.2.1
14. மேற்படி 2.2.2.
15. மேற்படி. 1.1.8
16. மேற்படி 1.9.5
17. மேற்படி 1.1.6
18. மேற்படி 2.3.2.
19. மேற்படி 2.4.1
20. மேற்படி 2.8
21. மேற்படி 2.8.9
22. மற்படி 2.4.3
23. மேற்படி 2.4.4
24. மேற்படி 2.9.7
25. மேற்படி 2.8.9
26. டாக்டர். பா.ரா. சுப்பிரமணியன் தமிழக நாட்டுப் பாடல்கள் ப.26
27. மேற்படி. ப.182
28. தொல். புறத். நூ. 29
29. சா. வளவன், நாட்டுப்புற இலக்கியப் பார்வைகள், ப.77
30. இரண்டாவது உலகத் தமிழ்மாநாட்டு மலர். ப.72

4

# கலைநலம்

ஆழ்வார்கள் இனிய தமிழில் பாசுரங்களைப்பாடிச் சிறந்த இலக்கியங்களைப் படைத்தவர்களாவர். அப்பாசுரங்கள் கலை நலத்துடன் திகழ்வன. பெரியாழ்வார் பாசுரங்களில் அமையும் கலைநலத்தை நோக்கின் அவரைப் பெரும்புலவராய் அறியமுடியும். கற்பனை, அணிநலம், உணர்த்தும் முறை, வருணனை, நடைச்சிறப்பு முதலானவை அவர் படைப்புக்களில் இடம்பெற்று அவரைச் சிறந்த புலவராய் அடையாளம் காட்டுகின்றன.

## *கற்பனை*

கற்பனை என்பது மனத்து உணர்ந்ததை வெளிப்படுத்தும் மானிட சக்தி, ஏனைய உயிர்களுக்குக் கிடைக்கா இவ்வரிய சிறப்பு மனிதர்க்கே உரியது. இக்கற்பிக்கும் முறையால் கலைகள் எழுந்தன; வளர்ந்தன; வடிவம் பெற்றன. அக்கலைகளில் எல்லாம் சிறப்புடையது இலக்கியக் கலை. இக்கலைக்கும் உணர்ச்சி அடிப்படையாக எழும் கற்பனை காரணமாக அமைகிறது.

இலக்கிய உலகில் மேலை நாட்டின் திறனாய்வாளர்களே கற்பனையைப் பிரித்து வகைப்படுத்தி அதற்குத் தனிவடிவம் தந்தனர். நீண்ட வரலாறு கொண்ட தமிழ் இலக்கிய உலகில் கற்பனை வேறுவகையில் அமைந்திருந்தது. சங்க காலக் கற்பனை அகம், புறம் எனும் நோக்கில் வெளிப்பட்டது. இடைக்காலக் கற்பனைக்குப் பக்தி நிலமாயும் தத்துவம் நீராயும் திகழ்ந்தது. தற்காலக் கற்பனை வானாகிப் பல்வகை இலக்கியங் களைத் தன்னகத்தே மீனாகக் கொண்டுள்ளது.

கற்பனை என்னும் சொல்லாட்சி பண்டைத் தமிழ் இலக்கியங்களில் இடம் பெறவில்லை. திருமூலரே அச்சொல்லாட்சியை முதன் முதல் பயன் படுத்துகின்றார்[1]. அன்றியும் புனைந்துரை, கட்டுரை ஆகிய தொடர்களும் கற்பனையைக் குறிப்பதாகக் கொள்வர்[2]. இக்கற்பனையின் விளைவாகவே தமிழில் அணி இலக்கணம் தோன்றி வளர்ந்ததை அறியலாம்.

இலக்கியம் தரும் இன்பம் இணையற்றது. அவ்வின்பம் படைப் போனுக்கும், துய்போனுக்குமுரியது. இலக்கியக்கலைக்கு அடிப்படையாக

அமைபவை உணர்ச்சி, கற்பனை, கருத்து, வடிவம் என்பன. இவற்றில் கற்பனையே, உணர்ச்சி, கருத்து இரண்டையும் நெஞ்சில் குழைத்து மானத வடிவம்கொண்டு துய்ப்பார்க்கு உணர்த்த வல்லது. இக் கற்பனையைப் பெரியாழ்வார் எடுத்தாளும் சிறப்பு பாராட்டுவதற் குரியதாக அமைகிறது.

கற்பனையை இரு வகையாகக் காட்டுவர். உள்ளதையே சிறப்பித்து உயர்வு நவிற்சியை அளவாகக் கூட்டிக்கூறுவது உண்மைக்கற்பனை. இல்லாததைப் புனைந்து வரம்பு கடந்து சேர்த்துக்கூறுவது வெறுங்கற்பனை[3]. இவற்றின் அடிப்படையிலேயே மேலைநாட்டார் கற்பனையை வகைப் படுத்துகின்றனர். இவ்விருவகைக் கற்பனையையும் பெரியாழ்வார் எடுத்தாளுகின்றார்.

***எல்லியம்போ திருஞ்சிறைவண் டெம்பெருமான் குணம்பாடி***
***மல்லிகைவெண் சங்கூதும் மதிளரங்க மென்பதுவே***

(பெரியாழவார்.4.8.3.)

என அமையும் தொடர்கள் உண்மைக்கற்பனைக்குச் சான்றாக அமையும். தாம் கண்டதை, எண்ணியதுடன் இணைத்துக்கூறும் சிறப்பும் இக்கற்பனை யின்பால் அமையும். ஆதலின் உள்ளதை உணர்ந்தவாறு தெரிவிப்பது இக்கற்பனையின் தன்மையாகும். வெறுங்கற்பனை என்பது இல்லாததைப் புனைந்து உயர்வு நவிற்சியாக வரம்பிகந்துக் காட்டுவதாகும். உள்ளதை விழைந்தவாறு கற்பனை அமைந்தபோதிலும் அது சிறப்பெய்தவில்லை. இத்தகைய உயர்வு நவிற்சியாக வருவனவற்றில் உண்மை என்னும் உள்ளீடு இல்லாத காரணத்தால் வெறுங்கற்பனை என வேறுபடுத்துவர். பெரியாழ்வாரின் பாசுரம் இவ்வகைக் கற்பனையை வெளிப்படுத்துகின்றது

***தம்மைச் சரணென் றதம்பா வையரைப்***
***புனமேய் கின்றமா னினங்காண் மினென்று***
***கொம்மைப் புயக்குன் றர்சிலை குனிக்கும்***
***கோவர்த் தனமென்னும் கொற்றக் குடையே***

(பெரியாழ். 3.5.3.)

என அமையும் பாசுரம் அதனை விளக்கும்.

பிளாட்டோ காலந்தொட்டு இன்றுவரை நிகழ்ந்துள்ள கற்பனை பற்றிய கொள்கைகளைத் திரட்டி சி.டி.வின்சென்டர் என்பார் சிறந்த அடிப்படையில் நுட்பமாகப் பகுத்துள்ளார். இப்பாகுபாடே அனைத்துத் திறனாய்வாளர்களாலும் போற்றப்பெறுகின்றது. அவர் கற்பனையைப் படைப்புக் கற்பனை, இயைபுக்கற்பனை, கருத்து விளக்கக் கற்பனை என மூன்று வகைப்படுத்துகின்றார்[4].

### *படைப்புக் கற்பனை*

கவிஞன் தன்னனுபவத்தால் பல பொருள்களிலும் பல பண்புகளைக் காணுகின்றான். அவற்றை எவ்விதக்கட்டுப்பாடுமின்றித் தானே படைத்துப் புதியதொரு நிறைவான வடிவைக்காட்டும் திறன் படைப்புக் கற்பனை எனப்படும். தான் கண்ட காட்சியில் அல்லது உணர்ந்த பொருளில் எவ்வித மாற்றமும் இல்லாது முழு நிறைவுடைய அழகுப்பொருளாகக் கவிஞன் படைக்கும்போது அவனுக்குத் துணையாக அமைவது படைப்புக் கற்பனையே[5]. உள்ளத்துள் உணர்வுடன் பதிந்த சிலவற்றை வேறுவேறான பகுதிகளுடன் இணைத்தமைப்பது இக் கற்பனை[6]. வேர்ட்ஸ்வொர்த்தின் ஆக்கக் கற்பனையும் (Constructive Imagination) காண்டின் ஆக்கக் கற்பனையும் (Productive Imagination) வின்சென்டரின் இப்படைப்புக் கற்பனையும் புத்தாக்கம் என்னும் நிலையில் தம்முள் ஒப்புமை காட்டி அமைகின்றன[7]. இப்படைப்புக் கற்பனையைப் பெரியாழ்வார் பல்வகையாலும் கையாளுகின்றார்.

> ***பொருப்பிடைக் கொன்றைநின் றுமுறி யாழியும் காசும் கொண்டு***
> ***விருப்பொடு பொன்வழங் கும்வியன் மாலிருஞ் சோலை யதே***
>
> (பெரியாழ்வார்.4.3.1.)

என அவர் காட்டும் திருமாலிருஞ்சோலைக் காட்சி ஒன்று அதற்குச் சான்றாகும். கொன்றை மரங்களை வள்ளலாகக் காணும் கற்பனை இதனைப் படைப்புக் கற்பனை ஆக்குகின்றது.

### *இயைபுக் கற்பனை*

உள்ளத்து உறைந்து கிடக்கும் உணர்ச்சி தனக்குப் பொருத்தமான மற்றொரு உணர்ச்சியை நினைவுக்குக் கொண்டுவரும். அப்போது மனத்திற் பதிந்திருந்த நிகழ்ச்சியை அது கலையாக மலரச்செய்யும். அதாவது ஒத்த கருத்தியற் வடிவங்களை உடைய பொருள், கருத்து, உணர்ச்சி ஆகியவற்றை இயைபுபடுத்திப் புனைந்துரைப்பது. இதனை இயைபுக் கற்பனை என்பர். புறத்தில் காணலாகும் பொருளோ உணர்ச்சியோ உள்ளத்தில் கருத்தியல் வடிவம் ஒன்றை ஆழப்பதியுமாறு செய்கிறது. பின்னர் அதேவகையான உணர்ச்சி தூண்டப்பெறும்போது உள்ளத் தனுபவம் அத்தகைய நிகழ்ச்சியைக் கிளர்ந்தெழச்செய்கிறது. இந்நிலையில் உணர்ச்சி ஒற்றுமையால் தொடர்புள்ள கருத்தியல் வடிவங்களை இயைபுப்படுத்தி நிற்கும் சொற்சித்திரங்கள் அமையும்.

பெரியாழ்வார் பாடல்களில் மிகுதியும் அமைவது இவ்வகைக் கற்பனையே. அவர் கண்ணனைப் பிள்ளையாய் எண்ணிப்பாடும்

பாடல்களும் பாராட்டி வளர்க்கும் பாடல்களும் இக்கற்பனையின் பாற்படுவன. ஆண்டாளின் குழந்தைப்பருவத்தில் அனுபவித்த ஆழ்வாரின் உணர்ச்சி கண்ணனைப் பாலகனாய் எண்ணியபோதும் ஏற்பட்டது. அதன் பயனாய் இருநூறுக்கும் மேற்பட்ட இனிய பாசுரங்களை அமைத்துக் காட்டுகின்றார் பெரியாழ்வார். தாம் கண்ட இறையனுபவத்தை,

***கடல்கடைந் தமுதம் கொண்டு கலசத் தைநிறைத் தாற்போல்***
***உடலு ருகிவாய் திறந்து மடுத்துன்னை நிறைத்துக் கொண்டேன்***

(பெரியாழ்வார்.5.4.4.)

என அவர் காட்டும் பாசுரம் இயைபுக் கற்பனைக்கு எடுத்துக்காட்டாகும்.

## கருத்து விளக்கக் கற்பனை

வின்செஸ்டர் கற்பனையின் மூன்றாம் வகையாக அமைவது இக்கற்பனை. பொருளுணர்ச்சி, கருத்து முதலியவற்றிடையே பொதிந்துள்ள பயன் மதிப்புக்களை ஒருவன் தன்னுள்ளத்தால் உணர்ந்து அவற்றிடையே ஒரு கருத்துவிளக்கம் தர உதவும் அறிவுத் திறனே கருத்துவிளக்கக் கற்பனை. ஒரு புலவன் தான் கண்ட காட்சிகளை அப்படியே கூறாது அக்காட்சிகளைக் காண்பதால் தன்னுள்ளத்தில் பொங்கி வரும் உணர்ச்சி களைச் சிந்தனை யாக்கிச் சொற்களாய் வடித்துத் தருவது கருத்து விளக்கக் கற்பனையின் செயற்பாடு. ஒருபொருள் அல்லது நிகழ்ச்சியிலிருந்து அதன் ஆன்மீக மதிப்பை அல்லது உட்கருத்தை நுட்பமாகக் கொண்டு அதன் பகுதிகளையோ, தன்மைகளையோ எடுத் தியம்புவது கருத்து விளக்கக் கற்பனை. கவிதைக்குத் தேவையான உண்மை உணர்ச்சியைத் தரவல்லது இக்கற்பனையே.

பெரியாழ்வார் பாடல்களில் இக்கருத்து விளக்கக் கற்பனை அமைகிறது. இறையனுபவம் பற்றி அமையும் பாசுரங்கள் பல அதனை எடுத்துரைக்கின்றன. ஆழ்வார் தம்முள் இறைவனை நிறுத்தியதையை,

***பொன் னைக்கொண் டுரைகல் மீதே நிறமெழ வுரைத்தாற் போல***
***உன் னைக்கொண் டென்னா வகம்பால் மாற்றின்றி உரைத்துக் கொண்டேன்***

(பெரியாழ். 5.5)

என்று பாடுகின்றார். சீவான்மா பரமான்மா வயப்படும் தன்மையைப் பொன், உரைகல் இவற்றின் செயல்வழிக்காட்டித் தம் கருத்தை ஆழ்வார் விளக்க முயல்வதைக் காணலாம்.

மேற்கண்ட விளக்கங்களால் பெரியாழ்வார் தம் பாடல்களில் கற்பனையின் வகைகளை எடுத்தாளும்தன்மை விளங்கும். அக்கற்பனைகள்

தத்துவம், பக்தி ஆகியவற்றுடன் இணைத்துக் கூறப்பெறும்போது அவற்றின் சிறப்புக்கள் ஒன்றின் ஒன்று உயர்ந்து விடுகின்றன. ஆதலின் ஆழ்வார் இலக்கியத்திறன் பற்றிய நோக்கில் மிகச் சிறப்புடையவராய்த் திகழ்கின்றார்.

### அணிநலம்

இயல்பான அழகை ஈடுபாட்டோடு புனையும்போது இன்னும் அது சிறந்து விளங்கும். இக்கருத்து எல்லாவற்றிற்கும் பொருந்தும் கட்புலனுக்கு அறியலாகும் பொருள்களுக்குரிய சிறப்பாக மட்டுமின்றி, மனத்திற்கு அறியலாகும் இலக்கிய இன்பத்திற்கும் இது பொருந்தும். இக்கருத்தினை வலியுறுத்தி நன்னூலாரும் செய்யுள் அமைக்கும் விதத்தை,

*பல்வகைத் தாதுவின் உயிர்க்கு உடற்போல*
*சொல்லால் பொருட்கிடனாக உணர்வினில்*
*வல்லோர் அணிபெறச் செய்வன செய்யுள்*

(நன்னூல்.நூ.26)

என்று கூறுகின்றார். ஆதலின் இலக்கியத்துக்கு அழகைத் தருவதாயும் இன்றியமையாததாயும் அமைவது அணியே என்பது பெறப்படும். மேலை நாட்டாரின் கற்பனை வகைகளை ஒத்து அமைவது தமிழிலக்கிய அணி வகைகளாம். கற்பனைக் கருவூலமாகத் திகழும் செய்யுட்கு, அணிநலமும் இணைந்து அமையப்பெறின் அழகுடைய பொன்னாரத்தில் ஒளியுடைய மணியைப் பொறுத்தியது போன்றமையும்.

கவிஞர்கள் தன்னுடைய உணர்ச்சிகளைப் பாடல்களாய் மாற்றும் போது துய்ப்பார் மிகுதியான இன்பம் பெற வேண்டும் எனக் கருதுகின்றனர். கூறும் கருத்து இயல்பு நவிற்சியாய் அமையின் இலக்கிய இன்பம் தோன்றாது. ஆதலால் அவ்வின்பம் அமைவதற்குச் சில உத்திகளைக் கையாண்டனர். அவையே பின்னர் அணிகளாய் அமைந்தன. அணி என்ற சொல்லுக்குப் பிங்கல நிகண்டு,

*படையின துறுப்புமொப் பனையு மழகும்*
*பெருமையும் கலனு மன்பு மணியெனல்*

(பிங்கல நிகண்டு. 3050)

என உரைக்கின்றது. ஈண்டு அணி என்பது அலங்காரம், அழகு, பெருமை எனும் பொருளில் உரைக்கப்பெறுகின்றது.

### அணியும் தொல்காப்பியமும்

தொல்காப்பியத்தில் இவ்வணி உவம இயலிலும், மெய்ப் பாட்டியல்லும் உவமையாகவும், இறைச்சியாகவும், உள்ளுறையாகவும் கூறப்பட்டுள்ளது. பிற்காலத்தில் அணியின் வகைகள் பல்கிப் பெருகின.

இவ்வணி இலக்கணநூல்களில் தண்டியலங்காரம், மாறனலங்காரம் என்பவை சிறப்புடையவை. இவற்றில் தண்டியலங்காரம் பெருவழக்குடையதாக அமைகின்றது.

பிற்காலத்தில் இவ்வாறு அணிகள் பெருகினாலும் அவற்றைத் தொல்காப்பியர் குறிக்கவில்லை. அவர் குறிப்பிடுவது உவமை அணி ஒன்றை மட்டுமே. இவ்வணியே ஏனைய அணிகளுக்கெல்லாம் அடிப்படையாக அமைவது.. ஆதலின் உவமையை அணிகளின் தாய் எனக்கொள்ளலாம். இவ்வுவமை அணியைத் தொல்காப்பியம் விரிவாக எடுத்துரைக்கின்றது. மேலை நாட்டு ஆய்வாளர் உவமை, உருவகம் எனும் இரு அணிகளையே கொள்கின்றனர். இவ்விரு அணிகளும் அடங்கியதாகத் தொல்காப்பியரின் உவமை இயல் அமைந்திருப்பது நோக்கத்தக்கது. உவமையணியின் விளக்கமாகச் சில அணிகள் பிற்காலத்தில் வேறு பெயருடன் திகழ்ந்தன. வேறு புதிய அணிகளும் தோன்றின. வேற்றுப் பொருள் வைப்பணி, வேற்றுமையணி, விபாவனை அணி, ஒட்டணி முதலான அணிகளில் இரு பொருள்களை ஒப்பிட்டுக் கூறும் கருத்து வெளிப்படையாகவோ மறைமுகமாகவோ தோன்றுதலின் அவற்றை உவமையின் திரிபுகளாகப் பேராசிரியர் உரைகொண்டு காட்டுவார் மு.வ.[8]

## *தொல்காப்பியமும் உவமையும்*

சிறப்புடன் அமையும் உவமையை நான்கு வகையாகக் காட்டும் தொல்காப்பியம்.

> ***வினைபயன் மெய்யுரு என்ற நான்கே***
> ***வகைபெற வந்த உவமத் தோற்றம்***

(தொல். உவம. நூ. 1)

என உவமை நால்வகைப்படுத்தி உரைக்கப்பெறும். இவ்வாறு அமையும் உவமை பொருளை விடவும் உயர்ந்ததாய் அமையவேண்டும். இந்நால் வகையினையும் தண்டியலங்காரம் மூன்று வகையாகக் குறிப்பிடும். இவ்விரு இலக்கண நூல்களின் வழியும் பெரியாழ்வார் பாசுரங்களின் அணிச்சிறப்பு இங்கு எடுத்துரைக்கப்பெறுகின்றது. உலக நிகழ்ச்சிகளை எத்தனைக் கூர்ந்து நோக்கியுள்ளான் புலவன் என்பதைப் புலப்படுத்து முகத்தால் உவமை அவனது புலமையைக் காட்டுகிறது. அவ்வகையில் பெரியாழ்வாரின் புலமைச் சிறப்பு அவருடைய உவமை வழி வெளிப்படக் காணலாம்.

## *வினையுவமம்*

'புலியன்ன மறவன்' என விளக்கப்பெறும் வினையுவமம். ஆழ்வார் கண்ணனை யானைக்கு ஒப்பாகக் கூறும் இயல்பு பெரிதும் சிறப்புடையதாக அமைகிறது.

*வந்த மதலைக் குழாத்தை வலிசெய்து தந்தக் களிறுபோல் தானே விளையாடும்*

(பெரியாழ். 1.2.6.)

*ஆனையென ஒருகாலாடுக*

(பெரியாழ். 1.5.4.)

*தொடர்சங் கிலிகை சலார்பிலா ரென்னத் தூங்கு பொன்மணி யொலிப்பப்*
*படுமும் மதப்புன லல்சோர வாரணம் பையநின் றூர்வதுபோல்*

(பெரியாழ். 1.7.1.)

*வெண்புழு திமேற்பெய்து கொண்ட ளைந்த*
*தோர்வே ழத்தின் கருங்குன்றுபோல்*

(பெரியாழ்.1.7.9.)

எனக் கண்ணனைக் களிறாகவும் ஆனையாயும் வாரணமாயும் வேழமாயும் உவமித்துக் கூறும் அழகு சிறப்புடையது.

## பயனுவமம்

'மாரியன்ன வண்கை' என்பது உரையாசிரியர்களால் காட்டப் படும். இதனையொத்த உவமம் ஆழ்வாரிடத்தும் அமைகிறது. கண்ணனை அமுதாய் அழைக்கும் உவமை பெரியாழ்வார் திருமொழிகளில் அமைகிறது. திருமாலைத் தன்னுள் அடக்கிக் கொண்டதைப் பயனுவமம் வழியாகக் காட்டுகின்றார் ஆழ்வார்.

*கடல்கடைந் தமுதம் கொண்டு கலசத்தை நிறைத்தாற்போல்*
*உடலுருகி வாய்திறந்து மடுத்துன்னை நிறைத்துக் கொண்டேன்*

(பெரியாழ்.5.4.4.)

என அமுதத்தால் வரும் பயனை ஆண்டவன் தன் மனத்துள் வந்ததன் பயனோடு ஒப்பிட்டுக் கூறுவதன் சிறப்பு விளங்கும்.

## மெய்யுவமம்

'துடியிடை' என்பது இதற்குரிய காட்டாகும். இவ்வுவமத்தை ஆழ்வார் பல பாசுரங்களில் எடுத்தாளுகின்றார். கண்ணனின் எழில் உறுப்புக்களை ஆழ்வார் தாமரைக்கு உவமித்துக் காட்டும் சிறப்பு மிக்கு இலக்கிய இன்பம் பயப்பது,

*சந்த மழகிய தாமரைத் தாளர்க்கு*

(பெரியாழ். 1.3.3.)

*செங்கமலக் கழலிற் சிற்றிதழ் போல்விரலிற்*

(பெரியாழ்.1.5.10)

*சிறுகுட்டச் செங்கமல அடியும் வெதும்பி*

(பெரியாழ். 3.3.4.)

என அமைவன மேற்கூறிய கருத்தை வலியுறுத்துவன. இவை கண்ணனின் திருவடியை உவமிப்பவையாகும்.

*செப்பா டுடைய திருமா லவன்தன் செந்தா மரைக்கை விரலைந் தினையுங்*
*கப்பா கமடுத் துமணி நெடுந்தோள் காம்பா கக்கொடுத் துக்கவித் தமலை*

(பெரியாழ்.3.5.6)

எனத் தாமரையைக் கைக்கு உவமிக்கும் சிறப்பும் ஆழ்வாரிடம் அமைகிறது. கண்ணனின் திருவாய்க்கும்[9], திருக்கண்களுக்கும்[10], திருமுகத்திற்கும்[11], திருக்குழலிற்கும்[12] தாமரையை உவமிக்கும் ஆழ்வாரின் புலமைச் சிறப்பு இலக்கிய இன்பத்தை உயர்த்துவதாய் அமைந்துள்ளது.

## *உருவுவமம்*

'பொன்மேனி' என்பது உருவுவமம். பெரியாழ்வாரின் திருமொழி களில் அமையும் உருவுவமங்கள் பலவாம். அவற்றில் கண்ணனின் நிறத்தைப் பல பொருட்களின் நிறத்திற்கு உவமிக்கும் அழகு சிறப்புடையதாக அமைகின்றது.

*செங்கட் கருமுகிலே*

(பெரியாழ். 1.3.4.)

*காயா மலர் நிறவா கருமுகில் போலுருவா*

(பெரியாழ். 1.5.6)

எனக் கண்ணனை முகிலுக்கும் காயாமலர்க்கும் ஒப்பிட்டுக்கூறும் பல பாசுரங்கள். கருவுடைய மேகங்களைக் கண்டால் கண்ணனைக் கண்டதாகக் கூறுவார் ஆழ்வார்[13]. பலதேவனை வெள்ளிப் பெருமலைக்கும் கண்ணனைக் கருமலைக்கும் உவமிக்கும் தன்மை ஆழ்வாரிடம் அமைகிறது.

தொல்காப்பியர் காட்டும் இந்நால்வகை உவமங்களையன்றிப் பிற்காலத்து எழுந்த தண்டியலங்காரத்தில் காணலாகும் உவமை வகைகளில் சிலவும் பெரியாழ்வாரின் பாசுரங்களில் அமைகின்றன. பல்பொருள் உவமையும் இல்பொருள் உவமையும் அதற்குச் சான்றுகளாகும்.

தொல்காப்பியம், தண்டியலங்காரம் என்னும் இவையன்றி வரலாற்றுச் செய்தியினையும், புராணச் செய்தியினையும் உவமையாக்கும் சிறப்பும் ஆழ்வாரிடம் அமைகிறது.

பாண்டிய மன்னன் ஒருவன் மேருமலையில் கயலைப் பொறித்தது போன்று திருப்பொலிந்த சேவடியை என் தலையின்மேல் பொறித்தான் இறைவன் என்று பொருள்பட அமையும் பாசுரம் வரலாற்றுச் செய்தியை உவமையாக்குகிறது[14].

ஆயிரம் தலையுடைய ஆதிசேடன் இவ்வுலகைத் தாங்குகின்றான் என்பது புராணச் செய்தி. அதனைக் கண்ணன் குடையாகப் பிடித்திருக்கும் கோவர்த்தன கிரிக்கு ஒப்பாகக் கூறுவது, புராணச் செய்தியை உவமை யாக்கியதன் சிறப்பை வெளிப்படுத்துவது[15].

பெரியாழ்வார் உவமைகளை அமைக்கும்போது பேச்சு வழக்குத் தொடர்களையும் உவமையாக்கும் சிறப்புக் காணப்பெறுகின்றது. அவை உலக நிகழ்ச்சிகளாகவும் அமைகின்றன. 'செய்த்தலை எழுநாற்றுபோல்'[16] 'கன்றுகால் மாறுமாபோல்'[17] என்பன அதற்குச் சான்றுகளாகும்.

### *உவம உருபுகள்*

உவம உருபுகள் பலவாக அமையும். அவற்றைத் தொல்காப்பியம் விரிவாக எடுத்தோதுகின்றது. பெரியாழ்வாரும் பல்வகையான உவம உருபுகளைக் கையாளுகின்றார். ஆழ்வார் பத்துவகையான உவம உருபுகளை எடுத்தாளுகின்றார். போல எனும் உருபினை, போல், போலே என்றும் கையாளுகின்ற சிறப்பும் ஆழ்வாரிடம் அமைகிறது. உவம உருபுகளோடு சில விகுதிகளைச் சேர்த்து போல்வான் ஒப்பான் என்றும் உவம உருபுகளை ஆழ்வார் அமைக்கின்றார்.

### *உருவக அணி*

உவமை அணியுடன் சிறப்புடைய தொடர்பு கொண்டு திகழ்வது இவ்வணி, தொல்காப்பியர் உருவக அணி எனக்கொள்ளாராயினும்,

***பொருளே உவமம் செய்தனர் மொழியினும்***
***மருளறு சிறப்பினஃது உவமமாகும்***

(தொல். உவம. நூ. 9)

எனும் நூற்பாவால் அதனைக் குறிப்பதாய்க் கொள்வர். உவமைக்கும் பொருளுக்கும் வேற்றுமை தோன்றக் கூறுவது உவமை அணி. இருபொருளையும் வேறு வேறாகக் கருதாது ஒன்றையே மற்றதாய்க் காணுவது உருவக அணி. கவிதைக்கு இனிமை தருவதாய் அமைவன வற்றுள் இவ்வணியும் ஒன்றாக அமையும்.

*உருபின்றிக் கூறும் சொற்கள் மிகுந்த வன்மையும் பொருளழகும் உடையனவாக இருத்தலை அறிந்தனர். கரும்புச்சாறு திரண்டு பாகாகிக் கற்கண்டு நிலையைப் பெறும்போது கற்கண்டு சுவை மிகுந்து காணப்பெறுவது போல உவமையும் சுருங்கி அடங்கி உருவகமாக வெளிப்படுங்கால் அவ்வடக்கத்தில் புதிய சுவையும் ஆற்றலும் பிறப்பது ஒரு விந்தையே*

என்று உருவகத்தின் சிறப்பைக் குறிப்பிடுவர்[18]. இருவேறு பொருள்களை ஒன்றுபடுத்தி இயைப்பதால் இரண்டினைச் சார்ந்த தனித்தனி உணர்ச்சிகளும் சேர்ந்து ஆற்றல் மிக்க உணர்ச்சியாய் வளர்கிறது. அவ்வுணர்ச்சியால் பாட்டு பெறும்பொருளின் பயன் பெரிதாகிறது. ஆதலின் இலக்கிய இன்பத்திற்கு உருவக அணி இன்றியமையாததாகக் கருதப்பெறுகிறது.

தொல்காப்பியத்தில் விளக்கமாகக் கூறப்பெறாத இவ்வணி பேராசிரியர் காலத்தில் வழக்கில் வந்துவிட்டதென்பதை அவர்தம் உரை வாயிலாக் காட்டுவர். தண்டியலங்காரம் உருவக அணியை,

*உவமையும் பொருளும் வேற்றுமை ஒழிவித்து*
*ஒன்றென மாட்டின் அஃதுருவக மாகும்*

(தண்டியலங்காரம். நூ. 36)

என்று குறிப்பிடுகின்றது. இலக்கிய இன்பத்திற்குக் காரணமாய் அமையும் இவ்வணி பெரியாழ்வார் பாடல்களிலும் சிறப்பாக அமைகின்றது. உருவக அணியாய் வெளிப்படும் அவர்தம் பாசுரங்கள், ஆழ்வாருடைய கருத்தை விளக்கும் கலங்கரை விளக்கமாக அமைகின்றன.

இறைவனிடம் ஈடுபட்ட மனம் அவனைத் தன்னுள் இறுத்திக் கொள்ள வேண்டும். அவ்வாறு இறைவனை நிறுத்திய தன்மையைக் கோவிலுக்கு உருவகிக்கின்றார் பெரியாழ்வார்.

*மார்வ மென்பதோர் கோயி லமைத்து*
*மாதவ னென்னும் தெய்வத்தை நாட்டி*
*ஆர்வ மென்பதோர் பூவிட வல்லார்க்*
*கரவ தண்டத்தி லுய்யலு மாமே*

(பெரியாழ்வார். 4.5.3)

என அமையும் தொடர்கள் மேற்கூறிய கருத்தை வலியுறுத்துவன.

மாலிருஞ்சோலைக் கொன்றை வழங்குவனவற்றை முறியாழியும் காசும் கொண்டு விருப்பொடு பொன் வழங்கும் எனப் பொன்னாக

உருவாகிக்கும் சிறப்பு ஆழ்வாரிடம் அமைகிறது. உருவகம் உணர்ச்சியைப் பெருக்குமாற்றலைச் சிறுசிறு சொற்களாலும் உணரலாம் என்று குறிப்பர்[19]. அத்தகு உருவகத் தொடர்கள் பெரியாழ்வாருடைய பாசுரங்களில் அமைகின்றன. 'பிறவி என்னும் பெருங்கடல்' 'இறவு செய்யும் பாவக்காடு' 'அறிவை என்னும் அமுதவாறு'[20] என்பனவும் 'கொங்கைச் சிறுவரை என்னும் பொதும்பு'[21] என அமையும் தொடரும் மேற்கூறிய கருத்துக்கு எடுத்துக்காட்டுகளாக அமைவன. உருவகத் தொடராய் அமையும் இவை ஆழ்வாரின் அனுபவ உணர்வின் உரைகல்லாக திகழ்கின்றன. இவ் வாறமையும் உருவக அணி பெரியாழ்வாரின் புலமைத்திறனைப் பறை சாற்றுகின்றது.

பெரியாழ்வார் பாசுரங்களில் உவமையும், உருவகமும் சிறப்பாக அமைகின்றமையின் இவை இரண்டும் விரிவாக ஆராயப்பெற்றன. இவையன்றித் தண்டியலங்காரம் குறிப்பிடும் அணிகளும் ஆழ்வார் பாசுரங்களில் அமைகின்றன .

*என்சிற்றாயர் சிங்கமே சீதை மணாளா சிறுகுட்டச் செங்கண் மாலே*

(பெரியாழ். 3.2.5.)

என பொருட் பின்வருநிலை அணியும்

***ஆயிரம் தோள் பரப்பி முடியாயிரம் மின்னிலக***
***ஆயிரம் பைந்தலைய அனந்தசயனன் ஆளும்மலை***
***ஆயிரமாறு காளும்சுனை கள்பல வாயிரமும்***
***ஆயிரம் பூம் பொழிலுமுடை மாலிருக் சோலையதே***

(பெரியாழ்.4.3.10)

என சொற்பொருட் பின்வருநிலை அணியும்,

*மூர்க்குப் பேசுகின்றான் இவன் என்று முனிவாயேலும் என்நாவினுக்கு ஆற்றோன்*
*காக்கை வாயிலும் கட்டுரைகொள்வர் காரணா*

(பெரியாழ். 5.1.1.)

என வேற்றுப்பொருள் வைப்பணியும்,

*சுற்றிநின்று ஆயர்தழைகளிடச் சுருள் பங்கி நேத்திரத்தால் அணிந்து*
*பற்றி நின்று ஆயர்கடைத் தலையே பாடவும் ஆடக் கண்டேன் அன்றிப்பின்*
*மற்றொருவர்க்கு என்னைப் பேசலொட்டேன் மாலிருஞ்சோலை எம்மாயற்கல்லால்*
*கொற்றவனுக்கு இவளாமென்றெண்ணிக் கொடுமின்கள் கொடீராகில் கோழம்பமே*

(பெரியாழ்.3.4.5)

என வேற்றுமை அணியும்,

***கானக்கரியானை தன்கொம்பிழந்து கதுவாய்மதம்சோரத் தன்கை எடுத்து***
***கூனல்பிறைவேண்டி அண்ணாந்துநிற்கும் கோவர்த்தனமென்னும் கொற்றக்குடையே***

(பெரியாழ். 3.5.5.)

எனத் தற்குறிப்பேற்றணியும்,

***பிறப்பகத்தே மாண்டொழிந்த பிள்ளைகளை நால்வரையும்***
***இறைப்பொழுதில் கொணர்ந்துகொடுத்து ஒருப்படுத்த உறைப்பானூர்.***

(பெரியாழ். 4.8.2)

எனஅதிசய அணியும்,

***வல்லெயிற்றுக் கேழலுமாய் வாளெயிற்றுச் சீயமுமாய்***
***எல்லையில்லாத் தரணியையும் அவுணனையும் இடந்தானூர்***

(பெரியாழ். 4.8.8.)

என நிரனிறை அணியும்,

***ஊத்தைக்குழியில் அமுதம்பாய்வது போலுங்கள்***
***மூத்திரப்பிள்ளையை என்முகில்வண்ணன் பேரிட்டு***

(பெரியாழ்.4.6.9)

என முரணணியும்,

***பொன்னைக்கொண்டு உரைகல்மீதே நிறமெழுத உரைத்தாற்போல்***
***உன்னைக்கொண்டு என்நாவகம்பால் மாற்றின்றி உரைத்துக்கொண்டேன்***

(பெரியாழ். 5.3.5.)

என ஆர்வமொழியணியும் பெரியாழ்வாரால் எடுத்தாளப்பட்டுள்ளன.

இலக்கிய இன்பத்திற்கு அடிப்படையாக அமையும் பொருள்களில் இவ்வணிகளும் சிறப்புடையதாக அமைகின்றன. பெரியாழ்வார் பாசுரங்களில் அவர் பக்திச் சுவையைப் பெரிதும் பாடி இருப்பினும் அதற்கு அழகினைத் தருவதாக அணிநலம் அமைகின்றது. அணி என்பது உலக இயற்கைக்கு அப்பால் கவிஞர்களின் மனதில் ஒரு வடிவத்தைப் பெற்றுப் பின்னர் மொழியில் அழகுபெற அமைவது என்பது ஆழ்வாருடைய பாசுரங்கள் வழி இனிது விளங்கும்.

## *உணர்த்தும் முறை*

உணர்ச்சியின் தூண்டுதலால் அமைவது கற்பனை. அக்கற்பனை கவிஞர்களின் மனத்தில் நன்கு பதிகின்றது. கற்பனையின் வெளிப்பாடு கவிதையாக அமைகின்றது. கவிஞர்களின் உணர்வுக்கேற்ப அவர்தம் கவிதைகளின் வடிவமும் அமைகின்றது. ஒவ்வொரு கவிஞருக்கும் நடையின் தன்மை தனியே அமைவதுபோன்று உணர்த்தும் முறையும்

வேறுபட்டமையும். காலச் சுழலும், வாழ்க்கைச் சூழலும் கூட அதற்குக் காரணமாகின்றன.

தேர்ந்த புலவர் தாம் கொண்ட கருத்தையும் தாம் உணர்ந்த உணர்ச்சியையும் விளக்கவதற்கு நீண்ட பல பாட்டுக்களைப் பாடுவது இல்லை. ஒரு சில அடிகளாலும் அல்லது ஒரு சில சொற்களாலும் விளக்கும் திறன் அவர்களுக்கு அமைந்திருக்கின்றது. சில இடங்களில் அடையாக வரும் ஒரு சொல்லாலும் அவர்களுடைய உணர்ச்சியை நாம் பெறுமாறு புலவர்கள் செய்துவிடுவார்கள். அதனால் இடர்ப்பட்டு விளக்கும் தன்மை யின்றி தாம் உணர்ந்தனவற்றை அல்லது அறிந்தனவற்றைப் பாடலில் எளிதாய் உணர்த்தித் தன் உணர்த்துமாற்றலைக் காட்டி விடுவர்.

ஆழ்வார்கள் அனைவருக்கும் பக்தியே வாழ்க்கையாக இருந்தது, அவர்கள் உணர்த்தும் முறையில் வெளியாவன எல்லாம் பக்தியே. ஆனாலும் அவரவர்களுக்குரிய ஆற்றலால் உணர்த்தும் முறையில் வேறுபட்டுத் திகழ்கின்றனர். திருமங்கை ஆழ்வாரின் பாடல்களின் வழி இயற்கையின் தன்மை உணர்த்தப்பெறும். ஆண்டாளின் பாடல்களின் வழி இறைவன் மேல் கொண்ட தூய்மையான காதல் உணர்த்தப்பெறும். இவ்வாறு உணர்த்தல் அமையினும் அவற்றை உணர்த்தும் முறைகள் வெவ்வேறாக அமையும்.

பெரியாழ்வார் பாடல்களில் மிகுதியான வட்டார வழக்குகளும், வாய்மொழிச் சொற்களும் இடம்பெறுகின்றன. அவற்றை இலக்கியப் படுத்தும் ஆழ்வார் உணர்த்தும் முறையில் சிறப்புற்றுத் திகழ்கின்றார். துய்ப்பார் பொருள் விளங்கிக்கொள்ள சிறு தொடர்களாலும் தம் கருத்தைப் புலவர்கள் வலியுறுத்துவர். அவ்வகை தொடர்களைப் பெரியாழ்வார் கையாளுகின்றார். சூதே பொய்மையாகிய கொடுமை நிறைந்தது. அதனைத் தன் சொல்லாட்சியால் 'பொய்ச்சூதில் தோற்ற பொறையுடை மன்னர்க்காய்'[22] என்று அமைகின்றார். இவ்வரியில் துரியோதனினின் கொடுமையும் பாண்டவரின் பொறுமையும் ஆழ்வாரால் உணர்த்தப் பெறுகின்றன.

கண்ணனின் மழலை இனிமை வாய்ந்தது. தாயாகத் திகழ்ந்த பெரியாழ்வார் அதன் தன்மையை மிக்க இலக்கியநயத்துடன் குறிப் பிடுகின்றார். 'மழலை முற்றாத இளஞ்சொல்'[23] எனும் தொடரில் அமைந்த மூன்று சொற்களுமே இளமைத் தன்மையைக் குறிப்பதைக் காணலாம். உணர்த்தும் முறையில் ஆழ்வார் பெறும் சிறப்பிடத்துக்குக் காரண மானவற்றில் இவையும் அடங்கும். இதைப்போன்றே அமையும் 'கடுவாய் சினவெங்களிறு'[24] எனும் தொடரும் அதனை நன்கு விளக்கும்.

வெண்ணெய் விழுங்கி' [25] என்னும் கண்ணனின் குழல்வழி வரும் எச்சில், 'குழல் முழஞ்சு களினோடு குமிழ்த்துக் கொப்பளித் தெழுந்த அமுதப் புனல்வழி'[26] என்றும் உரைக்கின்றார் பெரியாழ்வார். இவை ஒலிநயத்தோடு உண்மை நிகழ்ச்சியைப் படம் பிடித்துக்காட்டுபவை.

### ஒலிநயம்

உணர்த்தும் முறையில் ஒலிநயமும் இடம்பெறும். இடத்திற்குத் தக அமையும் ஒலிநயம் உணர்த்தும் முறையில் சிறப்பிடம் பெறும். இதனைப் பெரியாழ்வார் கையாளுகின்றார்.

***ஓடவோடக் கிண்கிணிகள் ஒலிக்குமோசைப் பாணியாலே***
***பாடிப்பாடி வருகின்றாயைப் பற்பநாப னென்றிருந்தேன்***
***ஆடியாடி யசைந்தசைந்திட்டு அதனுக்கேற்ற கூத்தையாடி***
***ஓடியோடிப் போய்விடாதே உத்தமாநீ முலையுணாயே***

(பெரியாழ். 2.2.10)

என அமையும் பாடல் கண்ணனின் செயல்களுக்கேற்ற ஒலிநயத்துடன் அமைந்துள்ளமை அறியத்தக்கது.

### உலகச்செயல்களால் உணர்த்தல்

காணும் பொருட்களின் தன்மையை எளிதில் மனத்தில் பதிய வைக்கும் குணமுடையவர்கள் புலவர்கள். அவற்றைத் தம்பாடல்களில் அமைக்கும் ஆற்றலும் அவர்களுக்கே உரியது. இவ்வாறு அமையும் கலைகள் கலைஞனின் அனுபவங்களைத் தரவில்லையெனின், இந்தப் பரந்த உலகில் அந்த அனுபவங்கள் பலர்க்குக் கிட்டாமல் விரல் விட்டு எண்ணக் கூடிய ஒருசிலரின் அளவில் நின்று மறைந்து போயிருக்கும் என்பர்[27]. பெரியாழ்வார் இவ்வுயரிய அனுபவங்களை இறையனுபவத்தில் உணர்த்திக் காட்டுகின்றார். மேலும் இவ்வுலகியலின் சாதாரண நிகழ்ச்சிகளையும் எடுத்துக்கூறி உணர்த்தும் முறை அவரிடம் அமைகிறது.

இறைவன்பால் கொள்ளும் பக்திக்கு ஈடில்லை என்பதை உணர்த்த இவை ஆழ்வரால் எடுத்துரைக்கப்பெறுகின்றன. இவ்வுடல் இறப்பின் போது அடையும் துன்பத்தை ஒரு திருமொழி முழுதுமே எடுத்துரைக்கின்றார்.

***சீயினாற் செறிந்தேறிய புண்மேல் செற்றிலேறிக் குழம்பிருந்தெங்கும்***
***ஈயினால் அரிப்புண்டு மயங்கி யெல் லைவாய்ச்சென்று சேர்வதன்முன்னம்***

(பெரியாழ். 4.5.2)

என இறப்பின் கொடுமை எடுத்துரைக்கப்பெறுகின்றது. இவ்வுலக அனுபவம் ஆழ்வாரால் பக்தியின்பால் அமைகிறது. அதனையொத்து இறப்பவர் பொருளிடம் கொள்ளும் ஈடுபாட்டை

*சோர்வினால் பொருள் வைத்ததுண்டாகில் சொல்லு சொல்லு என்று சுற்றமிருந்து*
*ஆர்வினவிலும் வாய்திறவாதே அந்தகாலம் அடைவதன் முன்*

(பெரியாழ். 4.5.3.)

என எடுத்துரைக்கின்றார். இவை உலக நிகழ்ச்சிகள் உணர்த்தும் கருத்து பெரியாழ்வார் பாடல்களில் இடம்பெற்றதைக் காட்டுபவையாகும்.

## *யாப்பமைதியில் உணர்த்தும்முறை*

புலவர்கள் பொருளை உணர்த்தும் முறையில் செய்யுள் வடிவத்தையும் ஒரு முறையாகக் கையாண்டுள்ளனர். அந்தாதி அமைப்பு அத்தகையதே. நினைவில் நிற்கும் பொருட்டமையும் இந்த யாப்பமைதி பெரியாழ்வாராலும் கையாளப் பெறுகின்றது. திருமாலின் பன்னிரு நாமச்சிறப்பினை விளக்கும் திருமொழி அதற்குச் சான்று. இறைவனின் திருநாமம் பரமபதத்துக்கு வழிகாட்டும் என்பது ஆழ்வார் கருத்து. அப்பேற்றினை அனைவரும் பெற இந்த அந்தாதித் தொடையை ஆழ்வார் கையாளுகின்றார்.

## *பழமொழிகளைக் கையாளுதல்*

வாய்மொழி இலக்கியக்கூறுகள் சங்க காலம் தொட்டுத் தமிழ் இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளன. பெரியாழ்வார் தம் காலத்தில் வழங்கி வந்த பழமொழிகளைக் கொண்டு தன் கருத்தை வலியுறுத்து கின்றார். 'புண்ணிற் புளிபெய்தாற் போல'[28], 'செய்த்தலை எழுநாற்று போல'[29], 'கன்றுகால் மாறுமா போலே'[30] 'காக்கை வாயிலும் கட்டுரை கொள்வர்'[31], 'உழைக்கோர் புள்ளி மிகையன்று'[32], என அமையும் பழமொழிகள் அதற்குச் சான்றாகின்றன. வாய்மொழியும் இலக்கியமாய் அமைந்து கருத்துக்களை விளக்கவல்லது என்பதற்கு இவை சான்றாகத் திகழ்கின்றன.

மேற்கண்டவற்றை நோக்க பெரியாழ்வார் உணர்த்தும் முறையில் தனித்துவத்துடன் திகழ்கின்றார் என்பது விளங்கும்.

## *வருணனை*

கற்பார்க்கு இன்பம் பயக்கும் இலக்கியத்தின் தன்மை பலவாறாக அமையும். கற்பனை, அணிநலம், நடைச்சிறப்பு, ஆகிய இவையன்றி வருணனையும் அவற்றில் அடங்கும். பண்டை இலக்கியம் தொடங்கி

இவ்வருணனை தமிழ் இலக்கியத்தில் ஏதோ ஒரு வடிவுடன் இடம் பெற்று வந்திருக்கிறது. இயற்கையுடன் ஒன்றி வாழ்ந்த தமிழர்தம் இலக்கியங்களில் காணப்படும் குறிப்புக்களில் இயற்கையைப் பற்றிய வருணனையைக் காணலாம். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை எனும் ஐவகை நில நிகழ்ச்சிகளும் குறிக்கப்பெற்றுப் புலவர்தம் கருத்துக்கள் விளக்கப் பெறுகின்றன. புறநூல்களில் ஆற்றுப்படை நூல்கள் நாட்டின் நல்வாழ்வை வருணனையால் எடுத்துரைக்கின்றன.

வருணனையின் பயன் கவிஞர்களின் புலமைச் சிறப்பைப் பறை சாற்றுவதாயும் உணர்ந்ததைப் புலப்படுத்துவதாயும் அமையும். காட்சியைக் காணும் அல்லது உணரும் கவிஞன் அதனை முழுவதுமே வருணிப்ப தில்லை. அதில் ஏதோ ஒரு கூறு அவனைக் கவர்கின்றது; அதில் கவிஞனின் புலமை ஆழ்ந்து ஈடுபடுகின்றது; அதனால் வருணனை பிறக்கின்றது. இவ்வருணனையால் இலக்கியம் சிறக்கின்றது.

கலைஞனுடைய அனுபவம் மிக விரிவானதாகும். அவர் தம் அனுபவத்தில் பெற்ற பல கூறுகளில் சிறந்த சிலவற்றை மட்டும் கொண்டு கற்பனையில் முழுமை உடையதாக ஆக்கிப் படைப்பர். அவ்வாறு படைக்கும் வருணனையில் எல்லாவற்றையும் விடாமல் வருணிக்கும் போலிப் புலமையைக் காண்பதில்லை. ஒன்றையும் விடாமல் எல்லாப் பகுதிகளையும் விளக்கிக் கூறும் வன்மை, எந்திரம் போன்ற மனத்திற்கு ஏற்றதாகும். உணர்வு மிக்க மனம் அத்தகைய வருணனைகளை விரும்புவதும் இல்லை; நுகர்வதும் இல்லை. உணர்ச்சி குன்றாமல் அமைய வேண்டிய பாட்டில் அத்தகைய வருணனைகள் சலிப்பை விளைவிப் பதாகும். கற்பனை வளம் இல்லாதவர்கள் கண்ட எல்லாவற்றையும் வருணிப்பர் என்றும், கற்பனை வளம் உடையவர்கள் தாம் உணர்ந்த சிலவற்றை மட்டும் சில அடிகளால் விளக்குவர் என்றும் வின்செஸ்டர் கூறுவார்.

கற்பனைச் சிறப்பும் புலமைத்திறனும் வருணனையுடன் இணைந்து ஆழ்வாருடைய இலக்கியத்தைச் சிறப்பிக்கின்றன. பெரியாழ்வார் பாசுரங்களில் அமையும் வருணனைச் சிறப்பை இருவகையாகப் பிரித்து விடலாம். கண்ணனைப் பாடுபொருளாகக் கொண்ட பாக்களில் அமையும் வருணைநலன்; திவ்விய தேசங்களின் எழில் நலத்தைக் காட்டும் வருணனைச் சிறப்பு என்பன அவை.

கண்ணனைப் பாடுவதிலேயே தம் கருத்தைச் செலுத்தியவர் ஆழ்வார். கண்ணனின் எழில்நலம் ஆழ்வாரால் எடுத்துரைக்கப் பெறுகின்றது. மனத்தால் உணர்ந்து வெளிப்படுத்தப்பெறும் கண்ணனின் அழகினை ஆழ்வார் உவமை வாயிலாகவும் வருணிக்கின்றார். அதற்குத் தளர்நடைப் பருவம் சான்றாக அமையும்.

*படர்பங் கயம லர்வாய்நெ கிழப்பண் படுசிறு துளிபோல*
*இடங்கொண்ட செவ்வா யூறி யூறி யிற்றிற்று விழாநின்று*

(பெரியாழ். 1.7.7)

என அமையும் தொடர்கள் மேற்கூறிய கருத்தை வலியுறுத்துவன.

கண்ணனின் எழில்நலம் கூறும் சிறப்புக் கண்ணனைப் பற்றி ஆழ்வார் அமைக்கும் பாதாதிகேச வருணனையில் இடம்பெறுகிறது. கண்ணன் அணிந்திருக்கும் அணிகளின் அழகும் பல பாசுரங்களில் எடுத்துரைக்கப்பெறுகின்றது. ஒவ்வொன்றிலும் வெவ்வேறான அணிகள் கூறப்படுகின்றன. கண்ணன் அணிந்திருக்கும் அணிகளை ஒரே பாசுரத்தில் அமைத்து ஆழ்வார் பாடும் சிறப்பு, அவருடைய வருணனைத் திறத்திற்குச் சான்றாகும்.

*செங்க மலக்கழலிற் சிற்றி தழ்போல்விரலிற்*
*சேர்தி கழாழிகளும் கிண்கி ணியுமரையில்*
*தங்கி யபொன்வடமும் தாள நன்மாது ளையின்*
*பூவொடு பொன்மணியும் மோதி ரமும்கிறியும்*
*மங்கல வைம்படையும் தோள்வ ளையும்குழையும்*
*மகரமும் வாளிகளும் சுட்டியு மொத்திலக*

(பெரியாழ். 1.5.10)

எனும் பாசுரம் கண்ணனின் அணியழகைக் காட்டுவது.

கண்ணன் வரும் காட்சியைக் கண்ட ஆயர் மகளிர் அவன் பேரழகில் ஈடுபடுகின்றனர். அதனை வருணனையாக்கி ஆழ்வார் தாயர் கூற்றாயும் காமுற்ற மகளிர் கூற்றாயும் அமைக்கின்றார். இவ்விடத்தில் கண்ணனின் எழில்நலம் வருணனையாக்கப்பெற்று இலக்கியமாகிறது. அவ்வெழிற்காட்சி,

*வலங்காதின் மேல்தோன்றிப் பூவணிந்து மல்லிகை வனமாலை மௌவல்மாலை*
*சிலிங்காரத் தால்குழல் தாழவிட்டுத் தீங்குழல் வாய்மடுத் தூதியூதி*

(பெரியாழ். 3.4.9.)

என அமைகிறது.

கண்ணனின் எழில் நலத்தை வருணனையால் அனுபவிக்கும் ஆழ்வார், அவனுடைய செயல்களில் காணும் சிறப்பையும் வருணனையால் அனுபவிக்கின்றார். ஆநிரை மேய்க்கச் சென்ற கண்ணன் குழலோசை கேட்டு இவ்வுலக உயிர்ப் பொருள்களும், உயிரற்ற பொருள்களும் இருந்த நிலையை ஆழ்வார் எடுத்துரைக்கின்றார்.

***நன்னரம் புடைய தும்புரு வோடு நாரத னுந்தந்தம் வீணை மறந்து***
***கின்ன ரம்மிது னங்களும் தந்தங் கின்ன ரந்தொடு கிலோமென் றனரே***
(பெரியாழ். 3.6.5)

என அமையும் தொடர்கள் கண்ணனின் குழலோசைச் சிறப்பை வருணை யால் எடுத்துரைக்கும். இதுவன்றிக் கோவர்த்தனகிரியைப் பற்றி ஆழ்வார் அமைக்கும் வருணனை கோவர்த்தனத்தைக் கண்முன் காட்டும்.

பெரியாழ்வார் பாசுரங்களில் வருணனைச் சிறப்பு வெளியாகும் இடங்களில் அடுத்து அமைவது திவ்விய தேசங்கள் பற்றியதாகும். மாலிருஞ்சோலையும், திருவரங்கத்தையும் ஆழ்வார் மும்மூன்று திருமொழிகளில் அனுபவிக்கின்றார். அப்பதிகளின் சிறப்பு வருணனை யுடன் எடுத்துரைக்கப் பெறுகின்றது.

*புன்னை செருந்தியொடு புனவேங் கையுங்கோங் கும்நின்று*
*பொன்னரி மாலைகள் சூழ்பொழில் மாலிருஞ் சோலையதே*
(பெரியாழ்.4.3.3.)

என்று திருமாலிருஞ்சோலையையும்,

*தழுப்பரிய சந்தனங்கள் தடவரைவா யீர்த்துக் கொண்டு*
*தெழிப்புடைய காவிரிவந் தடிதொழுஞ்சீ ரங்கமே*
(பெரியாழ். 4.8.7.)

என்று திருவரங்கத்தையும் பாடுகின்றார். கண்டக்கடிநகர் பற்றி அமையும் வருணனையும் இங்குக் கொள்ளத்தக்கது

மேற்கண்ட சான்றுகளால் வருணனைத் திறத்திலும் பெரியாழ்வார் சிறந்து விளங்குகின்றார் என்பது விளங்கும். வருணனையால் ஆழ்வாரின் கற்பனைச் சிறப்பும், புலமைத்திறனும், உணர்த்தும் ஆற்றலும் வெளிப் படுவது வெள்ளிடை மலை.

### *நடைச்சிறப்பு*

புலவர்கள் தம் கருத்தை வெளிப்படுத்தும் முறைகளில் அவர்தம் நடை சிறப்பிடம் பெறுகின்றது. நடைச்சிறப்பு என்பது புலவர்களின் சொல்லாட்சித் திறனை மட்டும் வெளிப்படுத்துவதாகாது. நடையின் நோக்கம், கவிஞனின் உணர்வுகளைக் கற்பவர் எளிதில் உணரும் வண்ணம் வெளிப்படுத்துவதுதான். புலவர்கள் தாம் எழுதப்புகுமுன் தனக்கென ஒரு நடையை வரையறுத்துக் கொண்டு செய்யுள் யாப்பதில்லை. அவர்களின் உணர்வுகளின் வழி சொற்கள் வந்தமைந்து நடையழகு அமையும்.

இயல்பான அவர்தம் நடையினைக்கண்டு அது இன்னாருடைய நடை என்று கற்பவர் அறிந்துவிட இயலும். ஆதலின் புலவர்களை அடையாளம் காட்டும் சிறப்புடையதாக நடையழகு அமைந்துவிடுகிறது.

ஆழ்வார்கள் அனைவரும் தேனினுமினிய தமிழில் பக்திப் பாசுரங்களைப் பாடியவர்கள். அவர்கள் தம் பாசுரங்களைத் தமிழ் என்றே குறிக்கின்றனர். ஆழ்வார்கள் ஒவ்வொருவரும் வெவ்வேறான நடையில் பாசுரங்களை அமைக்கின்றனர். பெரியாழ்வாரும் தனக்கென ஒரு நடைச் சிறப்பைக் கொண்டு பாசுரங்களை அமைக்கின்றார்.

## *கருத்து விளக்கம்*

கவிஞர்கள் தம் கருத்தை வெளிப்படுத்தும்போது அவற்றைத் துய்ப்பார் மிக்குப் பயன்பெற வேண்டும் என்ற எண்ணத்துடன் செய்யுள்களை அமைக்கின்றனர். அதனை வலியுறுத்த அவர்கள் ஏற்புடைச் சொற்களை எடுத்தாளுதல் இன்றியமையாதது. துய்ப்பார் மனதில் அவை நன்கு பதிதல் வேண்டும். இத்தகு நடைச் சிறப்புப் பெரியாழ்வாரிடம் அமைகிறது.

***மானிட சாதியிற் தோன்றிற்றோர் மானிட சாதியை***
***மானிட சாதியின் பேரிட்டால் மறுமைக்கில்லை***

(பெரியாழ்.4.6.4.)

என்னும் தொடர் மானிட சாதியின் சிறுமையை வெளிப்படுத்துவதாக அமைகின்றது. தம் கருத்தினை விளக்க மேற்கொள்ளும் இத்தகு எளிய நடை ஆழ்வார்தம் பாடலின் வழி வெளிப்படுகின்றது.

## *உணர்ந்தன வெளிப்படுத்தல்*

தாம் துய்த்த பயனைப் பிறரும் உணரும் பொருட்டுப் பாடல்களை அமைத்தவர்கள் ஆழ்வார்கள். இறையருளை உணர்ந்த அவர்களுக்கு அதனை வெளிப்படுத்தும் சக்தி இறைவனாலேயே ஏற்பட்டதென்று எண்ணம் உடையவர்களாக அவர்கள் திகழ்கின்றனர். அவ்விறையருளைப் பெரியாழ்வார் உணர்ந்ததற்குக் காரணமான பக்திச் சுவையை, தாம் அனுபவித்த தன்மையைக்,

***காலுமெழா கண்ணநீரும் நில்லா வுடல் சோர்ந்து நடுங்கிக்குரல்***
***மேலுமெழா மயிர்க்கூச்சு மறாவென் தோள்களும் வீழ்வொழியா***

(பெரியாழ். 5.4.8.)

என்று குறிப்பிடுகின்றார். இதில் பக்திச்சுவையைக் காட்டும் நடையழகு சிறப்புடையதாக அமைகிறது.

## *சொல்விளையாட்டுகள்*

ஒரு பொருளின் சிறப்பை விளக்க அதன் பலவாறான குணங்களை அடுக்கிச் சொல்லுதல் இயல்பு. அவ்வகையிலும் ஒருவித நடையழகு அமையும். பெரியாழ்வாரிடத்திலும் இது அமைகிறது.

***குலமலை கோலமலை குளிர்மாமலை கொற்ற மாலை***
***நீலமலை நீண்டமலை திருமாலிருஞ் சோலையதே***

(பெரியாழ். 4.3.5.)

என்னும் ஆழ்வாரின் தொடர்கள் அதற்குச் சான்றாகும்.

***குன்றாடு கொழுமுகில்போல் குவளைகள்போல் குரைகடல்போல்***
***நின்றாடு கணமயில்போல் நிறமுடை நெடுமாலூர்***

(பெரியாழ்வா். 4.8.9.)

என உவமையை அடுக்கிஅமைக்கும் தொடர்களும் மேற்கூறிய கருத்தை வலியுறுத்தும்.

நடையில் அமையும் வடிவங்களே பயில்வாருக்கு இன்பம் பயப்பன. தெளிந்த நடையுடைய இலக்கியம் எக்காலத்தும் மக்களால் போற்றப்பெறும். அருஞ்சொற்களை மிகுதியாகக் கையாளாமலே உயர்ந்த இலக்கியத்தைப் படைத்தல் பெரும் புலவர்க்கே இயலும். இச்சிறப்புப் பெரியாழ்வாரிடம் அமைகிறது. தெளிந்த நடை என்பது எளிமை, இனிமை, புதுமை, தெளிவு, உணர்ச்சி, முதலியவற்றைக் குறிக்கும். அதுவே உயர்ந்த நடையாகவும் அமையும். அருஞ்சொற்களைக் கொண்டு அமையும் நடை கடுநடை என்று பெயர் பெறுமன்றி உயர்ந்த நடையாகாது. புலவரின் மனதில் தெளிவு இருந்தால் நடையில் எளிமை விளங்கும். இச்சிறப்புப் பெரியாழ்வாரிடம் அமைகிறது.

## *நடையில் எளிமை*

நடையில் எளிமை என்பதற்கு எளிய பதங்கள், எளியநடை, எளிதில் அறிந்து கொள்ளக்கூடிய சந்தம் முதலியவற்றைக் கொள்ளலாம். அவ்வகையில் பெரியாழ்வார் மிகுதியான வழக்குமொழிச் சொற்களால் பாசுரங்களை அமைக்கின்றார். இஃது அவருடைய வெளிப்படுத்து மாற்றலின் எளிமையைக் காட்டுகின்றது. பக்திப்பரவசத்தால் பரந்தாமனைப் பாடிப் பரவுதலையே தம் பேறாக எண்ணியவர்கள் ஆழ்வார்கள். அவ்வழியில் பெரியாழ்வாரும் இறைவனின் திருநாமத்தைப் புகழ்ந்து பாடுவதில் இன்பம் பெறுகின்றார். இச் சிறப்பு,

*காரார் கடலை அடைத்திட்டு இலங்கைபுக்கு*
*ஓராதான் பொன்முடி ஒன்ப தோடு ஒன்றையும்*
*நேரா அவன் தம்பிக்கு நீளர சீந்த*
*ஆரா வமுதனைப் பாடிப்பற அயோத்தியர் வேந்தனைப் பாடிப்பற*

(பெரியாழ். 3.9.10)

எனும் பாசுரத்தில் வெளிப்படுகின்றது.

## நடையில் இனிமை

தமிழ் என்பதற்கு இனிமை என்ற பொருளுண்டு. ஆழ்வார் தாம் அமைக்கும் பாசுரங்களைத் தமிழ் மாலை என்று குறிப்பிடுகின்றார்.

இவ்வினிமையை அவர் இறைவன்பால் கொண்ட பக்தி வாயிலாகவும், அவன் செய்த அருள் வாயிலாகவும் அனுபவிக்கின்றார். இவ்வனுபவம் அவருடைய நடையிலும் வெளிப்படுகின்றது. புலவரின் நடை அவருடைய உள்ளத்தின் இயல்பை ஒட்டி அமையும் என்பர். ஆழ்வார் அனுபவிக்கும் இனிமை அவர்தம் நடையிலும் அமைகின்றது.

*திருவடிதன் திருவுருவும் திருமங்கை மலர்க்கண்ணும் காட்டிநின்று*
*உருவுடைய மலர்நீலம் காற்றாட்ட*

(பெரியாழ். 4.9.1.)

என ஆழ்வார் அமைக்கும் பாசுரம் அதற்குச் சான்றாகும். கற்பனை நலத்தாலும் பொருள் சிறப்பாலும், நடையழகாலும் இத்தொடர் இனிமை பயப்பது விளங்கும்.

## நடையில் தெளிவு

கவிதையின் சிறப்புத் தெளிவு என்பதைக் கம்பர்,

*அவிஅகத் துறைகள் தாங்கி ஐந்திணை நெறிஅளாவித்து*
*சவிஉறத் தெளிந்து'' தண்ணென் ஒழுக்கமும் தழுவி*

-(கம்ப.2732)

என்று கூறுகிறார்.

சொற்கள் எளிமையாக அமையினும், உள்ளத்தெளிவும் உண்மையில் குழப்பமின்மையும் இருந்தாலன்றி நடைத் தெளிவுடையதாக அமையாது. வேதங்களாலும் தேடற்கரியன் திருமால்; தன்னை உணர்ந்து பக்தி செய்தவர்களுக்கு வந்தருளும் பான்மையன். இவ்வுண்மையை உணர்ந்தவர் பெரியாழ்வார். இத்தெளிவை வெளிப்படுத்த ஆழ்வார் அமைக்கும் பாசுரம் பிறரும் உணரும்பொருட்டு அமைகிறது.

*பொன்னைக் கொண் டுரைகல்மீதே திறமெழ உரைத்தார் போல்*
*உன்னைக் கொண் டென்னா கம்பால் மாற்றின்றி உரைத்துக் கொண்டேன்.*
*உன்னை கொண் டென்னுள் வைத்தே னென்னையும் உன்னிலிட் டேன்*

(பெரியாழ் 5.4.5)

என அமையும் பாசுரம் இறை அனுபவத்தின் தெளிவைக் காட்டுகிறது.

## நடையில் உணர்ச்சி

உணர்ச்சியின் காரணமாகக் கவிஞர்களின் கருத்துக்கள் செய்யுள் வடிவம் பெறுகின்றன. ஆழ்வார்களின் பாடல் பக்தி உணர்வால் அமைந்தவை. பெரியாழ்வாரின் பாசுரங்களிலும் பலவிதமான உணர்ச்சிப் பெருக்குகள் செய்யுள் நடையில் வெளிப்படுகின்றன. அசோதையின் கூற்றில் அமையும் பாசுரங்களிலும் கண்ணன் பின் சென்ற மகளின் தாய் கூற்றாக அமையும் பாசுரங்களிலும் இத்தகு வெளிப்பாட்டை காணலாம்.

*உறகல் உறகல் ஒண்சுடராழியே சங்கே*
*அறவெறி நாந்தகவாளே அழகிய சாரங் மேகதண்டே*

(பெரியாழ் 5.2.9)

என்ற பாசுரம் ஆழ்வார் நடையில் உணர்ச்சியை அமைத்துக் காட்டும் சிறப்பிற்கு சான்றாகும்.

கவிஞர்களின் நடையில் ஒவ்வொருவருக்கும் உரித்தான சிறப்பு உரைக்கப்பெறும். அவர் தம் இலக்கியத்தில் சில கூறுகள் திரும்பத் திரும்ப அமையும். இவையே அவ்விலக்கியத்திற்குச் சிறப்பாகவும் விளங்கும். பெரியாழ்வாரின் நடையிலும் இவ்வகைச் சிறப்புக்கள் சில காணப் பெறுகின்றன.

## பேச்சுமொழி நடை

இலக்கியம் செந்தமிழ்ச் சொற்களைக் கொண்டு தான் அமைய வேண்டும் என்பதில்லை. வழக்குச் சொற்களும் இடம் பெற்று இலக்கியங்கள் சிறப்பதுண்டு. இது ஆழ்வாரின் பாசுரங்கள் வழி அறியப்படும் செய்தி. கண்ணனைச் சீராட்டி வளர்க்கும் அசோதை கூற்றாய் அமையும் பாசுரங்களில் பேச்சு மொழிகளையே ஆழ்வார் மிக்கு எடுத்தாளுகின்றார்.

*அப்பமும் பாலும் தயிரும் விழுங்கி*
*அப்பன் வந்தப்பூச்சி காட்டுகிறான்*
*அம்மனே அப்பூச்சி காட்டுகிறான்.*

(பெரியாழ் 2.1.6)

என்றமையும் தொடர்களில் பேச்சு மொழியைச் செய்யுள் நடையில் அமைத்துக் காட்டும் சிறப்புப் பெரியாழ்வாரிடம் காணப்படுகிறது.

## உரையாடல் நடை

பெரியாழ்வார் பாடல்களில் உரையாடல் நடையும் அமைகிறது. (1) தன் கூற்றாய் ஆழ்வார் வினவி அவரே பதில் கூறும் முறையில் அமையும் திருமொழி (2) கண்ணனைப் பற்றி ஆயர்பாடி மகளிரின் முறைபாடும் அதற்கு அசோதையின் பதிலுமாக அமையும் திருமொழிகள். (3) கண்ணனைக் காது குத்த அசோதை அழைக்க, அதற்கு அவனுடைய மறுப்புரையும், அசோதை வேண்டுதலும் என மூன்று வகையாக உரையாடல் நடை அமைகிறது.

## நாராயணன் பற்றிய நடையழகு

புலவர்கள் தாம் பாடும் பொருளைப் பலவாகப் பாடியதும் அவர்தம் சிந்தை சிறப்புப் பொருள் ஒன்றிலேயே மிக்கு ஈடுபாடு கொள்ளும். அவர்களுடைய செய்யுள் நடையிலும் இத்தகைய வெளிப்பாட்டைக் காணலாம். அவ்வகையில் பெரியாழ்வார் தம் பாசுரங்களில் இறைவனின் பெருமை கூறும் சிறப்புப் பெயர்களை அமைத்துப் பாடுவதைக் காணலாம்.

***செருவாளன் புள்ளாளன் மண்ணாளன் செருச்செய்யும் நாந்தகமென்னும்***
***ஒருவாளன் மறையாளன் ஓடாத படையாளன் விழுக்கையாளன்***
***இரவாளன் பகலாளன் என்னையாளன் ஏழுலகும் பெரும்புரவாளன்***
***திருவாளன்***

(பெரியாழ். 4.9.10)

என்றவாறு அமையும் பாசுரம் மேற்கூறிய கருத்துக்குச் சான்று பகரும்.

பெரியாழ்வார் அமைக்கும் பாசுரங்களில் நடையழகுக்கு அவர் அமைத்துக்கொண்ட யாப்பமைப்பும் உதவி புரிவதைக் காணலாம். மிகுந்த கட்டுப்பாடில்லா கலிவிருத்தம், கலித்துறை, கையாளப்பெறுகின்றன. இவை ஒல்நயத்துடன் கூடிய நடையழகைத் தருகின்றன.

★★★

# குறிப்புகள்

1. க.த. திருநாவுக்கரசு, திருக்குறளில் கற்பனைத் திறனும் நாடக நலனும் ப.4
2. மேற்படி
3. மேற்படி ப.34
4. மேற்படி ப.50
5. மேற்படி. ப.51
6. மு. வரதராசன், இலக்கியத்திறன் ப.172.
7. ச.வே. சுப்பிரமணியன் கம்பன் கற்பனை பக்-60-61
8. மு. வரதராசன், இலக்கியத்திறன், ப. 232
9. பெரியாழ். 1.7.7
10. மேற்படி 3.4.7
11. மேற்படி 2.2.9
12. மேற்படி 3.6.9
13. மேறபடி 2 7.2
14. மேற்படி 5.4.7
15. மேற்படி 3.5.17
16. மேற்படி. 3.7.9
17. மேற்படி 3.8.9
18. ந. சுப்பு செட்டியார், கவிதையனுபவம் ப.216
19. மு. வரதராசன், இலக்கியத்திறன் ப.231
20. பெரியாழ். 5.4.2.
21. மேற்படி 5.2.7
22. மேற்படி. 2.1.2
23. மேற்படி. 1.4.5
24. மேற்படி 3.5.4
25. மேற்படி 3.2.6
26. மேற்படி 3.7.11
27. I.A., Richard Principles Literary Criticism P.132
28. பெரியாழ். 2.9.1
29. மேற்படி 3.7.9
30. மேற்படி 3.8.2
31. மேற்படி 5.1.1
32. மேற்படி 5.1.2



# பெரியாழ்வார் பாசுரங்களில் வைணவம்

**வை**ணவ சமயத்தில் தத்துவக் கருத்துக்களை மூன்று முறைகளில் அணுகலாம். அவை (1) ஈஸ்வரன், சித்து, அசித்து (2) திருமந்திரம், துவயம், சரமசுலோகம், (3) அர்த்த பஞ்சகம். இவை மூன்று முறைகளுமே பிராட்டியுடன் கூடிய திருமாலைப் பற்றியும், அவனை அடைய எண்ணும் சித்தின் தன்மையையும், இடையூறாக இருக்கும் அசித்தின் குணத்தையும் விளக்குவன.

அர்த்த பஞ்சகமாவன (1) அடையப்படும் எம்பெருமான், (2) அடைபவனாகிய சீவாத்மா, (3) அடைதற்கு உபாயம், (4) அடையப்படும்பலன், (5) இதுகாறும் அவனை அடைய முடியாமல் தடை செய்தது என்பன ஐந்தும் பெரியாழ்வார் திருமொழிகளில் இடம் பெற்று வைணவ தத்துவத்தை விளக்குகின்றன.

## *அடையப்படும் எம்பெருமான்*

திருவுடன் கூடிய நாராயணனே அனைத்துக்கும் காரணமாய் இருப்பவன். ஞானவடிவுடையவனாய் சுயரூபம் உடையவனாய் இருப்பவன். எண்ணற்ற திருக்கலியாண குணங்கள் உடையவனாய் உள்ளவன் நாராயணன். இப்பிரபஞ்சத்திற்கும், பரமபதத்திற்கும் தலைவனாய் இருக்கும் சிறப்பு அவனுக்கே உரியது. இத்தகு ஒப்பற்ற தன்மை உடைய திருமாலின் திருமேனிகள் ஐந்து வகைப்படும். அவை (1) பரம் (2) வியூகம் (3) விபவம் (4) அந்தர்யாமி (5) அர்ச்சை என்பன. இவ்வைந்து நிலைகளும் பெரியாழ்வார் பாசுரங்களில் இடம்பெறக் காணலாம்.

## *பரத்துவம்*

பரமபதத்தில் பரவாசுதேவனாய் எழுந்தருளி இருக்கும் வடிவம் என்றும் அழியாது, வளராது, குறையாது இருக்கும் திருவடிவம். இது நித்திய சூரிகளும் முக்திபெற்றவர்களும் இந்நிலையை அனுபவிக்க இயலும். இவ்வடிவம் கண்களைக் கவரும் தன்மையதாய் அமையும்.

இப்பரத்துவத்தை ஆழ்வார்கள் அனைவரும் அனுபவிக்கின்றனர். பெரியாழ்வார் இப்பரத்துவ வடிவத்தைத் திவ்வியதேசங்களில் காணு கின்றார்.

*அரவத் தமளியி னோடு மழகிய பாற்கட லோடும்*
*அரவிந்தப் பாவையூந் தானு மகம்படி வந்து*

(பெரியாழ். 5.2.10)

எனப் பரத்துவ நிலையைத் தனியே எடுத்துரைக்கும் சிறப்பையும் காணலாம்.

## வியூகம்:

வாசுதேவன் சங்கருடணன், பிரத்தியும்நன், அநிருத்தன் எனும் நாமங்களால் வழங்கப்பெறும் வடிவங்கள் வியூகமாகும். இவ்வுருவங் களுக்கும் முதற்காரணம் பரவாசுதேவனே. இவை ஒவ்வொன்றும் ஒன்றிலிருந்து ஒன்று தோன்றும். இந்நான்கு வியூக வடிவங்களில் ஒவ்வொன்றிலிருந்தும் மும்மூன்று வடிவங்கள் தோன்றுகின்றன. இவை வியூக வடிவங்களில் வேறு பிரிவுகளாகும்.

வியூக வடிவங்கள் பன்னிரு நாமங்கள் சிறப்பினை உடையவை. பெரியாழ்வார் இத்திருநாமங்களைக் குறிப்பிட்டு ஒரு திருமொழியை அமைக்கின்றார்.

*நாலிரு மூர்த்தி தன்னை நால்வேதக் கடலமுதை*
*மேலிருங் கற்பகத்தை வேதாந்த விழுப்பொருளை*

(பெரியாழ். 4.3.11)

என அவர் அமைக்கும் பாசுரம் வியூக வடிவத்தைக் காட்டுவது.

ஆழ்வார்களுக்குப் பின்வந்த ஆச்சாரியர்களே தத்துவ விளக்கங் களை அமைத்து ஐந்நிலைகளைக் கொண்டனர். ஆழ்வார் தமிழில் அவை ஆங்காங்கு அமைந்திருப்பினும் தத்துவங்களின் அடிப்படையில் .அமைக்கப்பட்டவையல்ல. எளிய பக்தியின் பயனால் இறைவனை அடையலாம் என்பது ஆழ்வார்களின் கொள்கை ஆதலின் வணங்கு வதற்கும், விளங்கிக்கொள்வதற்கும் எளிதான அவதாரம். அர்ச்சை என்பது அவர்களுடைய பாக்களில் மிகுதியும் இடம்பெற்றன. ஆதலின் அவை இரண்டும் ஆழ்வாரின் பாடங்களில் சிறப்பிடம் பெறுகின்றன.

## விபவம்

விபவம் என்பது அவதாரங்களைக் குறிக்கும். திருமால் இவ்வுலகில் தோன்றி மக்களுக்கருளுவது அவதாரம் எனப்படும்.

பற்றிய கொள்கையை வைணவம் தனியே கொண்டிலங்குகின்றது. அவதாரம் பற்றிய வைணவக் கொள்கை மூன்று வகையாக அமையும். (1) அவதாரம் (2) ஆவேசம் (3) அம்சம் என்பன அவை.

இருக்கு வேதத்தில் விட்டுணு மூன்றடியால் இவ்வுலகை அளந்த செய்தி உரைக்கப்பெறுகின்றது. இதனை நோக்க திருமால் அவதாரம் பற்றிய கொள்கை இடைவந்ததன்று என்பது விளங்கும். வைணவர்களால் பின்பற்றப்படும் பஞ்சராத்திர ஆகமத்தில் முப்பத்தொன்பது அவதாரங்கள் குறிக்கப்பெறுகின்றன அவற்றில் திருமாலின் அவதாரங்களின்றி முனிவர் முதலானோரும் அவதாரங்களாகக் குறிக்கப்பெற்றுள்ளனர். கபிலர், பரசுராமர் முதலியோர் முழுமையான அவதாரங்களாகக் கொள்ளப்பெறாத நிலையும் இதிலிருந்து அறியப்படுகின்றது. அவதாரம் என்பதற்கு இறங்கி வருதல் என்று பொருள். இறைத்தன்மையுடன் கூடிய சக்தி இறங்கி வந்து இவ்வுவலக மாந்தருக்குப் பயன்படும் விதத்தில் அமைவது என்பதே அவதாரமாகும்.

திருமாலின் அவதாரங்கள் முப்பத்தொன்பதாகும் அவற்றில் சிறப்பான திருமாலின் பத்தவதாரங்களும் அடங்கும். மச்சம் தொடங்கி கல்கி முடிய அமையும் அவதாரங்களில் நான்கு விலங்குவகையன. ஒன்று விலங்காயும் மனிதராயும் கொள்ளப்பெறுவது. இவற்றைத் தவிர எஞ்சிய ஐந்தும் மனித வடிவுடன் கூடியவை.

## *புராணம் ஆகமம் உபநிடதம்*

தமக்குரிய முத்தொழில்களை விடுத்துத் தானும் பிறப்பது திருமாலுக்குரிய சிறப்புக்களில் ஒன்றாகும் அவதாரம் பற்றிய கொள்கை வடமொழி நூல்களில் வெவ்வேறாக அமைந்துள்ளது என்பர். அவதாரங்களின் அடிப்படைத் தளமாக விளங்குவன புராணங்களும், இதிகாசங்களும். அவை வைகுந்தத்தில் உள்ள இறைவனே அவதரிப்பதாகக் கூறுகின்றன. ஆகமங்கள் வியூகத்திலிருந்துதான் அவதாரங்கள் தோன்று கின்றன என்கின்றன. பிறக்கும் இயல்பில்லாமல் ஓரிடத்தில் இருக்கும் பரம்பொருள் தன் நிலையிற் தாழ்ந்தபிறவி எடுப்பது என்பது உபநிடதக் கருத்துக்கு ஒத்துபோவதன்று. ஆதலின் அவதாரங்களைப்பற்றி மூன்று வகையான நிலைகள் வடமொழி நூல்களில் அமைந்துள்ளமை விளங்கும்.

## *கீதையும் அவதாரமும்*

கீதையில் கண்ணன்,

***நான் புதிதாக ஒன்றும் உபதேசிக்கப் போவதில்லை***
***ஆதியில் விவசுவானுக்கு நன் இதனை உபதேசித்தேன்***

***அவன் மனுவுக்கும், மனு இட்சுவாகுக்கும் உபதேசிக்க இப்படி பரம்பரையாக வந்த யோகத்தை இராச ரிஷிகள் அறிவர், வெகு காலத்திற்குப்பின் மறைந்துபோன யோகத்தை உபதேசிக்கிறேன்.***

(பகவத்கீதை. அத்.4.ச.1)

என்று அர்ச்சுனனிடம் உரைக்கின்றான். தனக்கும் அர்ச்சுனனுக்கும் பல பிறப்புக்கள் உள என்று கூறி, தான் விவசுவானுக்கு உபதேசித்ததைக் கூறுகின்றான் கண்ணன். தான் பிறப்பு இறப்புக்கள் இல்லாதவனாய் இருப்பினும் தன்னுடைய தனியான இயற்கையைப் பின்பற்றித் தன்னுடைய மாயையால் தான் பிறப்பதாகக் கண்ணன் கூறுகின்றான்.

இவ்வுலகு முழுதுமே திருமால் படைப்பு, இவ்வுலகப்பொருள் முழுவதிலுமே அவன் அந்தர்யாமியாக இருப்பினும் அவற்றுக்கெல்லாம் அவன் பெயரிட்டு அழைப்பதில்லை. அவை அசித்தின் தொடர்புடையவை. இறைவனின் வடிவங்கள் அத்தகையனவல்ல. அவை அசித்தின் தொடர் பில்லாது தானே எடுப்பனவாகும். இதனையே கண்ணன் தான் அசித்தின் தொடர்பு இல்லாதவன் என்று குறிக்கின்றான்.

## *வேதமும் அவதாரமும்*

அவதாரங்களைப் பற்றிய செய்தியை ஆகமங்கள் முதலில் கூறுவதாகக் கொள்ளலாம். சுக்கில எசுர் வேதத்தில் உள்ள புருட சூக்தத்தில் இரண்டாம் அனுவாகத்தில் 'பிறக்காதவன் பிறக்கிறான்' என்ற கருத்து காணப் பெறுகின்றது. யூபத்தில் கயிறு கட்டும்போது சொல்லப்பெறும் திருமாலைக் குறிக்கும் மந்திரம்ஒன்று' அவன் பிறந்து கொண்டு பெருமையை அடைகிறான்' எனக் கூறுகின்றது. ஆதலின் வேதத்தில் கூறப்படும் தெய்வக் கொள்கையின்படி அவதாரம் உண்டு என்றாகிறது.[1]

## *அவதாரத்தால் தாழ்மை*

இறைவன் அவதாரம் ஒரு, புல்லின் நுனியின் காணப்பெறும் சிறு பனித்துளியை ஒத்தது. அப்பனித்துளியில் மிகப்பெரும் மலையைக் காண்பதைப் போன்று அவதாரங்கள் தெய்வத்தன்மையையும், அருட் பாலிப்பையும் மனித வடிவில் வெளிப்படுத்தக் காணலாம். சூரியனிடம் ஒளி வெளிப்பட்டுக்கொண்டே இருப்பினும் அதனுடைய தன்மை குறையாததைப்போலப் பரம்பொருள் மனித வடிவில்வரினும் தன் முழுமையில் குறைவதில்லை. ஆதலின் வடிவு முதலானவற்றால் இறைவனுக்கு ஊறில்லை பரம்பொருட்குப் பெருமையாகிய மேன்மை சேருமேயன்றிச் சிறுமையாகிய கீழ்மை ஏற்படுவதில்லை.

## அவதாரங்களுக்குக் காரணம்

அவதாரங்களுக்குக் காரணமாய் அமைவது இறைவனின் இச்சையாகும்.அதனால் அமையும் அவதாரங்களின் நோக்கம் மூன்று வகைப்படும்.

1) தன்னிடம் பக்தி செலுத்துவாரிடம், தொண்டையன்றி ஏனைய வற்றைக் கணப்பொழுதும் நினையாத எளிய மக்களிடையே தன்னுடைய அருட் திறத்தை வெளிப்படுத்துதல்.

2) தீயவர்களைத் தண்டித்து நல்லவர்களுக்கு அருளுதல்.

3) இவ்வுலகத்தில் உயர் கருத்துக்கள் நலிந்து வைதிக மரபு தன்னிலை குலையும்போது இறைவன் அவதரித்துத் தன்னுடைய அருள் குணத்தை வெளிக்காட்டி, நற்கருத்தை நிலைநாட்டி இவ்வுலகத் தாரை உய்வித்தல்.

## மானிடரும், அவதாரங்களும்

சுத்த சிருட்டியாய்த் திகழும் அவதாரங்கள் மானிடவடிவுடன் கூடியவை. மக்களுடன் உலகில் வாழுபவை. மனிதன் தனக்கும் மேம்பட்ட பரம்பொருள் உண்டென்பதை மறந்துவிடுகிறான். அவதாரங்கள் மனித வடிவில் வரினும் அதனை மறப்பதில்லை. மனிதன் தன் உடலோடும், உள்ளத்தோடும் அதிகமாக ஒன்றி விடுகின்றான் தன்னையும் தன் னறிவையும் வரையறைக்கு உட்படுத்தும் அவனுடைய நிலை குருடருக்கு ஒத்ததாக விடுகிறது. ஆனால் அவதாரங்களின் தன்மை அத்தகையது அல்ல இதைப் பகவத் கீதை எடுத்துரைக்கின்றது பார்த்தன் கண்ணனிடம்.

> ***உனக்கு என் வயதுதான் ஆகின்றது. ஆயினும் நான் பிறப்பதற்கு முன் என்ன நிகழ்ந்தது என்பதை நீ அறிகின்றாய்.***

(பகவத் கீதை. அத். 4.சு.4)

என்று கூறுகின்றான். அதற்குக் கண்ணன்,

> ***உனக்கும் எனக்கும் பல பிறவிகள் கழிந்துள்ளன. நீ அவற்றை அறிய மாட்டாய் . அனால் நானோ அனைத்தையும் அறிவேன் உன்னுடைய மனத்திலும் உடலிலும் உன்னுடைய அறிவைச் சிறைப்படுத்தி வைத்திருக்கின்றாய் அதனால் உனக்குச் சில பொருட்களே தெரியும். கடந்த காலத்து நிகழ்ந்தன வற்றை நீ அறியாய் .***

***இப்பிறவியில் நடந்தன மட்டுமே நீ அறிவாய். இதற்குக் காரணம் நீ உடலோடும் மனத்தோடும் ஒன்று படுத்திக் கொண்டதே . இதனால் உனது பரப்பும் சுருங்கியுள்ளது. ஆனால் நான் என்னை உணர்வோடு ஒன்றுபடுத்திக் கொள்ளேன். எனது பரப்புக்கும் எல்லை இல்லை. எனது வாழ்க்கைக்கும் எல்லை இல்லை. அதனால் நான் எல்லாக் காலத்தையும் அறிகிறேன்.***

(பகவத்கீதை அத்.4.சு.5-6)

என்று உரைக்கின்றான்.

## *அவதாரங்களின் தெய்வத்தன்மை*

கீதையில் கண்ணனது தெய்வத்தன்மை கொண்ட பிறப்பும் செயலும் இவ்வாறு என்பதை உள்ளபடி உணர்வோன் உடலைத் துறந்த பின்னர் மறுபிறப்பு எய்துவதில்லை. அர்ச்சுனா! அவன் என்னை அடைகிறான்! (பகவத்கீதை அத்.4.சு.6) என்றுரைக்கின்றான். அதனால் அவதாரங்களில் தெய்வத்தன்மை வெளிப்படுகிறது என்பது விளங்கும். மேலும் அத்தெய்வத்தன்மை அறிதலரிது என்பதை,

***உணர்ந்து உணர்ந்து இழிந்து அகன்று உயர்ந்து உருவியந்த இந்நிலைமை***
***உணர்ந்து உணர்ந்து உணரிலும் இறைநிலை உணர்வரிது உயிர்காள்.***

(திருவாய்மொழி 1.3.6)

என்று நம்மாழ்வார் குறிப்பிடுகிறார். ஆயினும் " யாரும் ஒரு நிலையென அறிவெளிய எம்பிரான்" (திருவாய்மொழி 1.3.4) என உணர்தற் பொருட்டாய் அமைவனவே அவதாரங்கள்.

## *அவதாரங்களின் மறைபொருள்*

அவதாரங்களால் விளங்கும் மறைபொருளாக வைணவத்தின் குறிப்பிடப் பெறுவன சிலவுள.

1) திருமால் அவதாரங்கள் இந்திர சாலங்கள் போலன்றி உண்மையானவை.

2) அவதாரக் காலங்களிலும் திருமால் தன் தன்மையை விடாதிருப்பான்.

3 அவதாரங்களில் இருக்கும் அவனது திருமேனி ரசோ, தமோ குணங்களில்லாது சுத்து சத்துவமாய் அமையும்.

4) இப்பூமியில் அவதரிக்க வினைகள் காரணமாகாது. தானே காரணமாய் இருப்பான்.

5) பூமியில் தர்மம் குறைந்து அதர்மம் தலையெடுக்கும்போது இறைவன் அவதரிப்பான்.

6) சாதுக்களுக்கு அருள்புரிவதே அவதாரங்களின் நோக்கமாக அமையும்.

## *திருமாலின் அவதாரங்கள்*

திருமாலின் அவதாரங்கள் முப்பத்தொன்பது. அவற்றில் பத்து அவதாரங்கள் சிறப்பாகக் கொள்ளப்பெறுகின்றன. இவை பத்தும் முக்கியம், கௌணம் என இருவகைப்படும். முக்கியம் என்பது இறைவனின் நேரடி அவதாரமாகும். இராமன், கண்ணன் அவதாரங்கள் அவை. கௌணம் என்பது ஆவேச அவதாரமாகும். இதில் சுயரூபாவேசம் என்பது தனக்குரிய உருவத்துடன் ஆவேசத்தில் பரசுராமன் முதலானோரிடத்துத் தன்னுடைய அசாதாரண வடிவுடன் ஆவேசித்திருப்பது. சத்தியாவேசம் என்பது செயல்காலங்களில் சேதனரிடத்துச் சக்தியுடன் ஈடுபட்டிருத்தல். இவ்வாறு கௌணம் இருவகையாக விளக்கப்படும்.

முக்கிய அவதாரம் மூன்று வகையாகக் கொள்ளப்படும். அவை,

1. மானிடத்துவம், 2. திரியக்துவம், 3. சதாரத்துவம் என்பன.

மானிடத்துவம் என்பது இராம, கண்ண, வாமன அவதாரங்களைக் குறிக்கும். திரியக்துவம் என்பது மச்சம், கூர்மம் முதலான குறுக்கே திரியும் உயிர்களைக் குறிக்கும். சதாரத்துவம் என்பது திருப்புளியாழ்வான் போன்ற செடி கொடி வகைகளைக் குறிக்கும். முக்கிய அவதாரங்களுக்குக் காரணமாக இருப்பது இறைவனின் இச்சையேயாகும். ஆவேச அவதாரங்களுக்குக் காரணமாய் அமைவதும் அதுவே.

அவதாரங்கள் பலவாயினும், திருமாலின் பத்து அவதாரங்களைப் பாடுவதில் ஆழ்வார்கள் பெரிதும் ஈடுபட்டனர். இப்பத்து அவதாரங்களும் திருமாலின் அருட்குணத்தின் காரணமாக நிகழ்ந்தன எனப் போற்றப் படுகின்றன. ஆழ்வார்களின் பாசுரங்களில் இடம் பெறுவனவற்றுள் இராம, கண்ணன் அவதாரங்கள் இன்றியமையாதனவாகும்.

## *அம்சம்*

**ஆழ்வார்கள் திருமாலின் அம்சமாகத் தோன்றியவர்கள் என அவதாரக்கொள்கை ஒன்று உண்டு. அப்படியாயின் ஆழ்வார்கள் திருமாலைப் பாடினும் தம்மைதாம் பாடியதாகவன்றோ அமையும் என்னும் ஐயம் எழலாம். தாம் இப்பூலகத்து எழுந்தருளி மக்கட்கு அருள்புரிவதைக் கேட்கும்பொழுது ஏற்படும் இன்பம் கருதி திருமால் ஆழ்வார்களை பாடச்செய்தான். அவதாரங்களில் வெளியாகும் எளிவந்த**

தன்மைகளைப் பாடவும் பேசவும் செய்பவர் வைகுந்தத்து நித்திய சூறிகளோடும் இருக்க வல்லவர்கள் என்பது வைணவ மரபாகும். ஆதலின் ஆழ்வார்கள் அனைவரும் அவதாரங்களில் தம் மனதை ஈடுபடுத்திப் பாசுரங்கள் அமைத்தனர். மானுட வடிவில் அமைந்த அவதாரங்களான இராமன், கண்ணன் அவதாரங்களின்பால் ஆழ்வார்கள் ஈடுபட்டு அவற்றில் வெளியாகும் சௌலப்பிய குணங்களைப் பெரிதும் அனுபவிக்கின்றனர். இவ்வவதாரங்களில்தான் தெய்வத்தன்மை மிக்கு வெளிப்படுகின்றது. அவதாரங்கள் பத்தும் பெரியாழ்வாரின் பாசுரங்களில் இடம் பெறுகின்றன.

## அவதாரங்களைப் பாடுவதில் பெரியாழ்வார் நிலை

திருமகள் கேள்வனான மாலிடத்தில் பக்தி கொண்ட ஆழ்வார்கள் அனைவரும் திருமாலையும், அவதாரங்களையும் வேறுபடுத்திக் காண்பதில்லை. ஆயினும் ஆழ்வார்களுக்கு இறைவனின் வெவ்வேறான குணங்களில் ஈடுபாடுள்ளதை அவர்களுடைய பாசுரங்கள் வழியாக உணரலாம். அதை போன்றே வெவ்வேறான அவதாரங்களிலும் அவர்களுடைய ஈடுபாடு அமையும். நம்மாழ்வாருக்கும் பெரியாழ்வாருக்கும் கண்ணன் அவதாரத்தில் ஈடுபாடு மிகுதி. குலசேகர ஆழ்வாருக்கு இராமாவதாரத்தில் ஈடுபாடு பெரிது.

பெரியாழ்வாரின் கண்ணன் அவதார ஈடுபாடு பாசுரங்கள் வழி தெற்றென விளங்கும். அவருடைய பாசுரங்களில் பாதிக்குமேல் கண்ணன் அவதாரச்செயல்களைக் கூறுவன. கண்ணன் வரலாற்றையே கூறும் இப்பாசுரங்களைப் பாகவத நூலுக்கு முன்னோடியாகக் கொள்ளலாம். கண்ணன் அவதாரத்தையே சிறப்பித்துப் பாடினும், ஏனைய அவதாரத்தையே நீக்கிப் பாடினார் என்று கொள்வதற்கில்லை. திருமாலைக் கண்ணனாகவும் இராமனாகவும் ஏனைய அவதாரங்களாகவும் காணும் மாண்பு அவர்க்குரியது. அவர் பாசுரங்களில் கண்ணன் அவதாரச் செயல்கள் ஒன்றை மட்டுமே மிகுதியாகப்பாடியிருப்பினும் அவற்றின் வாயிலாக அவர் காட்டும் பக்திச் சிறப்பும் ஈடுபாடும் ஏனைய அவதாரங்களைப் பாடும்போதும் வெளிப்படுகின்றது.

சூடிக்கொடுத்த சுடர்க்கொடியாள் வடபெருங்கோயிலுடையானுக்கு மாலையைச் சூடிக்கொடுத்துத் திருவேங்கட முடையானைக் காதலித்து அர்ச்சா வடிவங்களில் திருவரங்க மணவாளனுக்கு மணவாட்டியானது அவருடைய சரிதம் காட்டும் செய்தி. ஆதலின் அர்ச்சா வடிவங்கள் வெவ்வேறாயினும் திருமால் ஒன்றென்பது பெறப்படும். பெரியாழ்வார் கண்ணனை மிகுதியாகப் பாடினும் ஏனைய ஒன்பது கண்ணன் வெண்ணெய் திருடி உண்டதை 'மிடறு மெழுமெழுத் தோட

அவதாரங்களையும் சிறப்பித்துப் பாடுகின்ற பான்மையால் அவதாரங்கள் அனைத்தும் அரியின் அருள் என்பதை விளக்குகின்றார். பொற்கட்டி ஒன்றாய் இருந்து பல ஆபரணங்களாவது போன்று, பெருமான் ஒன்றாகவே இருந்து பல அவதாரங்களாகவும், பல அர்ச்சைகளாகவும் திகழ்கின்றான் என்பது தந்தை, மகள் ஆகியோரின் வாழ்வு காட்டும் வைணவ சமய விளக்கமாகும்.

அர்ச்சை வடிவங்களில் பத்து அவதாரங்களையும் காணும் பெரியாழ்வார் அவற்றைப் பலவாறு எடுத்துரைக்கின்றார். ஆயினும் தம் பாடுபொருளுக்கு அடிப்படையாகக் கண்ணன் அவதாரத்தைக் கொண்டார் எனலாம். குலசேகரர், தம் வாழ்வில் படையுடை மன்னராக திகழ்ந்ததால் இராமனுக்குதவ படை எடுக்க எழுந்தார். தம் வாழ்வில் குழந்தை இன்பத்தின் சிறப்புணர்ந்த பெரியாழ்வாருக்கு கண்ணன் அவதாரம் பாடுபொருளாக அமைந்தது. எவ்விடத்துப் பிறந்தாலும் நதி கடலில் கலப்பதைப்போல எவ்வவதாரங்களைப் பாடினும் அது திருமாலையே சாரும் எனும் எண்ணம் கொண்டவராகப் பெரியாழ்வார் திகழ்கின்றார்.

*எதிரிற் பெருமை இராமனை யிருக்கு மிடம்நா டுதிரேல்*
*அதிரும் கழற்பொரு தோளி ரணிய னாகம் பிளந்தரியாய்*

(பெரியாழ். 4.1.1)

என இராமனை நரசிம்மாவதாரத்தோடு இணைத்துக் காண்கின்றார். இவ்வாறன்றி அர்ச்சை வடிவங்களைப் பாடுகின்றபோது அனைத்து அவதாரங்களையும் ஒன்றாகவே ஆழ்வார் பாவிக்கின்றார். இராமன் கண்ணன் அவதாரங்களில் சௌசீல்ய, சௌலப்பிய குணங்கள் மிக்கு வெளிப் படுகின்றன என்பது நாலாயிரம் காட்டும் சான்று. அதனையொட்டி இவ்விரு அவதாரங்களையும் ஒன்றாக இணைத்து காணுகின்றார் ஆழ்வார்.

*கொலை யானைக் கொம்பு பறித்துக் கூடலர் சேனை பொருந்தழியச்*
*சிலையால் மராமர மெய்த தேவனைச் சிக்கென நாடுதிரேல்*

(பெரியாழ். 4.3.1)

என ஆழ்வார் அமைக்கும் பாசுரம் அதற்குச் சான்றாக அமையும். மேலும் பத்து அவதாரங்களையும்,

*தேவுடைய மீனமாய் ஆமையாய் ஏனமாய் அரியாய்க் குறளாய்*
*மூவுருவினில் இராமனாய்க் கண்ணனாய்க் கற்கியாய் முடிப்பான் கோயில்*

(பெரியாழ். 4.9.9)

இணைத்து அர்ச்சா வடிவில் காணும் சிறப்புக் கருதத்தக்கது. இவ்வாறு பத்து அவதாரங்களையும் பாடுவதில் பக்திச் சிறப்பு மேன்மையடைய காணலாம். பெரியாழ்வார் பாடத்தொடங்கும்பொழுது,

"மல்லாண்ட திண்டோள்" எனத் திருமாலின் தோளுக்கு மங்களாசாசனம் கூறுகின்றார். அவதாரங்களில் பகைவர்களின் கொடுமைக்குக் கண்ணன் அவதாரமே மிக்கு ஆளானது. ஆதலால்தான் கண்ணன் அவதாரத்திற்குச் சிறப்பிடம் கொடுத்து மங்களாசாசனம் செய்தார்.

## *கண்ணன் அவதார ஈடுபாடு*

கண்ணன் அவதாரத்தில் பெரியாழ்வார் ஈடுபாடு கொண்டதற்குக் குரு பரம்பரை ஒரு நிகழ்ச்சியைக் கூறுகின்றது. கஞ்சனை அழிக்க கண்ணன் அவனுடைய நகருக்கு எழுந்தருளிய பொழுது மாலை தொடுப்பவன் ஒருவனிடம் மாலையை வாங்கி அணிந்து கொண்டான் கண்ணன். அதனால் அம்மாலை விற்றவன் நற்பேறு பெற்றான். இதனை அறிந்த ஆழ்வார் மாலை தொடுத்துத் திருத்தொண்டு மேற்கொள்வதே வீடுபேற்றிற்கு வழி என எண்ணி அதனை மேற்கொண்டார் எனக் கூறுகின்றது குருபரம்பரை. திருத்தொண்டிற்குக் காரணமான கண்ணன் அவதாரத்தின் மேல் ஆழ்வார் ஈடுபாடு கொண்டதில் வியப்பேதுமில்லை.

குழந்தைப் பருவத்தின் இன்பத்தைத் துய்க்க இக்கண்ணன் அவதாரம் ஒருவழியாக அமைந்தது ஆதலின் கண்ணனின் பல பருவங்களை அசோதையாக இருந்து பாடுகின்றார் ஆழ்வார். தாம் கண்ட புதிய இலக்கிய உத்தியைக் கையாள ஆழ்வாருக்குக் கண்ணன் அவதாரம் உதவியதாகக் கொள்ளலாம். இராமன், கண்ணன் அவதாரங்களின் நோக்கம் யாவும் பகைவர்களை அழிப்பதுதான். இவற்றில் கண்ணன் அவதாரத்தில் தான் இறைவனின் எளிவந்த தன்மை நன்கு வெளிப்படுகின்றது. ஆதாலால் கண்ணன் அவதாரத்தில் ஈடுபாடு கொண்டார்.

எளிவந்த தன்மையன்றி, ஸ்வாமித்துவம் எனும் கடவுட் தன்மையும் வெளிப்படும் அவதாரமும் இதுதான். பக்தன் வேண்டுவன தரும் தன்மை இக்குணமாகும். கண்ணன் செயல்களின் இக்குணத்தைப் பரக்கக் காணலாம். இறந்த வைதிகனின் பிள்ளைகளைத் தாய் தந்தையருடன் கட்டுவித்தது; கடலில் மூழ்கி மாண்ட குருவின் மகனைத் தக்கணையாக அவருக்கு மீட்டுக் கொடுத்தது முதலிய அரிய செயல்களைத் திருமால் நிகழ்த்தியது இவ்வவதாரத்தில் தான். வைகுந்தமாகிற பரத்தை அடையும் பேறு ஒன்றே ஆழ்வார் இறைஞ்சுவது. அதனையும் தரவல்லவனாக இருப்பவன் கண்ணன் என்றெண்ணிக் கண்ணன் அவதாரத்தில் ஈடுபாடு கொண்டார்.

சிறையிலே பிறந்தவன் கண்ணன். ஒருத்தி மகனாய்ப் பிறந்து வேறொருத்தி மகனாய் வளர்ந்தவன். இராமாவதாரத்தில் தண்ட காரண்ய முனிவர்கள் வேண்டுகோளின்படி அவர்கள் ஆயர்பாடியில் ஆய்ச்சியர்களாக அவதரித்தனர். எங்கும் பரந்துள்ளவன் சிறையில் பிறந்தான்.

அங்கிருந்தகன்று ஆயர்பாடியில் வளர்ந்தான். ஆயர்பாடியில் தம் பொருட்டு வந்தவர்க்காய்ச் சிறையில் பிறந்தமை இவ்வதாரத்திற்கு மட்டுமே உரிய சிறப்பு. ஆயர்பாடி மக்களைப் பசு கன்றினைக் காப்பது போன்று காத்தான் கண்ணன். இதனால் வெளிப்படுவது கண்ணனின் வாத்சல்ய குணம். இக்குணத்தில் ஆழ்வார் கொண்ட ஈடுபாடே கண்ணன் அவதாரத்தைப் பாடச் செய்தது.

பெரியாழ்வார் அனைத்து அவதாரங்களையும் சிறப்பித்துப் பாடுகின்றார். ஆயினும் அவை எல்லாவற்றிற்கும் காரணமாய் அமை பவன் கண்ணனே என்பது அவர்தம் சிந்தையாக உள்ளது. இவ்வுயர் சிறப்புடை கண்ணனே எலலோரையும் ஆட்கொள்ளும் இயல்பினன் என்பது ஆழ்வாரின் முடிந்த முடிபு. அதனை 'ஆட்கொள்ளத் தோன்றிய ஆயர் தம் கோவினை' என்ற பாசுரத் தொடரால் அறியலாம்.

இராமன், கண்ணன் அவதாரங்களின் நோக்கம் பகைவர்களை அழிப்பதுதான். இராமாவதாரத்தில் இராமன் துயர்பட்டது அனைவரையும் துயர்வுறச்செய்தது. ஆனால் கண்ணன் அவதாரத்தில் அப்படியன்று, கண்ணன் துயர்வுற்றதாக அதில் காணஇயலாது. குறும்புகள் காரணமாக அவன் ஆய்ச்சிகளால் கட்டுண்டு அடியுண்டான். அவற்றைக் கண்ணன் துயராகக் கொள்ளவில்லை. கண்ணன் குறும்புகளுக்கு ஆய்ச்சியர்களின் தண்டனை அவனுக்கு மகிழ்ச்சியையே அளித்தது. ஆதலின் தான் கட்டுண்டு பிறரை மகிழ்விக்கும் பண்பு கண்ணன் அவதாரத்தின் சிறப்பு. இராமா வதாரத்தில் கூனியின் முதுகில் மண்ணுருண்டையால் அடிக்க, அதன் காரணமாகக் கூனி தீராப்பகைக் கொண்டு கானகத்தில் துயர்வுரும் நிலைமை உண்டாக்கினாள் என்பர். இவற்றில் தான் கட்டுண்டு பிறரை மகிழ்வித்த கண்ணன் அவதாரமே ஆழ்வார்க்கு மகிழ்ச்சியை ஏற்படுத்தக் காரணமாய் இருந்தது.

திருமாலின் அவதாரங்கள் யாவும் இப்பூவுலகம் உய்யும் பொருட்டாக எடுக்கப்பட்டவை. அவற்றில் மச்சம், கூர்மம், வராகம் முதலான அவதாரங்கள் ஒரு காலத்தில் உடன் தோன்றி மறைந்து விட்டவை. திருமால், இராமன், கண்ணன் எனும் அவதாரங்களாய் உலகில் வாழ்ந்து நன்னெறி காட்டினான், இவ்விரு அவதாரங்களில் இறுதியானது கண்ணன் அவதாரமாகும். கண்ணன் அவதாரத்தில்தான் அவதாரங்களில் நோக்கத்தை எடுத்துக்கூறி அது மக்கட்கு புலனாகும் வகையில் பகவத்கீதையில் கண்ணன் உரைக்கிறான். அதனால்தான் கண்ணன் அவதாரத்தில் ஆழ்வாருக்கு ஈடுபாடு ஏற்பட்டது.

ஆழ்வார் காலத்துக்கு முன் கண்ணனின் செயல்களைக் குறித்து எழுந்த இலக்கியங்கள் அமையவில்லை. சிலப்பதிகாரத்தில் சில

நிகழ்ச்சிகள் ஆங்காங்கு அமைகின்றன கண்ணனின் செயல்களை முழுமை யாகக் கூறி இலக்கியம் செய்யவேண்டும் என்னும் அவா ஆழ்வார் உள்ளத்தில் எழுந்திருக்கலாம். அதன் காரணத்தாலும் பக்திப் பெருக்காலும் கண்ணன் அவதாரம் அவருடைய ஈடுபாட்டுக்குக் காரணமானது. இவற்றையெல்லாம் மனதில் கொண்டே ஆழ்வாரும்,

> ***வேயர்தங் குலத்துதித்த விட்டுசித்தன் மனத்தே***
> ***கோயில் கொண்ட கோவலனைக் கொழுங்குளிர் முகில் வண்ணனை***
> ***ஆயர்கள் ஏற்றை***
>
> (பெரியாழ்வார் 5.4.11)

எனக் குறிக்கின்றார். இதனால் கண்ணன் அவதாரமே அவர் மனத்தில் கோயில் கொண்ட அவதாரமாகக் கொள்ளப்பெறுகின்றது.

## *பெரியாழ்வாரும் கண்ணன் அவதாரமும்*

கண்ணன் அவதாரத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்டு பாடும் ஆழ்வார் பாசுரங்களான நானூற்று எழுபத்துமூன்றில் இருநூற்று அறுபத்தொரு பாசுரங்களில் கண்ணனால் பாலப்பருவததைப் பாடுகின்றார். கண்ணனால் ஆழ்வார் அடையும் குழந்தை இன்பம் கணக்கிலடங்கா. அசோதையாய் இருந்து அவர் அமைக்கும் பாசுரங்கள் சிறப்புடையவை. கஞ்சனின் பகை காரணமாகக் கண்ணனை அழிக்க கஞ்சன் அசுரர்களை அனுப்பியது முதல் பாண்டவர்களுக்கு அரசு வழங்கியது ஈறாகப் பல செய்திகள் கூறப் பெறுகின்றன. இவ்வாறு அமையும் நிகழ்ச்சிகள் நாற்பத்து எட்டாகும். அவை வடமொழிப்புராணங்களிலும், விட்டுணு புராணம், அரிவம்சம், பாகவதம் போன்ற நூல்களிலும் காணப்பெறுவன ஆகும். இவையன்றித் தமிழ்நாட்டுக்கே உரிய கதைகள் சிலவும் ஆழ்வாருடைய பாடல்களில் அமைகின்றன.

## *கண்ணனும் நப்பின்னையும்*

நப்பின்னை என்பது ந-பின்னை என்றமையும். நப்பின்னையைப் பின்னை எனவும், பிஞ்ஞை எனவும், மீளை எனவும் வழங்கும் மரபு தமிழ் இலக்கியங்களில் காணப்பெறுகின்றது. உபகேசி என்று வழங்கப் பட்டதாகவும் குறிப்பர். இந்நப்பின்னையை ஆயர் குலமகள் எனச் சிலப்பதிகாரம் குறிக்கின்றது. ஆயர்குல மகளான அவள் பொருட்டு ஏழு விடைகளைக் கண்ணன் தழுவி அவளை மணந்தான் என்பது தமிழ் இலக்கியங்கள் தரும் சான்று. சங்க இலக்கியத்தில் காணப்பெறாத இச் செய்தி சிலப்பதிகாரத்தில் காணப்பெறுகின்றது. ஆயர் குலத்தில் ஏறு தழுவி மனம் கொள்ளுதல் மரபென அமைய கண்ணன் ஏழு விடைகளைத்

தழுவி நம்பின்னையை மணந்த வரலாறு பழங்காலம் முதல் தமிழகத்தில் வழங்கி வந்திருக்கின்றது. அதனினும் வேறுபட்ட செய்தி வடமொழி பாகவதத்தில் காணப்பெறுகின்றது. அசோதையின் தம்பியான கும்பாண்டான் என்பவனிடமுள்ள ஏழு விடைகளைத் தழுவியவரே தம் மகளான சத்தியவதியை மணம் செய்து கொள்ளலாம் என அயோத்தி வேந்தன் கூற, ஏனைய வேந்தர்கள் அஞ்ச, கண்ணன் அவ்விடைகளைத் தழுவி அவளை மணந்தான் என்பது வடமொழி பாகவதம் கூறும் செய்தி. விடை தழுவியது மட்டும் நப்பின்னை வரலாற்றுக்கும், இவ் வரலாற்றுக்கும் பொதுவானதாக அமைகிறது, நெல்லி நகர் வரதராசர் அருளிச்செய்த பாகவதம் நப்பின்னையையும், சத்தியவதியையும் வெவ்வேறு தேவியவர்களாக கூறுகின்றது. இவ்விருவரையும் வெவ்வேறான சமயங்களில் ஏழு விடைகளைத் தழுவி மணந்ததாக அப்பாகவதம் குறிக்கின்றது. இவ்வரலாற்றில் நப்பின்னையை ஆயர் குலமகள் என்று குறிப்பதையும் காணலாம்.

கண்ணன் நப்பின்னையுடனும் பல தேவருடனும் இணைந் தாடிய குரவைக் கூத்தினைச் சிலம்பு குறிக்கின்றது. இச்செய்தி பாகவதம், விஷ்ணு புராணம் ஆகியவற்றில் இடம்பெறவில்லை. அப்புராணங்களில் கோவர்த்தன கிரியைக் குடையாகத் தாங்கிய பின்னர் கண்ணன் கோபியருடன் இணைந்து 'இராசக்கிரீடை' என்ற கூத்தினை நிகழ்த்தினான் என்றே கூறப்பட்டுள்ளது. மேற் கூறியவற்றால் நப்பின்னை பற்றிய செய்தி தமிழகத்திற்கே உரிய ஒன்றாக இருந்தது என்பது விளங்கும். இந் நப்பின்னைக்காகக் கண்ணன் ஏழுவிடைகளைத் தழுவியதைப் பெரியாழ்வார், நான்கு இடங்களில்,

***விம்ம வளர்ந்தவனே வேதமும் ஏழ்விடையும்***
***விரவிய வேலைதனுள் வென்று வருமவனே***

(பெரியாழ்.1.5.3)

***நப்பினைதன் திறமா நல்விடை யேழவிய***
***நல்ல திறலுடைய நாதனும் ஆனவனே***

(பெரியாழ்.1.5.7)

***எருதுகளோடு பொருதி ஏதும் உலோபாய் காண்நம்பி***

(பெரியாழ்2.7.6)

***ஆயர்மடமகள் பின்னைக்காகி அடல்விடையேழினையும்***
***வீயப்பொருது வியர்த்து நின்றானை***

(பெரியாழ். 4.1.4)

எனக் குறிக்கின்றார்.

கண்ணனின் தேவியர்களுள் எண்மர் சிறப்பாகக் கூறப் பெறுகின்றனர். அவர்கள் உருக்குமிணி, சத்தியபாமை சாம்பவதி, காளிந்தி, மித்திரவிந்தை, சத்தியை, பத்திரை, இலட்சுமனை என்பவராவர். இவர்களுள் உருக்குமிணியும், சத்தியபாமையும் வடமொழிகளில் சிறப்பாக குறிக்கப்பெறுகின்றனர். தமிழ் மொழி மரபில் பண்டை இலக்கியங்கள் நப்பின்னையையே கண்ணனுடன் இணைத்துக் கூறுகின்றன. ஆழ்வார் நப்பின்னையைப் போன்றே உருக்குமிணியையும், சத்தியபாமையையும் தன் பாசுரங்களில் குறிக்கின்றார். உருக்குமிணியைப் பற்றிக் கூறும் போது இருவகைச் செய்திகள் அறியக்கிடைக்கின்றன. 1. உருக்குமிணியைத் தேரேற்றி வந்தது. 2. அப்போது எதிர்வந்த உருக்குமனையும், ஏனைய அரசர்களையும் போர் செய்து வென்றது. இவை

***உருப்பிணி நங்கையைத் தேரேற்றிக் கொண்டு***
***விருப்புற்று அங்கேக விரைந்து எதிர்வந்து***
***செருக்குற்றான் வீரம் சிதைய தலையைச்***
***சிரைத்திட்டான்.***

( பெரியாழ்: 3.9.3)

என்று பாடப்பெறும்.

சத்தியபாமைக்காகக் கற்பகமரத்தைக் கொணர்ந்ததும் குறிக்கப் பெறுகின்றது.[2]

## *குருந்தமொசித்தது*

கண்ணனின் குழந்தைப் பருவச் செயல்களில் அவன் குருந்தம் ஒசித்ததும் ஒன்று. ஆயர் மகளிர் துகில்களை எடுத்துக்கொண்டு கண்ணன் யமுனா நதியின் கரையில் ஒரு குருந்த மரத்தில் ஏறினான் என்றும் அதனை அறிந்திருந்த, கஞ்சனால் ஏவப்பட்ட அசுரன் ஒருவன் அதில் ஆவேசித்துக் கிடந்தான் என்பதும் அதனை உணர்ந்த கண்ணன் அம்மரத்தை முறித்தான் என்பதும் புராணச்செய்தி.

'கொல்லையஞ்சாரல் குருந்தொசித்த மாயவன்' என்பதற்குப் புனக் கொல்லையைச் சார்ந்த விடத்து வஞ்சனையால் வந்து நின்ற குருந்தொசித்த மாயவன் என்று அடியார்க்குநல்லார் உரைக்கின்றார். ஆழ்வார்கள் குறிப்பிடும் 'குருந்தொசித்த' எனும் தொடருக்கு 'அசுராவிட்டமான குருந்து' என்று உரை கூறுகின்றனர் வியாக்கியானம் உரைப்பவர்கள். ஆனால், சங்க காலந்தொட்டே வழங்கி வருகின்ற 'குருந்தொசித்த வரலாறு' தமிழகத்தில் வேறுவகையில் வழங்கி வந்திருக் கின்றது. ஆயர் மகளிர் துகில்களைக் கவர்ந்த கண்ணன் எதிர் வந்த பலதேவன் காணாதவாறு அம்மகளிர் மறையும்படி குருந்த மரத்தை ஒசித்து மறைத்தான் என்று பொருள் கொள்வர்.

### குடக்கூத்து

குடக்கூத்தைச் சிலம்பே முதலில் குறிக்கின்றது[3]. வடமொழி இலக்கியங்களில் இக்குடக்கூத்து குறிக்கப்பெறவில்லை. கண்ணன் ஆடிய இக்கூத்தினை "குடங்களெடுத் தேறவிட்டுக் கூத்தாட வல்லவெங் கோவே"[4] எனப் பெரியாழ்வார் குறிக்கின்றார்.

### சீமாலிகன் தலை அறுத்தது

ஏனைய ஆழ்வார்கள் கூறாத கதை ஒற்றைப் பெரியாழ்வார் தம் பாடலில் குறிக்கின்றார். சீமாலிகன் என்னும் இடையன் ஒருவன் கண்ணனுக்கு நெருங்கிய நண்பனாய் இருந்தான். மக்களுக்குத் துன்பம் செய்து வந்தான். அவனை அழிப்பின் தனக்குப் பழிவரும் என்றெண்ணிய கண்ணன் அவன் தானே அழியுமாறு செய்தான். கண்ணனின் சக்கராயுதத்தைச் சீமாலிகன் கையில் வாங்கிச் சுழற்ற அது அவனுடைய தலையை அறுத்துச் சென்றது. இது வடமொழிப் புராணங்களில் காணப்பெறாத செய்தியாகும். கண்ணனின் சிறப்பான செயல்களில் இதுவும் ஒன்று.

### கண்ணனின் குறும்புச் செயல்கள்

கண்ணனின் அவதாரச் செயல்களில் அவனுடைய குறும்புச் செயல்கள் பலவாறு எடுத்துச் சொல்லப்படுகின்றன. வடமொழி பாகவதத்திலும் கூறப்பெறாத பல குறும்புச் செயல்கள் பெரியாழ்வார் பாசுரங்களில் அமைகின்றன. கண்ணனின் அவதார நோக்கங்களாக இவை இடம்பெறுகின்றன.

வெண்ணெயும் தயிரும் வாரி விழுங்கியது. கன்றுகளின் காதில் கட்டெறும்பு பிடித்துவிட்டது. எண்ணெய்க்குடத்தை உருட்டி இளம் பிள்ளைகளைக் கிள்ளி எழுப்பியது; வெண்ணெய் திருடி உண்டு பொய் உறக்கம் கொண்டது, ஏனைய பிள்ளைகளின் கண்களில் மண்ணைத் தூவி காலால் உதைத்தது; வெண்ணெயைத் திருடி உண்டு; வெறும் கலத்தை கல்லிடை மோதி அது உடையும் ஒலி கேட்டு இன்பம் அனுபவித்தது; உருக வைத்திட்ட குடத்தோடு வெண்ணெய் உறிஞ்சி உடைத்திட்டுப் போந்தது; ஆய்ச்சி ஒருத்தி அயலகத்து நெருப்பு வாங்கச் சென்றபோது அவள் மகளை ஏமாற்றிப் பாலைப் பருகிறது; அயலகத்து ஆய்ச்சி திருவோண விரதத்திற்கு செந்நெல் அரிசி, சிறு பருப்பாலும் நறு நெய் பாலாலும் செய்த அக்காரத்தைத் திருடி உண்டது; கன்னல் பாகால் செய்த இலட்டுவத்தையும், சீடையையும் காரெள்ளின் உருண்டையையும் திருடி உண்டு பின்னும் உறியில் இருக்கும் வெண்ணெயையும் சோதித்தது முதலானவை கண்ணனின் குறும்புச் செயல்களாக கூறப்படுகின்றன. இவை அசோதை கூற்றாகவும் அயலகத்து

ஆய்ச்சியர்களின் முறைப்பாடுகளாகவும் அமைகின்றன. ஆழ்வார் கண்ணன் ஒருத்தியிடம் வளை திருடி வேறொருத்தியிடம் நாவற்பழம் வாங்கிய செய்தியைத்,

*கொல்லையிளின்றும் கொணர்ந்துவிற்ற அங்கொருத்திக்கு அவ்வளைகொடுத்து*
*நல்லன நாவற்பழம் கொண்டு நானல்லேனென்று சிரிக்கின்றானே*

(பெரியாழ். 2.9.10)

என்று குறிப்பிடும் தன்மை அவன் செயல்கள் காண்பாருக்கும் கேட்பாருக்கும் இன்பம் பயப்பன என்பது விளங்கும். இவ்வாறு திருடியதால் அயலகத்து ஆய்ச்சியர்களால் கட்டுண்டு அடி வாங்கியது முதலானவும் குறிக்கப்பெறுகின்றன.

## *கண்ணனும் ஆய்மகளிரும்*

கண்ணன் ஆயர் மகளிருடன் விளையாடியதும், அவர்களிடத்து குறும்பு இழைத்ததும் ஆழ்வாரால் கூறப்படுகின்றன. அவை இலக்கிய இன்பம் தருவனவாக அமைந்து கண்ணனின் சௌலப்பிய குணத்தைக் காட்டுவனவாக அமைகின்றன. ஏனைய ஆழ்வார்களின் பாசுரங்களில் அமையாத அளவு பெரியாழ்வார் பாசுரங்களில் கண்ணன் ஆயர் மகளிருடன் விளையாடியமை குறிக்கப்பெறுகின்றது.

ஆற்றில் விளையாடிய ஆயர் சிறுமிகளைச் சேற்றால் எறிந்து வளையும், துகிலும் கொண்டது; ஆயர் மகளிரின் ஆடை கொண்டு விண்தோய் மரத்தில் ஏறியது; மின் போல நுண்ணிடையாள் ஒருத்தியை வேற்றுருவம் செய்து வந்தது; ஆய்ச்சி ஒருத்தியின் துகில் பற்றி நின்று குற்றம் பலபல செய்தது; சுரும்பார்மென் குழல் கன்னி ஒருத்திக்குச் சுழ்வலை வைத்தது; பிறர் மக்களை மையன்மை செய்து தோளால் இட்டவரோடு திளைத்துச் சொல்லப்படாதன செய்தது; தாயர் மோர் விற்கப்போகவும், தந்தைமார் ஆநிரை மேய்க்கப் போகவும் அவர் தம் இளம் கன்னிகளை நினைத்தபடி கொண்டு போனது, முதலான பல குறும்புச் செயல்களையும் கூறுகின்றார் ஆழ்வார். இவை குறும்பிழைக்கப்பட்ட ஆயர்மகளின் கூற்றாகவும், அசோதை கூற்றாகவும் அமைகின்றன.

***கொத்தார் பூங்குழல் கன்னி ஒருத்தியைச் சோலைத் தடம் கொண்டு புக்கு***
***முத்தார் கொங்கை புணர்ந்திரா நாழி மூவேழு சென்றபின் வந்தாய்***

(பெரியாழ். 3.1.10)

என்று ஆழ்வார் அசோதை கூற்றாக அமைக்கும் பாசுரம் கண்ணன் ஆயர் மகளிருடன் குறும்பு நிகழ்த்தியமையின் அளவின்மையைக் காட்டும்.

### கண்ணனும் குழலும்

கண்ணன் அவதாரச் செயல்களில் அவனுடைய குழலோசைச் சிறப்பும் போற்றப்படுகின்றது. ஆநிரை மேய்க்கப்போகும் சிறார்கள் அக்குழலைத் தன்னுடன் கொண்டு சென்று குழலூதி வருவது ஆயர்குல வழக்காகும். கண்ணனும் ஆயர்குல மகனாதலின் அவனுடைய குழலோசைச் சிறப்பினை ஆழ்வார் எடுத்துரைக்கின்றார். உயிருள்ள பொருள்களும், உயிரற்ற பொருள்களும் அவனுடைய குழலோசையின் வயப்பட்டன என ஆழ்வார் காட்டும் சிறப்பும் கண்ணனின் இறைத் தன்மையை வெளிப்படுத்துவதாகும்.

*கறவையின் கணங்கள் பால்பரப்பிட்டுக்*
*கவிழ்ந்திறங்கிச் செவியாட்ட கில்லாவே*

(பெரியாழ்வார் 3.6.8)

என்றால் போல்வன அதற்குச் சான்றாகும்.

### இராமாவதாரம்

இந்திய இதிகாசங்களான மகாபாரதமும், இராமாயணமும் திருமாலின் குணத்தையும், திருமகளின் அருளாற்றலையும் குணத்தையும் வெளிப் படுத்துவனவாகக் கூறப்பெறும். மகாபாரதம் தூது சென்றான் ஏற்றம் கூறுவது. இராமாயணம் சிறை இருந்தாள் சிறப்புக் கூறுவது.

பெரியாழ்வார் கண்ணனிடம் கொண்ட ஈடுபாட்டை இராமா வதாரத்திலும் காட்டுகின்றார். சீதையின் பொருட்டாக இராவணனைக் கொன்றதும், இலங்கையை அழித்ததும் ஆழ்வாரால் பேசப்பெறுகின்றன. இராமாயணக் கதையுடன் தொடர்புடைய பதினாறு நிகழ்ச்சிகளை ஆழ்வார் குறிப்பிடுகின்றார்.

இராமனுக்குதவ படையெடுக்க முயன்ற பெருமை குலசேகரருக்கு உரியது போன்று, இலங்கை அசோகவனத்து வாடிய சீதைக்கு இராமன் இருப்பிடத்தைக் கூற அனுமனை அனுப்பிய சிறப்புப் பெரியாழ்வாருக்கு உரியது. கண்ணனைத் தாயாய் இருந்து வளர்த்த உணர்வு இராமா வதாரத்தில் இராமனின் வரவு காணும் சீதையின் பால் சென்றது. அதன் பலனாக எழுந்ததே அனுமன் அடையாளம் உரைத்தது.

சுந்தர காண்டத்துப் பெருமைகளில் ஒன்றாகத் திகழ்வது பிரிந் திருந்த சீதையும் இராமனும் ஒருவர் இருப்பிடம் ஒருவர் அறிந்ததாகும். அது அனுமன் வாயிலாக நிகழ்ந்தது. சுந்தரகாண்டத்தின் கருப்பொருளை ஒரு பத்துப் பாசுரங்களில் பாடிவிடுகின்றார் ஆழ்வார். சுந்தர காண்டம்

வரையுள்ள இராமாயண நிகழ்ச்சிகளை அவர் பாடியுள்ளமை இராமன் வரலாற்றை பாடவேண்டும் எனும் அவாவின் வெளிப்பாடாகவே தோன்றுகின்றது.'

## மச்சாவதாரம்

திருமாலின் பத்து அவதாரங்களில் முதலில் அமைவது இந்த அவதாரமாகும். திருமாலின் அவதாரங்களைப் பற்றிய கொள்கையின் அடிப்படை சதபத பிராமணத்தில் கூறப்பட்டுள்ளது. இதில் ஓர் அரிய மீனைப் பற்றிய செய்தி காணப்படுகிறது. ஆயினும் அது கடவுளின் அவதாரமாகக் குறிக்கப்பெறவில்லை. மகாபாரதம் பிரமனே அம்மீன் வடிவில் வந்தான் எனக் கூறுகின்றது. புராணங்கள் திருமாலே மீன் வடிவில் வந்தான் என்கின்றன. ஆதலின் மச்சாவதாரம் பற்றிய செய்தி வேதங்களுக்குப் பிற்பட்ட காலத்து எழுந்தது என்பது விளங்கும். புராணங்கள் எல்லாம் திருமாலே மீன் வடிவில் வந்தான் என குறிப்பதால் பிற்காலததில் திருமாலை வழிப்பட்ட வைணவர்கள் அந்த அவதாரத்திற்கு சிறப்பிடம் அளித்தனர். ஆழ்வார்களும் திருமாலின் மச்சாவதாரத்தைப் போற்றிப் பாடுகின்றனர். பெரியாழ்வார் மால் மீனாய் வந்த செய்தியை மூன்று இடங்களில் குறிக்கின்றார்.

## கூர்ம அவதாரம்

திருமால் ஆமை வடிவில் வந்ததாகக் கூறப்பெறுகின்ற இவ்வவதாரம் புராணங்களால் உரைக்கப்பட்டதாகும். ஆயினும் புராணங்களுக்கு முன்னுள்ள இந்த அவதாரத்தின் தோற்றம் பற்றிய செய்தி இது பிரமனுக்கு உரியதாகக் கூறுகின்றது. ஆமையின் உடலமைப்பினையும் திருமாலையும் இணைத்து இவ்வவதாரம் பற்றிய விளக்கம் தரப்பெறுகின்றது. பெரியாழ்வார் ஆமையாய் வந்த திருமாலின் அவதாரத்தை இரு இடங்களில் குறிக்கின்றார்.

## வராக அவதாரம்

இவ்வவதாரம் பற்றிய செய்திகள் பழைய வடமொழி நூல்களில் மாறுபடுகின்றன. பழைய நூல்களில் சிலவும், பிற்காலத்து எழுந்த நூல்களில் சிலவும் இவ்வவதாரம் பிரமனுக்குரியதாகக் குறிக்கின்றன. ஆயினும் பிற்காலத்தெழுந்த நூல்கள் பலவும் இந்த அவதாரம் திருமாலுக்கே உரியதாகக் கூறுகின்றன. வராக அவதாரம் பற்றிய முதல் குறிப்பைத் தைத்திரிய சம்கிதையில் காணலாம். வராக அவதாரத்தை ஆழ்வார்கள் சிறப்பித்துப் பாடுகின்றனர். பெரியாழ்வார் தம் பாசுரங்களில் ஒன்பது இடங்களில் இந்த அவதாரத்தைக் குறிக்கின்றார்.

### நரசிம்ம அவதாரம்

தூண்னின்று வெளிப்பட்டு நரசிம்மமாய் வந்து இரணியனைக் கொன்று பிரகலாதனுக்கு அருளியது இவ்வவதாரமாகும். இரணியன் வரலாறும் அவனுடைய தம்பி இரண்யாட்சகன் வரலாறும் விஷ்ணு புராணத்தில் விதந்து ஓதப்படுகின்றன. கம்பரும் இராமயனத்தில் இரணியன் வதைப்படலம் எனும் ஒரு படலத்தை வைத்து நரசிம்ம அவதாரத்தின் சிறப்பைக் கூறுகின்றார். பிரகலாதன் பொருட்டாய் வந்த இவ்வவதாரத்தை ஆழ்வார் பதினான்கு இடங்களில் குறிக்கின்றார்.

### வாமன அவதாரம்

உலகை மூன்றடியால் அளந்த செய்தி இருக்கு வேதத்திலேயே காணப்பெறுகின்றது. தொன்மையாய் வழங்கி வரும் இவ்வவதாரத்தைப் பெரியாழ்வார் பதினெட்டு இடங்களில் குறிக்கின்றார். வாமனாவதாரத்தைப் பற்றிக் கூறும்போது, சுக்கிரன் கண்ணைத் துரும்பால் கீறியதையும், மாவலி மகன் நமுசியை வானில் சுழற்றியதையும் குறிக்கின்றார்.

### பரசுராம அவதாரம்

இந்த அவதாரம் பற்றிய வரலாறு விஷ்ணு புராணத்தில் அமைகிறது. மேலும் ஆவேச அவதாரமான பரசுராமனைப் பற்றி மகாபாரதத்திலும், பாகவதத்திலும், பத்ம, அக்கினி புராணங்களிலும் செய்திகள் கிடைக்கின்றன. இவ்வவதாரத்தைப் பெரியாழ்வார் இருபாசுரங்களில் குறிக்கின்றார்.

### பலராம அவதாரம்

திருமால் அவதாரங்களில் எட்டாவதாக அமையும் அவதாரம் இதுவாகும். இதனை ஆதிசேடனின் அம்சமாகக் கொள்வர். பண்டைத் தமிழ் இலக்கியங்கள் பலராமனைக் கண்ணனுடன் இணைத்துக் கூறுவதைக் காணலாம். வியூக நிலையில் சங்கருடணன் எனப்படும் வடிவம் இப்பலராமனைக் குறிக்கின்றது. இவ்வவதாரத்தையும் பெரியாழ்வார் குறிக்கின்றார்.

### கல்கி அவதாரம்

பத்து அவதாரங்களின் ஈற்றில் அமைவது கல்கி அவதாரமாகும். கல்கி அவதாரத்தை விஷ்ணுபுராணம் குறிக்கின்றது. இவ்வவதாரத்தைப் பெரியாழ்வார் ஓரிடத்தில் குறிக்கின்றார்.

திருமாலின் அவதாரங்கள் இவ்வுலக நலனுக்காக ஏற்பட்டவை என்பதை விளக்குவதற்காக அமைந்தனவே புராணங்களும் இதிகாசங்களுமாகும். அவற்றை அடியொற்றி ஆழ்வாராதிகளும் தத்தம் ஈடுபாட்டிற்கு ஏற்றாற்போல் அவதாரங்களைப் பாடியுள்ளனர். அவற்றுள் பெரியாழ்வார் பத்து அவதாரங்களையும் பக்திச் சிறப்புடன் பாடி ஆழ்வார்களில் பெரியவராக விளக்குகின்றார்.

## *அந்தர்யாமி*

ஒவ்வொருவருடைய இதயத்தையும் இடமாக்கிக் கொண்டு மிகவும் சூக்குமமான வடிவுடன் திருமால் எழுந்தருளியிருக்கும் நிலை அந்தர்யாமியாகும். இத்திரு மேனியை அனைவரும் காண இயலாது. தவம்புரியும் யோகிகள்தான் தம் தவத்தால் இதை உணர இயலும்.

ஆழ்வார்களனைவரும் திருமால் பெருமை அறிந்து ஓதி நித்திய சூரிகளானவர்கள். இறைவனை யோக வலிமையால் உணர்ந்து, உணர்த்தியவர்கள், நம்மாழ்வார் அந்தர்யாமியாய் இறைவன் தன்னுள் இருப்பதைக்,

***கொண்டல் வண்ணன் சுடர்முடியன் நான்குதோளன் குனிசார்ங்கன்***
***ஒண்சங்கதை வாளாழி யானொருவன் அடியேனுள் ளானே***

(திருவாய் 8.8.1)

என உரைக்கின்றார். பெரியாழ்வார் தம்முள் இறைவனை இறுத்தியதைப் பலவாறு எடுத்துரைக்கின்றார்.

அந்தர்யாமி உருவமாய் இறைவன் திகழ்ந்ததை ஆழ்வார் கூறும் சிறப்பு அவருடைய அருளனுபவத்தைக் காட்டுகின்றது. இறையருளை உணர்ந்து எண்ணி இறும்பூது அடைகின்றார் ஆழ்வார். இறைவன் தன்னிடமிருந்து பிரிந்து வேறெங்கும் செல்லாதவாறு வேண்டுகின்ற ஆழ்வார், அவனைச் 'சிக்கெனப் பிடித்த' நிலையை எடுத்துரைக்கின்றார். இவை இரண்டும் மூன்று திருமொழிகளில் இடம் பெறுகின்றன. "மெய்க் கொண்டு வந்து புகுந்து வேதப் பிரானார் கிடந்தார்" எனத் தம்முள் இறைவன் இருக்கும் நிலையை ஆழ்வார் குறிக்கின்றார். தம் உடலைக் கோவிலாகவும் எண்ணும் பெரியாழ்வார் இறைவன் அதனுள் எழுந்தருளியுள்ள நிலையைச்

***சிங்கப் பிரானவ னெம்மான் சேருந் திருக்கோயில்***

(பெரியாழ். 5.2.4)

***சுடரொளி யாய்நெஞ்சி னுள்ளே தோன்றுமென் சோதிநம்பி***

(பெரியாழ். 5.4.10)

எனப் பாடுகின்றார். இவை அந்தர்யாமியாய் இறைவன் இருப்பதை உணர்த்துவன.

அந்தர்யாமியாய் உணர்ந்த இறைவனை இறுத்திய நிலையன்றி அவனைக் கணப்பொழுதும் பிரிய இயலாத நிலையும் ஆழ்வாருக்கு ஏற்படுகின்றது. அதன் பயனாய் அவனைப் போகவிடாது தன்னுள் இறுத்துகின்றார்.

***புக்கினிற் புக்குன் னைக்கண்டு கொண்டேன் இனிப்போக விடுவதுண்டோ***

(பெரியாழ். 5.3.1)

என இறைவனை விடாத நிலையைப் பாடுகின்றார். இவற்றால் பெரியாழ்வாரின் அருளனுபவம் தன்னுள் இறைவனை நிறுத்திய சீவனின் செயலாக அமைகின்றது.

### *அர்ச்சை*

பக்திக் காலத்தெழுந்த சமய வளர்ப்பு முறைகளில் இறைவன் எழுந்தருளியுள்ள திருத்தலங்களைப் போற்றிப் பாடும் மரபும் சிறப்பிடம் பெற்றது. சைவக் குரவர்களும், வைணவ ஆழ்வார்களும் இம்மரபினைப் பின்பற்றிப் பாசுரங்களை காத்தனர். வைணவர்கள் அர்ச்சை வடிவாய்த் திருமால் எழுந்தருளியுள்ள இடங்களைத் திவ்விய தேசங்கள் எனக் கொண்டனர். திவ்விய தேசங்கள் நூற்றெட்டாகும் அவற்றைப் பற்றிய தனி நூல்களும் உள.

ஆழ்வார்கள் திவ்விய தேசங்களில் எழுந்தருளியுள்ள இறைவனின் குணத்தைச் சிறப்பித்துப் பாடுகின்றனர். திருமங்கையாழ்வார் பாடிய திவ்விய தேசங்கள் எண்பத்திரண்டு. நம்மாழ்வார் பாடியவை முப்பத்தாறு, இவர்களை அடுத்துப் பெரியாழ்வாரே மிகுதியான திவ்விய தேசங்களைப் பாடியுள்ளார். அவர் பாடியுள்ள திருப்பதிகள் இருபது.

### *அர்ச்சா வடிவம்*

தமிழகத்தில் ஆலய வழிபாடு மிக்க தொன்மை சான்றது. ஆலயங்களில் படிமங்களை எழுந்தருளச் செய்து வழிபாடு நடத்துவதும் இன்றளவும் நடைபெற்று வரும் மரபினது. தமிழின் தொன்மை நூலான தொல்காப்பியமும் ஐந்நிலக் கடவுளர்களுக்கும் படிமங்கள் இருந்தன என்று குறிக்கின்றது. இறைவன் எங்கும் பரந்துள்ளான். இவ்வுணர்வில் செய்யப்பெறும் எச்செயலும் கர்ம யோகமாகித் தெய்வீக உணர்ச்சியை எளிதில் உணர வழி வகுக்கின்றது. அத்தெய்வீக உணர்ச்சி வலுப்பெற உருவ வழிபாட்டை மேற்கொள்ள வேண்டியுள்ளது. மனிதன் இருக்கும்

இடத்திற்கு வந்து இறைவன் உதவுவதே இவ்வுருவ வழிபாட்டின் நோக்கம் என்பது ஆகமத்தின் கூற்று. இவ்வுருவ நிலையில் அமையும் அர்ச்சாவதாரம் இருட்டு அறையில் ஏற்றி வைக்கப்பட்ட விளக்கு என்பது ஆச்சாரியர்கள் கருத்து.

## *அர்ச்சைகளின் சிறப்பு*

ஆழ்வார்கள் அனைவரும் இறைவனின் ஐந்து நிலைகளிலும் ஈடுபட்டு மகிழ்கின்றனர். ஆயினும் அவர்தம் செயலும் சிந்தனையும் அர்ச்சா வடிவத்திலேயே சென்றிருப்பதைப் பாசுரங்கள் வழி உணர முடிகின்றது.

அவதாரங்களுக்கெல்லாம் மூலமாகத் திகழ்வது பாற்கடலில் பள்ளி கொண்ட வியூக மூர்த்தியின் வடிவமாகும். அம்மூர்த்தியின் குணங்கள் நிறைந்த அவதாரச் சிறப்பைத் தனக்குக் காரணமாகக் கொண்டமைவது அர்ச்சா வடிவங்களாகும் எல்லாக் கல்யாண குணங்களையும் தம்மிடம் கொண்டு திகழ்வது அர்ச்சை. பக்தர்களால் எளிதில் அடையப்படக் கூடியதாய் ஏனை நான்கு நிலைகளின் முடிந்த தன்மை உடையதாய் அமையும் சிறப்பு. இவ்வர்ச்சா வடிவிற்கே உரியது.. திருமாலுக்குரிய உபாய குணங்களான வாத்சல்யம், சௌசீல்யம், சௌலப்பியம் முதலான குணங்கள் வெளிப்படுவது இதில்தான்.

பரத்துவம் முதலான நிலைகளில் வெளிப்படும் கருணைச் சிறப்பு நித்திய சூரிகளால் அனுபவிக்கப்பெறுவது. ஆனால் அசித்தின் பிடியில் சிக்கித் தவிக்கும் இவ்வுலக மக்கட்கு அருளும் சிறப்புடையது இவ்வர்ச்சா வடிவமே. அர்ச்சா வடிவத்தில் அடியவர் விரும்பும் வடிவம் கொண்டு குற்றம் பாராது அவர் வேண்டும்போது இறைவன் உண்கிறான். நீராடுகிறான். இவ்வாறு அடியார் பொருட்டு அவன் செய்யும் செயல்கள் அவனுடைய ஒப்பற்ற எளிவந்த குணத்தைக் காட்டுவது.

பரத்துவம் முதலான ஐந்து நிலைகளும் நீரோட்டத்தின் தன்மைக்கு ஒப்பிட்டுக் கூறப்பெறும். அந்தர்யாமித்துவம் என்பது பூமிக்குள்ளிருக்கும் நீரை ஒத்தது; கண்களால் காண இயலாது; எட்டுறுப்பு யோக முயற்சி களால் தான் அதன் சிறப்பை உணர இயலும். பரத்துவம் என்பது இவ்வண்டத் துக்குப் புறத்தே கிடக்கும் நீரை ஒத்தது. அதனை அடைய விரும்புவாருக்குக் கிடைத்தல் அரிது. பிரபஞ்சத்துக்கு அப்பாற்பட்டது பரத்துவம். தண்ணீர் வேட்கை உடையவனுக்குச் சென்று அடைய முடியாததான பாற்கடல் போலமைவது. இப்பேறு கேட்டிருக்கும் வழியன்றிக் காண அரியது. விபவம் என்பது பெருக்காறு போல அண்மையில் இருந்தும் அவ்வக் காலத்தும் பருகலாம்படி, வேறு காலத்துப் பருகுவதற்கு அரிதாய்

அமைவது. அதாவது பூமியில் அவதரித்தும் சஞ்சரித்தும் அவ்வக்காலத்து வசித்தார்க்கு அடையத் தக்கதாய்ப் பிற்காலத்துள்ளார்க்குக் கிடைக்க அரியதாய் அமைவது. அர்ச்சாவடிவமோ தேங்கிய மடுக்களைப் போன்றது. வேட்கை கொண்டான் பருகலாம்படி அருகில் தேங்கிக் கிடந்த மடுவில் பருகுவதைப் போலக்கண்டு பற்ற வேண்டும் என்ற அவா கொண்டவனுக்குக் காலத்தாலும், தேசத்தாலும், தூரத்தாலும் சேயதன்றிக் கோவில்களில் எல்லார் கண்ணுக்கும் இலக்காகும்படி அமைவது இவ்வர்ச்சை வடிவமே.

ஞானம், சக்தி, பலம், செல்வம், ஒப்பிலா ஆற்றல், அழகு ஆகிய ஆறு குணங்களும் இவ்வர்ச்சா வடிவத்திலேயே மிக்குப் பிரகாசிப்பதாகக் கூறுவர். இறைவனுக்கு ஏனை வடிவைக்காட்டிலும், அர்ச்சைத் திரு மேனியிலேயே உகப்பு அதிகம் என்று கூறப்பெறும். இறைவன் அர்ச்சையின் உருவுக்கு ஏற்றவாறு தன்னுடைய உருவத்தைச் சுருக்கிக் கொண்டு அதில் அமர்கிறான். சுத்த சத்துவமாக உட்புகுந்து, நீரும் பாலும் கலப்பது போன்று அர்ச்சையில் ஐக்கியமாகிறான். இறைவன் கணப்பொழுதும் அகலாது உறைந்திருப்பது இவ்வடிவிலேயே என்பர். பிரபத்தி செய்வதற்குக் குணங்கள் நிறைந்த இடம் இவ்வர்ச்சா வடிவமே. பரத்துவம் முதலான நிலைகள் பற்றுதற்கு அரியனவாய் இருக்க, இவ்வர்ச்சாவதாரமோ பற்றுதற்கு எளிமை உடையதாகத் திகழுகின்றது. உபாயமும் உபேயமுமாகத் திகழும் இவ்வர்ச்சை வடிவங்கள் எழுந்தருளியுள்ள இடங்களே திவ்விய தேசங்களாகும். அர்ச்சாவதாரம் அடியார் வேண்டும் திறத்துடன் அமைவது. அடியார் வேண்டும் பொருட்டாய்த் திருமால் வடிவம் கொள்ளும் தன்மையைப் பொய்கை யாழ்வார்,

> ***தமருகந்த தெவ்வுருவம் அவ்வுருவம் தானே***
> ***தமருகந்த தெப்பேர்மற் றப்பேர் - தமருகந்து***
> ***எவ்வண்ணம் சிந்தித் திமையா திருப்பரே***
> ***அவ்வண்ணம் ஆழியா னாம்.***

(முதல் திருவந்தாதி. பா. 44)

என்றுரைக்கின்றார்.

அர்ச்சை வடிவாய் அடியார் பொருட்டாய் இறைவன் எழுந் தருளியுள்ள திருப்பதிகளைப் பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் அருளிச் செய்த நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதியும், திருவரங்கத்தமுதனார் அருளிச் செய்த திருப்பதிக் கோவையும் தெளிவாகக் கூறுகின்றன. ஆயினும் ஐயங்காரின் நூலே பெருவழக்கில் கொள்ளப்பெறுகின்றது. நூற்றெட்டுத் திருப்பதிகளைக் கீழ்க்கண்டவாறு குறிக்கின்றார் அவர். சோழநாட்டுத்

திருப்பதிகள்-நாற்பது; பாண்டி நாட்டுத் திருப்பதிகள்-பதினெட்டு; மலைநாட்டுத் திருப்பதிகள் - பதின்மூன்று; நடு நாட்டுத் திருப்பதிகள் - இரண்டு; தொண்டை நாட்டுத் திருப்பதிகள்-இருபத்திரண்டு; வடநாட்டுத் திருப்பதிகள்-பதினொன்று; திருநாட்டுத் திருப்பதி-ஒன்று. திருப்பாற் கடல் - ஒன்று.

நூற்றெட்டுத் திருப்பதியிலும் எழுந்தருளியுள்ள திருமால் வடிவங்களின் வகைகள் ஐந்தாக அமையும். சுயம் வியக்தம், சைத்தம், ஆரிடம், திவ்வியம், மானிடம் என்பன அவை. அவற்றில் சுயம் வியக்தத் திருப்பதிகள் எட்டு. அவையாவன, திருவரங்கம், திருவேங்கடம், திருமுட்டம், வானமாமலை, புட்கரம், நைமிசாரணியம், பதரிகாச்சிரமம், சாளக்கிராமம் என்பன. இவற்றில் நான்கு திருப்பதிகளைப் பெரியாழ்வார் மங்களா சாசனம் செய்கின்றார்.

திருமாலின் கலியாண குணங்கள் அர்ச்சா வடிவங்களில் திவ்விய தேசங்களில் வெளிப்படுகின்றன. நம்மாழ்வாரின் திருவாய்மொழியின் வாயிலாக வெளிப்படும் அக்குணங்களை ஆச்சாரிய இருதயம் எடுத்துரைக் கின்றது. பெரியாழ்வாரும் அவ்வக்குணங்களை அவ்வப்பதிகளில் அனுபவிக்கின்றார். நம்மாழ்வார் மங்களாசாசனம் செய்யாது விடுத்த திருப்பதிகளைப் பெரியாழ்வார் அனுபவிக்கின்ற போதும் அப்பதிகளில் எழுந்தருளியுள்ள திருமாலின் குணங்கள் அவருடைய பாசுரங்கள் வாயிலாக உணரப்பெறுகின்றன.

ஆழ்வார்களின் திருப்பதிகள் பற்றிய மங்களாசாசனம் நாலாயிரம் முழுதும் இரு வகைகளில் காணப்பெறுகின்றன. அவை (1) திருமொழி களாக அமைத்து பாடுபவை (2) தனிப் பாசுரங்களில் குறிக்கப் பெறு கின்றவை. பதிகங்களால் அமைத்துச் சிறப்பித்துப் பாடப்பெறும்போது அறியலாகும் கலியாண குணம் ஒரு பாசுரத்தில் அமைத்துப் பாடப்பெறும் போதும் வெளியாகும் என்பது ஆழ்வார்கள் பாசுரங்களின் மூலம் விளங்கும். இதற்கு ஆச்சாரிய இருதய சூத்திரமொன்று சான்று பகர்கின்றது.

***புளிங்குடிக் கிடந்து வரகுண மங்கை***
***இருந்துவை குந்தத்துள் நின்று***
***தெளிந்தவென் சிந்தை அகங்கழி யாதே***
***என்னையாள் வாயெனக் கருளி***

(திருவாய் 9.2.4)

எனும் நம்மாழ்வார் பாசுரம் திருமாலுக்குரிய குணங்கள் மூன்றும் முப்பதிகளில் வெளிப்படுத்துவதை விளக்கும். ஆதலின் மங்களாசாசனம்

என்பது திருமொழிகளாயினும், பாசுரங்களாயினும் திருமாலின் திருக்குணங்களை வெளிப்படுத்தும் என்பது அறியப்பெறும்.

## *பெரியாழ்வார் பாடிய திருப்பதிகள்*

சோழநாட்டுத் திருப்பதிகள் நாற்பதில் பெரியாழ்வார் மங்களா சாசனம் செய்தவை ஐந்து. ஆழ்வாரின் மங்களாசாசனம் பதிகங்களாயும் பாசுரங்களாயும் அமைகின்றன. திருவரங்கம், திருவெள்ளறை, திருப்பேர் நகர், திருக்குடந்தை, திருக்கண்ணபுரம் முதலியவை ஆழ்வாரால் பாடப்பட்டனவாகும்.

## *திருவரங்கம்*

வைணவத்தில் கோவில் எனக் குறிப்பின் அது திருவரங்கப் பெருநகரையே குறிக்கும். வைணவ வரலாற்றில் சிறப்பிடம் பெறும் இப்பதி வைணவத்தை வளர்த்த சிறப்புடையது. 'கோயிலொழுகு' எனும் நூல் இதனை வெளிப்படுத்தும் இப்பதியில் எழுந்தருளியுள்ள இறைவனின் எழில் நலத்தைத் சிலம்பே முதலில் தருகின்றது.

இத்திருப்பதியை மதுரகவி தவிர ஆழ்வார்களனைவரும் மங்களா சாசனம் செய்துள்ளனர். ஆழ்வார்களன்றி, ஆச்சாரியர்களாலும் சிறப்பிக்கப் பெற்றது இப்பதி. பட்டர், வடக்கு திருவீதிப்பிள்ளை, பிள்ளை லோகாச் சாரியார் முதலிய ஆச்சாரியார்கள் அவதரித்த தலம் இதுவாகும். பிரமன் தனது வழிபடு படிவமாகிய திருவரங்கனை இட்சுவாகு அரசனின் தவத்திற்கு இரங்கி அளிக்க, இராமன் வரையில் சூரிய குல மன்னரால் வழிப்பட்டபின் இராமனால் வீடணனுக்கு அளிக்கப்பட்டது. விடணன் அயோத்தியினின்று இலங்கை ஏகும் வழியில் துணைக்காவேரி நடுவில் இறைவன் விமானத்துடன் புடைபெயராது திருவுள்ளம் உவந்து தங்கிய இடம் திருவரங்கம். திருப்பாற்கடல் எனவும் பூலோக வைகுந்தம் என்றும் சிறப்பிக்கப்பெறுவது இப்பதியே.

வைணவர்களின் திருவுக்கெல்லாம் அரங்கமாகத் திகழும் இப்பதியைப் பெரியாழ்வார் மூன்று திருமொழிகளில் மிகச் சிறப்பித்துப் பாடுகின்றார். அவை இலக்கியச் சுவையுடன் அரங்கத் தரவணையில் பள்ளி ளிகொண்டிருக்கும் திருமாலின் திருக்குணங்களைப் பேசுகின்றன.

## *ஆழ்வார் அனுபவித்த அவதாரங்கள்*

பேராற்று வெள்ளம் போல அவ்வக் காலத்து வாழ்வார்க்கு அருளுவன அவதாரங்கள். அர்ச்சை வடிவில் அவ்வவதாரங்களைக் காண்பது ஆழ்வார்களுக்குரிய முறை. அதனை அடியொற்றிப் பெரியாழ்வாரும்

மங்களாசாசனத்தை மேற்கொள்ளுகின்றார். இராமன், கண்ணன் அவதாரங்கள் ஆழ்வாரால் பாடப்பெறுகின்றன. இவையன்றிப் பத்து அவதாரங்களையும் மங்களாசாசனம் செய்த திருப்பதி இது ஒன்றே.

## *மறையவர் நிறைபதி*

ஆழ்வார்களாலும், ஆச்சாரியர்களாலும் சிறப்புற்ற திருவரங்கம் மறையவர்களாலும் சிறப்புடையது என்பதைத்,

***தோதவத்தித் தூய்மறையோர் துறைபடியத் துளம்பியெங்கும்***
***போதில்வைத்த தேன்சொரியும் புனலரங்க மென்பதுவே!***

(பெரியாழ். 4.8.1)

***மறைபெருத்தீ வளர்த்திருப்பார் வருவிருந்தை யளித்திருப்பார்***
***சிறப்புடைய மறையவர்வாழ் திருவரங் மென்பதுவே!***

(பெரியாழ். 4.8.2)

என்ற தொடர்களால் விளக்குவார் பெரியாழ்வார். திருவரங்கப் பெருமானிடம் சரண் புகுந்ததைப் பலவாறு எடுத்துரைக்கின்றார். இருள்தரும் இவ்வுலக வாழ்வை விட்டு, எம்பெருமானின் நிழலில் இனிது இருக்க வேண்டும் எனும் அவருடைய அவாவைப் பாசுரங்கள் வாயிலாக உணரலாம். ஒருவர் செயல்களுக்கேற்ப யமகிங்கிரர்களின் செயல்கள் நடைபெறும். அந்நலிவை எண்ணி ஆழ்வார் வருந்தி "அப்போதைக்கு இப்போதே சொல்லி வைத்தேன்" என்று இறைவனை இறைஞ்சிப்பாடும் பாசுரங்கள் திருவரங்கத்தான் மேல் கொண்ட பெரும் பக்தியை வெளிப்படுத்துபவை.

திவ்விய தேசங்களில் முதன்மையான இப்பதியில் பாற்கடல் யோகநித்திரை செய்யும் வியூக குலமான சௌகார்த்தம் கோயிலில் பிரதானமாக வெளிப்படுவதாக ஆச்சாரிய இருதயம் கூறுகின்றது. அதனைப், "பைய அரவணைப் பாற்கடலுள் பள்ளி கொள்கின்ற பரமமூர்த்தி" எனும் பெரியாழ்வாரின் பாசுர வரியும் விளக்கும். திருமால் ஐம்பூதமாகத் திகழும் நிலையும் இப்பதிகப் பாசுரத்தில் எடுத்துரைக்கப் பெறுகின்றது. அடியார்க்குத் திருமால் அருள் செய்யும் சிறப்பு இப்பதிகத்தில் அமைகின்றது.

## *திருவெள்ளறை*

அர்ச்சா வடிவங்களில் அவதாரங்கள் அனைத்தையும் ஆழ்வார்கள் அனுபவித்தபோதிலும், அவற்றுள் கண்ணன் இராமாவதாரங்களே சிறப்பிடம் பெறுகின்றன. கண்ணனிடம் மிக்கு ஈடுபாடு கொண்ட

பெரியாழ்வாருக்குத் திருவெள்ளறையில் எழுந்தருளியுள்ள இறைவன் கண்ணனாகக் காட்சி தருகின்றான். கண்ணனைச் சீராட்டி வளர்த்த பெரியாழ்வார் அவனைக் காப்பிட்டுக்கொள்ள அழைக்கின்றார். இவ்வுலக உயிர்களுக்கு காப்பாகும் காரணனைக் காப்பிட அழைக்கும் சிறப்பு ஆழ்வார்களில் பெரியாழ்வார்க்கே உரியது.

## வெள்ளறையின் சிறப்பு

திருவெள்ளறை பற்றி அமையும் திருமொழியும் ஆழ்வார் இப்பதியில் எழுந்தருளியிருக்கும் இறைவனைத் துதிப்பாரைக் கூறிச் சிறப்பிக்கின்றார்.

***இந்திர னோடு பிரம னீச னிமைய வரெல்லாம்***
***இந்திர மாமலர் கொண்டு மறைந்துவ ராய்வந்து நின்றார்***

(பெரியாழ். 2 8.1)

***முப்போதும் வானவ ரேத்தும் முனிவர்கள் வெள்ளறை நின்றாய்***

(பெரியாழ். 2.8.3)

***நல்லார்கள் வெள்ளறை நின்றாய்***

(பெரியாழ். 2.8.5)

***இருக்கொடு நீர்சங்கிற் கொண்டிட்டெழில்மறை யோர்வந்து நின்றார்***

(பெரியாழ். 2.8.9)

என அமையும் பாசுரத்தொடர்கள் அதனை விளக்குவன. சிறப்புடைய திருவெள்ளறையில் திருமாலின் திருக்குணமான "சர்வ சரண்யத்துவம்" வெளிப்படுவதாகக் கொள்ளலாம். எல்லாக் கடவுளர்க்கும் மேம்பட்டவன் நாராயணனே என்பதைக் கடவுளரும், வானவரும் உணர்ந்து ஏத்தி வழிபடுவதால் இறைவனின் திருக்குணம் விளங்கும்.

பெரியாழ்வாரால் இப்பதியில் அனுபவிக்கப்பெறுவது கண்ணன் அவதாரமே. கண்ணனின் பல செயல்கள் ஈண்டுக் குறிக்கப்பெறுகின்றன. "ஒளியுடை வெள்ளறை", "மதிட்திருவெள்ளறை", "மஞ்சுதவழ் மணிமாட மதிட்டிருவெள்ளறை" எனவும் பெரியாழ்வார் திருவெள்ளறையைக் குறிக்கின்றார். பெருமானைத் துதிப்பார் பெறும் பயனைப் "பாதப் பயன்கொள்ள வல்ல பத்தருள் ளார்வினை போமே" என்றும் குறிக்கின்றார்.

## திருப்பேர்நகர்

திருப்பேர் நகரில் நம்மாழ்வார் அனுபவித்தது "சுபாச்ரயத்துவம்" எனப் பெறும். இறைவனின் ஐவகை நிலையிலும் பிராட்டியார் பிரிவதில்லை. 'நாராயணா' என்பதற்குப் பிராட்டியைப் பிரியாத பெருமாள்

என்றே பொருள்படும். பெரியாழ்வார் பரமபதத்தில் பிராட்டியுடன் இருக்கிற பெருமானைத் திருப்பேர் நகரில் காணுகின்றார். "தெண்டிரை சூழ்திருப் பேர்கிடந்த திருநா ரணா" என இறைவனை அழைக்கின்றார். துதிப்பாரின் பாவம் போக்குவதற்கு உள்ளத்தில் தியானம் செய்ய ஏற்ற திருமேனி 'சுபாச்ரயம்' எனப் பெறும். ஐவகைத் திருமேனிகளும் அனுபவிக்கப் பெறுவதால் அக்குணம் வெளியாவது விளங்கும்.

## *திருக்குடந்தை*

திருக்குடந்தையில் கிடந்த வண்ணமாக இருக்கும் நிலையை நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி, "குடந்தைக் கிடந்தானே" என்றுரைக்கின்றது. பெரியாழ்வாரும் "குடந்தைக்கிடந்தானே" "குடந்தைக் கிடந்த வென்கோவே. என்று மங்களா சாசனம் செய்கின்றார். ஆராவமுதமான மாதுரியம் குடந்தையில் மேன்மேலும் ஆராமல் புசிக்கும்படி பெருகா நிற்கும் என்பது ஆச்சாரிய இருதய விளக்கம். குடந்தைக் கடவுளை 'ஆராவமுதனே' என்றும் 'சார்ங்கபாணி' என்றும் பெரியாழ்வார் விளிக்கின்றார்.

## *திருக்கண்ணபுரம்*

திருக்கண்ணபுரத்தில் சரண்யனுடைய 'பூமிப்ரதத்துவம்' விளங்கும். இந்தப்பதியில் எழுந்தருளியுள்ள திருமாலைப் பெரியாழ்வார் 'கண்ண புரத்தமுதே' என அழைக்கின்றார்.

## *பாண்டி நாட்டுத் திருப்பதிகள்*

பாண்டி நாட்டுத் திருப்பதி பதினெட்டில் பெரியாழ்வார் பாடிய திருப்பதிகள் நான்காகும். திருமாலிருஞ்சோலை மூன்று திருமொழிகளிலும், திருக்கோட்டியூர் ஒரு திருமொழியிலும், திருக்குறுங்குடி, திருவில்லிபுத்தூர் ஆகியவற்றை ஒவ்வொரு பாசுரத்திலும் மங்களாசானம் செய்கின்றார்.

## *திருமாலிருஞ்சோலை*

பாண்டி நாட்டுத் திருப்பதிகளில் மிகச்சிறப்புடையது இப்பதி. தொன்மை சான்ற சங்க இலக்கியம் தொடங்கி இப்பதி போற்றப் பெற்று வருகின்றது. திருமாலுக்கு மிகவும் விருப்பமுடைய மலைகளாகக் கூறப் பெறுவன இரண்டு. அவை வடமலையான திருவேங்கடமும், தென் மலையான திருமாலிருஞ்சோலையுமாகும்.

அவதாரங்களின் பயனை அனுபவித்த ஆழ்வார் அப்பயனைப் பிறரும் உணரும் வகையில் அர்ச்சை வடிவங்களாகப் பாடுகின்றார். திருமாலிருஞ்சோலைக் கடவுளைப் பல அவதாரங்களாக ஆழ்வார் காணுகின்றார். இதுவன்றி வியூகமும் அந்தர்யாமித்துவமும் பெரியாழ் வாரால் அனுபவிக்கப் பெறுகின்றன.

***மாலிருஞ்சோலை என்னும் மலையை உடைய மலையை***
***நாலிரு மூர்த்தி தன்னை.***

(பெரியாழ். 4.3.11)

என வியூக நிலையை ஆழ்வார் குறிக்கின்றார்.

## *அந்தர்யாமித்துவம்*

அந்தர்யாமியாய் இறைவன் இருக்கும் நிலையைப் "புக்கினிற் புக்குன்னைக் கண்டு கொண்டேன்" எனவும் "வளைத்து வைத்தேன் இனிபோகலொட்டேன்" எனவும் பாடுகின்றார். இத்திருப்பதியில் திருமாலின் 'வியாமோக சாலித்துவம்' விளங்குவதாக ஆச்சாரிய இருதயம் குறிக்கின்றது. இதனை வலியுறுத்துவதாய் அமைகின்றது அந்தர்யாமித்துவம் பற்றிய கருத்து.

## *திருக்கோட்டியூர்*

ஆழ்வார்கள் அனைவரும் திருப்பதிகள் அனைத்தையும் மங்களாசாசனம் செய்தவராயினும் அவர்தம் சிந்தை யாதாகினும் ஒரு பதியில் மிக்கு ஈடுபட்டுத் திகழ்வதைக் காணலாம். நம்மாழ்வாருக்குத் திருக்குருகூரிலும், திருமங்கையாழ்வாருக்குத் திருக்கண்ணபுரத்திலும் ஈடுபாடு மிகுதி. பெரியாழ்வார் மிக்கு ஈடுபாடு கொண்ட பதியாக விளங்குவது திருக்கோட்டியூர்.

கண்ணன் தன் அவதார வாழ்வை முடித்துக்கொண்டு தன்னடி சோதிக்கு எழுந்தருளியபோது அவன் பிரிவைப் பொறுக்க இயலாத முனிவர்கள் இனித் தாங்கள் செய்வது என்ன என வினவ, அதற்குக் கண்ணன் தன்னுடைய திருமேனிகளை வணங்குமாறு கூறித் தேற்றி யதாகச் செய்தி உண்டு. இத்தகுச் சிறப்புடை அர்ச்சாவதாரங்களில் திருக்கோட்டியூர் திருமாலைக் கண்ணனாக ஆழ்வார் பாடுகின்றார். இப்பதி ஒரு திருமொழியில் மங்களாசாசனம் செய்யப்பெறுகின்றது.

இப்பதி திருமங்கையாழ்வாராலும், பெரியாழ்வாராலும் மட்டுமே பாடப்பெற்ற சிறப்புடையது. பெரியாழ்வார் இப்பதியில் மிக்கு ஈடுபாடு கொள்வதற்குக் காரணம் செல்வநம்பி எனும் வைணவ அடியார் இங்கு வாழ்ந்ததே எனலாம்.

செல்வ நம்பியின் மேல் அவருக்குண்டான அன்பு அவ்வூர்வாழ் வைணவ அடியார்களின்மேல் சென்றது. திருக்கோட்டியூரில் எழுந்தருளி யுள்ள எம்பெருமான் மேற்கொண்ட பக்தி அனுபவத்தில், ஆனந்தம் மீதூரப்பெற்று, அப்பிரான்மேல் அன்பில்லாத பாவிகளைத் தூற்றியும், பாகவதர்களைப் போற்றியும் பாசுரங்கள் படைக்கிறார்.

இறைவனை இறைஞ்சும் வேதங்களை ஓதும் மறையவர் வாழும் சிறப்புடையது இப்பதி என்றும் அப்பதிவாழ் வைணவர்களைப் போற்றுகின்றார். திருக்கோட்டியூரில் வாழும் வைணவ அடியாரை வழிபடாதாரை ஏசுவதில் பெரியாழ்வாருடைய சிந்தை செல்கிறது. "முதல்வனைச் சிந்தியாத பாவகாரிகள்" ஏன் அவரால் படைக்கப்பட்டனர் என்பது அவருடைய ஐயம். "தாயர் வயிற்றினைப் பெருநோய் செய்வான் பிறந்தார்கள்" என்பது அவருடைய தெளிவு. இவ்வுடல் படைக்கப்பட்டதன் காரணம் உணராது வெறும் சோற்றுக்கு மட்டும் வாழும் இயல்பினரை ஆழ்வார் ஏசுகின்றார். அவர்கள் உடுக்கும் கூறையும், பருகும் நீரும் பெரியாழ்வாருக்கு பாவம் செய்தனவாகப் படுகின்றன . இத்தகையவரை மானிட வகையினின்று நீக்கி விலங்கினத்துச் சேர்க்கும் இயல்பு ஆழ்வாரிடம் காணப்பெறுகின்றது.

மூவர் காரியம் முந்தி இருந்த முதல்வன்" "தூற்றி ஏழுலகுண்ட தூமணி வண்ணன்" என இப்பதிவாழ் இறைவன் போற்றப் பெறுகின்றான். "நரகநாசன்" "நேமிசேர்த் தடங்கையினான்" என்றும் பெரியாழ்வார் துதிக்கின்றார். திருக்கோட்டியூரில் சேவை சாதித் திருக்கும் திருமாலைக் காட்டிலும் அங்கு வாழும் அடியவர்களைப் போற்றிப் பாடும் சிறப்புப் பெரியாழ்வாரிடம் காணப்பெறுகின்றது. பிற்காலத்தில் வாழ்ந்த உடைய வரும், திருக்கோட்டியூர் நம்பியிடம் அறிந்த மறைபொருளை இங்குக் கோபுரத்து ஏறிநின்று ஏனையோரையும் கரையேற்றிய சிறப்புடையது இப்பதி. இந்நிகழ்ச்சிக்கு முன்பே வைணவத் தொண்டர்களால் சிறப்புப் பெற்றது திருக்கோட்டியூர் என்பது பெரியாழ்வார் பாசுரங்கள் வழி அறியப்பெறும் செய்தி.

## *திருவில்லிப்புத்தூர்*

நூற்றெட்டுத் திருப்பதிகளில் ஆழ்வார்கள் அவதரித்ததால் பெருமை சான்ற திருப்பதி இது ஒன்றே.

***குறித்தொருவர் கொண்டாடும் கொள்கைத்தோ கோதை***
***நிறத்தலூர் விண்டுசித்தர் நீடூர்.***

(நூற். திரு.பா.8)

என இப்பதி போற்றப்பெறுகின்றது. இப்பதியை,

***மின்னனைய நுண்ணிடையார் விரிகுழல்மேல் நுழைந்த வண்டு***
***இன்னிசைக்கும் வில்லிபுத்தூர் இனிதமர்ந்தாய்***

(பெரியாழ். 2.2.6)

எனப் பெரியாழ்வார் பாடுகின்றார். ஆண்டாளும் இப்பதியை ஒரு பாசுரத்தில் குறிக்கின்றார். இப்பதியைப் புதுவை என்றழைக்கும் சிறப்பும் பெரியாழ்வாரிடம் காணப்பெறுகின்றது.

### திருக்குறுங்குடி

குறுகிய வாமனனது தலமாகக் கூறப்பெறுவது இத்திருப்பதி. "மன்னு குறுங்குடியாய்'. என்று இப்பதியைப்பெரியாழ்வார் குறிக்கின்றார்.

### வடநாட்டுத்திருப்பதிகள்

வடநாட்டுத் திருப்பதிகளின் எண்ணிக்கை பற்றிய கருத்து வேறுபாடுகள் உள. திருவரங்கத்தமுதனார் பதின்மூன்றெனவும், பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் பன்னிரண்டு எனவும் குறிக்கின்றார். திருவரங்கத் தமுதனார் திருநாட்டையும் வடநாட்டுப் பதியுடன் இணைத்துக் கூறுகின்றார்.

### திருவேங்கடம்

வடநாட்டுப் பதிகளில் சிறப்பிடம் பெறுவது இத்திவ்விய தேசம். இப்பதி எம்பெருமானிடம் வாத்சல்ய குணம் வெளிப்படுவதாக ஆச்சாரிய இருதயம் பகரும். தமிழகத்து வடஎல்லையாக அமையும் இப்பதியைத் தொல்காப்பியமும் குறிக்கின்றது. ஆயினும் தொல்காப்பியத்திலோ, சங்க இலக்கியத்திலோ அங்கு எழுந்தருளியுள்ள இறைவன் பற்றிய குறிப்பு இல்லை.

வேங்கடம் என்ற சொல்லுக்கு ஆழ்வார்கள் கொண்ட பொருள் பாவங்களை எரிக்குமிடம் என்பதாகும். தொண்டரடிப் பொடியும், மதுரகவியும் தவிர ஏனைப் பதின்மராலும் பாடப்பெற்ற சிறப்புடையது திருவேங்கடம். பெரியாழ்வார் இப்பதிப்பெருமானை, ' வேங்கடவாணன்' வித்தகன் வேங்கடவாணன் என்று விளிக்கின்றார்.

***சென்னி யோங்கு திருவேங்கட முடையாய் உலகு***
***தன்னை வாழ நின்ற நம்பி***

(பெரியாழ். 5.4)

என நின்ற திருக்கோலத்தில் காட்சியருளும் தன்மையையும் எடுத்துரைக்கின்றார்.

### திருவயோத்தி

இராமன் அவதரித்த சிறப்புடைய இப்பதியைப் பெரியாழ்வார் ஆறு பாசுரங்களில் மங்களா சாசனம் செய்கின்றார்.

### *திருச்சாளக்கிராமம்*

கண்ணனை ஆழ்வார் "சாளக் கிராமமுடைய நம்பி" எனக் கூறுவதிலிருந்து இப்பதி மங்களாசாசனம் செய்யப்பட்டமை விளங்கும்.

### *திருவதரியாச்சிரமம்*

ஆச்சாரிய மாணவ சிறப்பை விளக்க நாராயணனே குருவாயும், சீடனாயும் இருந்து திருமந்திரம் அருளிய சிறப்புடையது இப்பதி. திருமங்கையாழ்வாராலும், பெரியாழ்வாராலும் மங்களாசாசனம் செய்யப்பட்ட பதிகளில் இதுவும் ஒன்று.

### *திருக்கண்டக்கடிநகர்*

மற்ற ஆழ்வார்களால் பாடப்பெறாது பெரியாழ்வாரால் மட்டும் பாடப் பெற்ற பதி இது ஒன்றே. கங்கைக்கரையில் அமைந்துள்ள இப் பதியின் சிறப்புக் கங்கையின் புனிதத்துடன் இணைத்துக் கூறப்படுகின்றது.

இத்திருப்பதியில் பல அவதாரங்களும் அனுபவிக்கப் பெறுகின்றன. மூவகை இராமாவதாரங்களும் அனுபவிக்கப்பெறும் திவ்வியதேசம் இது ஒன்றே. வடநாட்டுத் திருப்பதிகளில் தனித்திருமொழியாய்ப் பெரியாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப்பெற்ற சிறப்புடையது இப்பதி.

மேற்கண்ட வடநாட்டுத் திருப்பதிகளன்றி, வடமதுரை, திருத்துவாரகை, திருவாய்ப்பாடி, திருப்பாற்கடல், திருநாட்டுத் திருப்பதி முதலானவும் பெரியாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப்பெறுகின்றன. திருச்சித்திரக் கூடமெனும் திவ்விய தேசமும் பெரியாழ்வாரால் மங்களா சாசனம் செய்யப்பட்டதாய்க் கொள்ளலாம். "தேனரும் பொழிற் சாரல் சித்திரக் கூடத்திருப்ப" என அப்பதி அனுமன் கூற்றாய் அமைகிறது. குலசேகரரும்,

> ***சித்திரக் கூடத்து இருந்தான் தன்னைஇன்று***
> ***தில்லைநகர் திருச்சித்திரக் கூடந்தன்னுள்***
>
> (பெருமாள். 10.11)

எனக் குறிப்பதால் பெரியாழ்வார் மங்களாசாசனம் செய்த பதிகளில் திருச்சித்திரக்கூடமும் அடங்கும்.

கொங்கு நாட்டுத் திருப்பதிகள் ஏதும் நூற்றெட்டுத் திருப்பதிகளில் இடம்பெறாது. ஆயினும்,

***கொங்கும் குடந்தையும் கோட்டியூரும் பேரும்***
***எங்கும் திரிந்து விளையாடும் என்மகன்***

(பெரியாழ். 2.6.2)

எனக் குறிக்கின்றார். ஈண்டு கொங்கு என்பதற்கு 'மணம் பொருத்திய' எனப் பொருள் கொள்கின்றனர் உரையாசிரியர்கள். ஆனால் அது பெரியாழ்வார் காலப் பாண்டியன் கட்டிய ஒரு திருக்கோவில் எனப் பொருள் கொள்கின்றார் மு. இராகவையங்கார்.

மேற்கூறியவற்றால் பெரியாழ்வார் திருமால் எழுந்தருளியுள்ள திருப்பதிகளின்பால் ஈடுபட்டு அனுபவித்தமை இனிது விளங்கும். ஆழ்வார் திருவில்லிபுத்தூரில் வாழ்ந்து பூமாலை சூட்டி அப்பதியில் எழுந்தருளி யுள்ள இறைவனை அனுபவித்த போதும், அவருடைய சிந்தை ஏனைய பதிகளில் எழுந்தருளியுள்ள எம்பெருமானின் அர்ச்சா வடிவங்களிலும் சென்றது. இதன் பயனாய்ப் பாமாலையாகிய பாசுரங்கள் எழுந்தன என்பது விளங்கும்.

### *அடைபவனான சீவன்*

மானிட உடல், இத்திரியங்கள், இவற்றிலிருந்தும் வேறுபட்டது சீவன், ஞானமும் அனந்தமும் சீவனிடம் திகழ்ந்து இலங்கும். திருமாலுக்கு அடியவனாய் இருக்கும் சிறப்பும் சீவனுக்குரியது. சீவனுக்குரிய செயல்கள் எல்லாம் இறைவனால் நிகழ்பவை. திருமாலுக்கு அடியவனாய் இருப்பதாலேயே சுவை காண்பவன் சீவன். திருவைகுந்தம் சேர்ந்து திருமாலை அனுபவிக்கும் சிறப்பும் சீவனுக்குரியதாகும். இறைவர்க்குரிய திருத்தொண்டையன்றி ஏனையவற்றை நினைக்காத குணத்தை உடையவனும் சீவனேயாவான்.

ஆழ்வார்கள் திருமாலின் அம்சமாகத் தோன்றியவர்கள். திருமாலையன்றி வேறு மற்றொன்றை நினையாத நித்திய சூரிகளாய்த் திகழ்பவர்கள். அவர்களின் செயல்கள் எல்லாம் முழுமையுடைய சீவனின் செயல்களாகக் கொள்ளத்தக்கன. இறைவனிடம் பக்தி செலுத்தும் முக்தர்கள் சேதனர் என்று கொள்வர். இந்திரியங்களுடன் கூடிய சீவனாயினும் திருமால் புகழன்றி ஏனையவற்றை விரும்பாத சிறப்புடையவர் சேதனர் எனப்படுவர்.

சேதனர்களை மூன்று வகையாகக் கொள்ளலாம். (1) பிறவிப் பெருங்கடலில் உழன்று கன்ம பலன்களை அனுபவிக்கும் பக்தர்கள். (2) பிறவிப் பெருங்கடலில் உழன்று பின் ஓர் உபாயத்தைச் செய்து பிறவிப்

பெருங்கடல் நீங்கப்பெற்று நற்கதி அடைந்த முக்தர்கள். (3) எந்நாளும் பிறவிப் பெருங்கடல் துயரின்றி எம்பெருமானைப் போலவே இருக்கும்

இம்மூன்று நிலைகளையும் உணர்ந்தவராகப் பெரியாழ்வார் திகழ்கின்றார். அவர் அளிக்கும் கருத்து விளக்கம் அசேதனராய் விளங்கும் ஏனையோருக்கு வழி காட்டுவன. ஆதலின் முழுமை அடைந்த சீவனாய்த் திகழும் பெரியாழ்வார் காட்டும் சீவனின் நெறி இங்கு அமைகிறது.

அசித்தாகிய துன்பம் இச்சரீரத்தாலும், இவ்வுலக இன்பத்தாலும் வருவது, அதனைப் பெரியாழ்வார் எடுத்துரைக்கின்றார். தோட்டம் தொடங்கி இறைவர்க்கு அனைத்தையும் அளித்ததையும் எடுத்துக் கூறும் ஆழ்வார் மகளிரிடம் கொள்ளும் இன்பத்தையும் வெறுக்கின்றார். ஐம்பூதங்களாலான இவ்வுடல் அடையும் துயரையும் அவர் எடுத்துக் கூறும் விதம் பக்தர்களை முக்தர்களாக்கவல்லது.

இறைவனை உணர்ந்து அவனன்றி வேறொன்றில்லை என்பதைத் தெளிதல் முக்தர்களுக்குரியது. விட வேண்டுவனவற்றை விட்ட பக்தர்கள், முக்தர்களாய் பற்ற வேண்டுவனவற்றைப் பற்றல் வேண்டும். இறைவனின் நினைவன்றி மற்றவற்றை நினையாத குணம் அமைந்தவர் முக்தர்கள் எனப்படுவர். இறைவன் சிறப்புணர வேதங்களும் சான்றுகளாகும். நால்வேதம் கொண்டு வணங்கா நாளை வழிபடா நாளாக எண்ணுகிறார் பெரியாழ்வார். திருமால் கோயில் வாழும் வைட்டணவன் எனும் பெருமை ஒன்றையே அவர் விரும்புகின்றார். இவ்வாறு முக்தராய்ச் செய்யும் தொண்டு மறுபிறப்பில் நித்தியராய் ஆக்க வல்லது. வினைகளுக்கு ஏற்றாற்போல் பிறவிகள் பெருகும். அவ்வினையின் தன்மை உணர்ந்த சீவனின் நிகழ்வினை குறையின், வருவினையின் பலம் குறையும். இவ்வுணர்வை ஏனையோர்க்குப் பெரியாழ்வார் உரைக்கின்றார்.

நித்தியராகத் திகழத் திருமாலையே உபாயமும் உபேயமுமாகப் பற்றல் வேண்டும். ஆழ்வார்களும் ஆச்சாரியர்களும் நித்தியர்களாவர். பெரியாழ்வார் கருவிலே திருமாலை எண்ணியவராய்த் திகழ்ந்ததைப் பாசுரம் ஒன்று குறிக்கின்றது. மறு பிறப்பெடுக்கா மாண்பு இந்நித்தியர்களுக்குரியது. திருமாலைப்போல வணங்கப்படும் சிறப்பும் ஆழ்வார்களுக்கு உரியது என்பதை வைணவம் விளக்குகின்றது.

மேற்கண்ட கருத்துக்களால், இவ்வுலக மக்கள் திருமால் ஒருவனையே எண்ணி ஓதியுணர்ந்து பிறப்பறுக்க வேண்டும் எனும் அவரது அவா வெளிப்படுகின்றது. நித்தியராய்த் திகழும் பெரியாழ்வார் மற்ற உயிர்களும் மறுபிறப்பறுக்க வழி கூறுகின்றார். இவருடைய பாசுரங்களின் வாயிலாக சீவன், இறைவனை அடையும் விதம் கூறப் பெறுகின்றது. அடைபவனான சீவனின் தன்மையும் விளக்கப் பெறுகின்றது.

### *அடைதற்கு உபாயம்*

சேதனன் பிறவிக்கடலைக் கடந்து அக்கரை எனும் நற்கதியைப் பெறுதற்குச் சாதனமென்று தான் அறிந்து கொள்ளும்படி விதிக்கப்பட்டது உபாயமாகும். அவை சித்த உபாயம், சாத்ய உபாயம் என இரு வகைப் படும். சித்த உபாயம் என்பது சீவனால் புதிதாகச் செய்ய வேண்டாதவாறு முன்பே உள்ள சாதனம். சாத்ய உபாயம் என்பது மனிதனால் செய்யப் படவேண்டியதாய், சாத்திரங்களில் விதிக்கப் பட்டதாய் பலனைப்பெறச் சாதனமாய் இருப்பது. மோட்சம் பெறச் செய்ய வேண்டிய இவ்வுபாயம் இருவகைப்படும். அவை (1) பக்தியோகம் (2) பிரபக்தி.

பெரியாழ்வார் பக்தியோகத்தைக் குறிப்பிடவில்லை. எளிமையான பக்தியைக் குறிக்கின்றார். அப்பக்தியிலேயே பிரபத்தி அடங்கி விடுகின்றது.

### *பக்தி*

பக்தி எனும் சொல் தமிழகத்தைப் பொறுத்தவரை இலக்கியத்தின் மூலமாக விளக்கப்பெறுகின்றது. தமிழ் இலக்கிய வரலாற்றில் பக்தி இலக்கியம் எனும் சிறப்பான காலகட்டம் அமைந்துள்ளமையால் பக்தி எனும் சொல்லின் சிறப்பு இவ்விலக்கியங்களின் வழி உரைக்கப் பெறுகின்றது. வடமொழியில் அமைந்துள்ளதைப் போன்று இதுதான் பக்தி என விளக்கும் நூல்கள் தமிழில் அமையவில்லை. ஆதலின் இறை யுணர்வால் உந்தப்பெற்ற சான்றோர்களின் வாயிலாகப் பக்தியை உணர வேண்டியுள்ளது. பக்தியாகிய இறை உணர்வு சங்க காலம் முதல் பாக்களின் வழி வெளிப்பட்டு வந்துள்ளது. இறைவனிடம் கொண்ட ஈடுபாட்டால் பக்தி இலக்கியங்கள் உதித்தன; தழைத்தன, இவ்வாறமையும் பக்திப் பாக்கள் அருள் பெறுதலுக்காகப் பாடுதலும் அருள் பெற்றபோது பாடுதலும் என இருவகையாக அமைந்துள்ளன.

பக்தி எனும் சொல் வடமொழியில் அமைவது. இதன் பொருள் ஆர்வம் எனும் சொல்லுடன் ஒத்தமைவது எனக் காட்டுவர். இப்பக்தி எனும் சொல்லைச் சைவக் குரவர்களும், ஆழ்வார்களும் எடுத்தாளுகின்றனர்.

*பத்தா பத்தர்களுக்கருள் செய்யும் பரம்பரனே*

(தேவாரம்)

*பக்தர்க்கு முதலடியேன்*

(பெரியாழ் 5.2.2)

என அமையும் தொடர்களால் அதனை அறியலாம்.

## பக்தியும் ஞானமும்

பக்திக்கு அடிப்படையாக அமைவது ஞானம் எனக் கொள்ளலாம். இறைஞானத்தால் வரும் தெளிவு சீவனுக்கு வழிகாட்ட அது பக்தியாக மலர்கிறது. ஞானம் எனின் அது இங்கு இறைஞானத்தை உணர்ந்த சேதனனைக் குறிக்கும். ஞானத்தை அறிவினால் விசாரித்து தெளிவ தாகவும், பக்தியை உணர்ச்சியினால் ஒன்றுவதாகவும் விளக்க முயல்வர். இவ்வடிப்படையில் 'அன்புநெறி அறிவுநெறி' இரண்டென்பர் என இருவகையாகக் காட்டுவர். சமயச்சான்றோரின் கூற்றுக்கள்படி நோக்கின் அவை உணர்ச்சி அடிப்படையில் அமைந்தவை என்று மட்டும் கொள்வதற்கில்லை. அவற்றை நோக்க பக்தியும் ஞானமும் கலந்த கலப்பே என்பது விளங்கும். ஞானம் என்பது ஒரு பொருளைப் பற்றி நன்கு தெரிந்து வைத்திருத்தல் என்பதாகும். இறைவனைப் பற்றிய அறிவினைத் தெளிவாய் உணர்ந்து அவன் வழிபட்டாரைப் பக்தர் என்றும் அடியார் என்றும் தொண்டர் என்றும் உரைக்கின்றனர். அதனால் ஞானத்தின் பயன் பக்தியாகிறது.

***ஞானம் என்ன என்பதைக் கண்ணன் பகவத் கீதையில் கூறுகின்றான். வேறு எதையும் எண்ணாத யோகத்தால் என்னிடம் பிறழாத பக்தி பண்ணுதல் தனி இடத்தை நாடுதல் ஜலக்கட்டத்தில் விருப்பமின்மை.***

(பகவத் கீதை. அக்.13 சுலோகம் . 9)

எனும் அவன் கூற்றில் பக்தியும், ஞானத்திற்கான வழியாகக் கூறப் பெறுகின்றது. பக்தி முதிர்வதே ஞானமும், ஞானத்திற்கு அடையாள மாகவும் அமையும். பக்தி வளர்ந்து முற்றி உள்ளத்து அது தெளிவும் உறுதியும் தருகின்றது. காற்றில்லாத இடத்தில் நிற்கும் புகை போல மனத்து நிறைந்து அசைதல் இல்லாது அமையும் உணர்வே ஞானமாகும். அது பக்தியின் பயன்பாட்டால் அமைவது. ஆதலின் பக்தி, ஞானம் இரண்டும் ஒன்றிற் கொன்று பிரித்துக்காண இயலாது அமைகிறது.

இறைவனின் திருவருள் கிட்டுவதற்குச் சான்றோர்கள் பக்தியை ஒரு வழியாகக் கையாண்டனர். கண்ணனும் தம்மை அடைய கூறுகின்ற அறிவைப் பக்தியாகவும் கொள்கின்றான். பக்தியைப் பெற்றவர்கள் ஞானிகள் எனப்படுவர். அப்பக்தியாகிய ஞானத்தால் இறைவனைத் தொழுததை,

*ஞானத்தால் தொழுவார்கள் தொழக்கண்டு*
*ஞானத்தாய் உனைநானும் தொழுதேனே*

(தேவாரம்.5124)

என்று கூறுகின்றார் அப்பர். அத்தகைய சிறப்புடைய பக்தியை எளிமை யாக்கி யாவரும் இறையருள் அடையும்படிச் செய்த பெருமை ஆழ்வார் களுக்கும் சைவக் குரவர்களுக்குமுரியது.

*உயர்வற உயர்நலம் உடையவன் எவனவன்*
*மயர்வற மதிநலம் அருளினவன் எவனவன்*
*அயர்வுறும் அமரர்கள் அதிபதி எவனவன்*
*துயரறு சுடரடி தொழுதெழு என்மனனே*

(திருவாய்மொழி 1.1.1)

என நம்மாழ்வார் ஞானத்தால் பக்தியைப் பெற்றதைக் கூறுவார்.

### *பக்தி நெறி*

பக்திமதங்கள் இரண்டும் தத்தமக்குரியபக்தி செய்யும் முறைகளைப் பகுத்துரைக்கின்றன.

| சைவம் | வைணவம் |
|---|---|
| சரியை | கருமயோகம் |
| கிரியை | ஞானயோகம் |
| யோகம் | பக்தியோகம் |
| ஞானம் | பிரபத்தியோகம் |
| | ஆச்சாரிய அபிமானம். |

நெறிகள் மாறுபட்டமையினும் அவற்றின் பொதுப்பொருள் இறைவனைச் சரணடைதல் என்பதே. நெறிகள் வேறாகக் கொள்ளப் பெறினும் பக்தியின் நோக்கம், அடிப்படை இரண்டும் ஒன்றுதான் என்பது இதனால் விளங்கும்.

### *பக்தி நெறியின் சிறப்பு*

கடவுளை அடைதலே வாழ்வின் முடிவான குறிக்கோள். இதனைப் பொருளாகக் கொண்டதே சமயச்சான்றோரின் வாழ்க்கை. மனிதன்

கடவுளை அறிந்துமிருக்கலாம்; அறியாதுமிருக்கலாம். அவன் அறியாமல் அதுவே அவனுக்குக் குறிக்கோளாய் இருக்கிறது. இதையே அவர்கள் விளக்குகின்றனர். கடவுளை அடைவதற்குப் பக்தி நெறி எல்லாவற்றிலும் மிக எளிதாக இருக்கிறது. மனிதனுடைய இயல்பிற்கு இது ஒத்ததாக அமைகிறது. பக்திக்குரிய சிறப்புகளில் இது மிக முக்கியமானதாக அமைகிறது.

தூய பக்தி, கர்மம், ஞானம், யோகம் எனும் இவற்றைவிட மேன்மையானது. இந்நெறிகளைக் கையாளுகின்றவர்கள் பக்தியோகி, ஞானயோகி, கர்மயோகி, ராஜயோகி எனப்பெயர் பெறுவர். கர்மயோகம், ஞானயோகம், ராஜயோகம் என்னும் மூன்றும் பரிபூரண நிலையை அடைவதைக் குறியாகக் கொண்டிருக்கின்றன. கர்மயோகம் முதலிய மூன்றும் பக்தியாகிய குறிக்கு நெறியாக அமைகின்றது. ஆனால் பக்தியின் குறியும் நெறியும் ஒன்றுபட்டுத் திகழ்கின்றது.

## *பக்தியின் வகைகள்*

பக்தியின் வகைகளைப் பதினொன்றாகக் குறிக்கின்றது நாரத பக்தி சூத்திரம். அவை கீழ்க்கண்டவாறு அமையும். (1) இறைவனின் குணங்களில் பக்தி (2) இறைவனின் எழில் உருவத்தில் பக்தி. (3) பூஜையில் பக்தி (4) அவனை நினைப்பதில் பக்தி (5) பகவத் சேவையில் பக்தி (6)அவனைத் தோழனாகக் கருதுவதில் பக்தி (7) அவனை தன் செல்வனாக கருதுவதில் பக்தி (8) தலைவி தன் தலைவனை நேசித்துப்பது போல பகவானை நேசித்து பக்தி பண்ணுதல் (9) சீவாத்மனைப் பரமாத் மனுபவத்தில் படைத்தல் என்னும் பாங்கில் பக்தி செய்தல் (10) பரமாத்மனைச் சோரம் பாவனைப் பன்னுதல் என்னும் பக்தி (11) இறைவனை விட்டுப் பிரிதலின் வருகின்ற வேதனையைக் குறித்துப் பக்தி செய்தல்.[5]

இப்பதினொரு வகைகளில் மட்டுமே பக்தி அமையும் என்று கூற இயலாது. முறையாக ஆராய்ந்து பார்க்குமிடத்து எத்தனையோ வகையான பக்தி முறைகள் கொள்ளத்தக்கன. சூரபதுமன் முதலானோர் இறைவனையே எதிர்த்து எப்போதும் இறை சிந்தையைத் தன் மனத்தில் கொண்டிருந்தனர். நாயன்மார்களில் ஒவ்வொருவரும் செலுத்திய பக்தி வெவ்வேறு வகையானது. அவையாவும் மேற்கண்ட வகைகளில் குறிக்கப் பெறவில்லை. பக்தி செலுத்துவார்க்குத் தக்க பக்தியின் வகைகளும் பெருகுகின்றன.

## *பெரியாழ்வார்காட்டும் பக்தி*

பக்தியின் வகைகள் பலவற்றாலும் பெரியாழ்வார் திருமாலிடம் பக்தியைக் காட்டுகின்றார். அவருடைய பக்திச்சிறப்பு மற்றவர்க்கு வழிகாட்டியாக அமைகிறது. நாரத பக்தி சூத்திரம் கூறும் பக்தி வகைகள் பலவற்றை ஆழ்வார் கொள்கின்றார் என்பது அவருடைய பாசுரங்கள் வழி இனிது விளங்கும். இறைவனின் குணங்களின் மேல் கொண்ட பக்தியின் காரணமாக வெவ்வேறு பதிகளில் எழுந்தருளியுள்ள இறைவனைப் பாடுகின்றார்.

கண்ணனைத் தன் பாலகனாய் எண்ணி ஆழ்வார் அமைக்கும் பாசுரங்களும் அவருடைய பக்தி வெளிப்பாட்டைக் காட்டுவன. இவையன்றிப் பூசையில் பக்தியும் பகவத் சேவையில் பக்தியும் அவருடைய வரலாறு காட்டும் சான்றுகள். இவ்வாறு ஆழ்வாரின் பாசுரங்கள் அனைத்துமே பக்தியின் விளக்கமாக அமைகின்றன. அவற்றில் அகத்துறைப் பாங்கிலமைந்த பக்தியும், இறைவன் திருநாமத்தில் கொண்ட ஈடுபாடும், அடியவரிடம் அவர் கொண்ட பக்திச் சிறப்பும் ஈண்டு இடம் பெறுகின்றன.

## *அகத்துறை*

தமிழ் மொழிக்கு அழகுதரும் தனிச்சிறப்புக்களில் அகத்துறையின் பங்கு பேரிடம் பெறுகின்றது. உய்த்தும் துய்த்தும் அனுபவிக்கப்பெறும் அகஉணர்வு புலவர்களால் தமிழ் இலக்கியத்தில் போற்றப்பட்டு வந்திருக்கின்றது. தொல்காப்பியம் தொடங்கி இவ்வகத்துறைக்கு இலக்கணம் வகுக்கும் மரபை நாம் காணுகின்றோம்.

அகத்துறையாய் எழுந்த இலக்கிய உத்தி பக்திச் சமயங்களான சைவம் வைணவம் இரண்டிலும் அமைகின்றது. சைவ மரபில் சமயக் குரவர்களின் பாடல்களில் இவ்வுத்தி அமைகின்றது. வைணவத்தில் நம்மாழ்வாரும், திருமங்கையாழ்வாரும் ஆண்டாளும் இம்முறையில் பாசுரங்களை அமைக்கின்றனர். நம்மாழ்வார் இவ்வாறு அமைத்துப் பாடும் பாசுரங்களுக்கு ஆச்சாரிய இருதயம் தத்துவங்களின் அடிப்படையில் விளக்கம் தருகின்றது. தலைவி, தோழி, மகள் எனும் மூவரின் கூற்றாக அகத்துறை நாலாயிர திவ்வியப்பிரபந்தத்தில் காணப்பெறுகின்றது.

பெரியாழ்வாரின் பாசுரங்களில் தாய், தோழி, தலைவி கூற்று வகை அமைப்பு வேறுபட்டதாய்த் திகழுகின்றது. தலைமகளின் தாயின் கூற்றாக ஆழ்வார் அமைக்கும் திருமொழிகள் இரண்டாகும். இவற்றைச் சுவாபதேசம் எனப்படும் உள்ளுறை வகையால் அகத்துறையில் கூறப்

பெறவில்லை. கண்ணனைக் கண்ட ஆயர்மகளிர் அவன் எழில் நலம் கண்டு அவாவுற்று நிற்கின்றனர். அவாவுற்று அவர்கள் நிற்கும் நிலை உலா இலக்கியத்தில் கூறப்படுவதைப் போன்று அமைகின்றது. அவற்றில் அமையும் பாசுரங்கள் தலைவி கூற்றாகவும், தோழி கூற்றாகவும் பிரித்தறிய இயலாத வகையில் திகழ்கின்றன.

திருமந்திரத்தில் முதலில் திகழ்வது ஓம் எனும் பிரணவம், இப்பிரணவத்தால் இறைவனுடன் ஆத்மாவுக்குச் சொல்லப்பட்ட அநந்யார்த்த சேசத்துவம், அநந்நியார்த்த போக்கியத்துவம், அநந்யார்த்த சரண்யக்துவமெனும் அநந்யார்த்த குணங்கள் மூன்றையும் உணர்ந் தாலேயே இவ்வாத்மா இறைவனுடன் சேருவதற்கான வழியேற்படும். இவ்வாறு உணரும் சம்பந்த அறிவாகிய நிலையே தோழியாகக் கூறப் பெறுகின்றது. அதாவது தலைவனையும் தலைவியையும் கூட்டும் செயல் தோழிக்குரியது. சீவாத்மாவைப் பரமாத்மாவின் தன்மையை உணரச் செய்யும் ஞானம் தோழி எனப்பெறும்.[6]

அரங்கத் தரவணையான் சித்தாகவும் உபாயமாகவும் இருக்க வல்லவன். அவனைப் பற்றியவர்கள் அவனுடைய பலத்தை எடுத் துரைத்து அவனுடைய அருளைப் பெறும் தன்மையை உடையவர் களாக இருக்கின்றனர். அதனை விரைவில் பெறவேண்டும் என்ற அவா கொண்டு, அவ்விரைவால் வரை கடந்து நடக்க வேண்டிய அளவில் அது பிரபன்னரின் கட்டுப்பாட்டுக்குச் சேராதது என விலக்கி, அருள் உடையானான இறைவன் தானே வந்து அருளுதல் வேண்டும் என்று சொல்லித் துடிப்பை அடக்கிப் பார்க்கிற நம பதத்திற்குக் கூறப்பட்ட தன்மை தாயார்க்குரியதாகக் கொள்ளப்பெறும்.[7]

உறவினர் கூட்டுவித்தலன்றி இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து தலைமகள் ஒப்பற்ற குணங்களில் ஈடுபட்டுக் குடியின் கட்டுப்பாட்டைக், கருதாது அவனைக் கிட்டினல்லது உயிர் வாழேன் எனும் பதற்றமுடை யவள் தலைவி. ஓம் என்னும் பிரணவத்தாலும் நம என்னும் சொல் லாலும் சேஷி என்றும் சரண்யன் என்றும் உணரப்பெற்றவனான எம் பெருமானுக்கு நாராயண பதத்தால் கூறப்பட்ட ரூபம், குணம், விபூதி முதலானவற்றின் சேர்க்கையால் வீறு பாட்டைக்கூறி அதனால் அவனை வேண்டி அனுபவிக்க நிற்கமாட்டாமல் அவனே உபாயம் என்ற கொள்கையை வலியுறுத்தி அவனை அனுபவித்தாலொழிய தரிப் புற்றிருக்க ஒன்னாதபடி இருக்கும் நிலையை மகளாகக் கொள்வர்.[8]

***மற்றவர்க் கென்னைப் பேசலொட்டேன் மாலிருஞ்சோலை மாயற்கல்லால்***
***கொற்றவனுக்கிவளா மென்றெண்ணிக் கொடுமின்கள் கொடிராகிற் கோழம்பமே***

(பெரியாழ்வார் 3.4.1)

என ஆழ்வார் அமைக்கும் பாசுரம் அதற்குச் சான்றாகும்.

அகத்துறையில் அமையும் தோழியரின் கூற்றாக அல்லாது பலருக்கும் எடுத்துரைக்கும் தோழி ஒருத்தியின் கூற்றாகவும் பாசுரங்களை ஆழ்வார் அமைக்கின்றார். "எதிர் நின்று அங்கு இனவளை இழவேல்மினே" என ஆழ்வார் அமைக்கும் பாசுர வரி இலக்கியத்துடன் கூடிய பக்திச் சுவையை வெளிப்படுத்துவது. எம்பெருமானின் திருக்கலியாண குணங்களில் எண்ணியார்க்கு வீடு பேற்றைத் தருகின்ற அவனுடைய அருளும் ஒன்று. அவனுடைய எழில் தோற்றத்துடன் கூடிய குணங்களில் ஈடுபட்டார் இவ்வுலகப் பற்றாகிய துன்பத்தை இழக்க வேண்டிவரும். ஆதலின் பற்றற்ற சீவான்மா வீடுபேற்றை அடைய விழையும். அதற்கு இவ்வுலக உடல் தடையாகும். இவ்வுடல் இவ்வுலகில் வாழும்வரை இவ்வுலக இன்பத்தையே நுகர முயலும். பெருமானின் திறம் நினையும் காலை இவ்வுலகப்பற்றும் அற்றுப் போகும். இவ்வுடல் பெற்ற பயன் அது இருக்கும் வரையாவது நல்லன கண்டு கேட்டு இறைவன் எழிலைத் துய்ப்பதுதான், அதனைத் கருத்திற்கொண்டு "கைவளை யிழவேல்மினே" என இவ்வுலக வாழ்க்கையை ஆழ்வார் விரும்புகிறார். தன் ஆச்சாரியனின் எழில்கோலம் காண இறைவனிடம் தாம் வாழ ஏனை வைணவர்களை வேண்டச் செய்த பின் பழகிய பெருமான் சீயரின் உள்ளக் கருத்தை ஒத்தது இது.

ஒரு பாசுரத்தில் கண்ணன் வரும் அழகைக் கண்டு அயர்வுற்ற ஆய்மகளின் தாயாய் ஆழ்வார் பாசுரம் அமைக்கின்றார். கண்ணன் வரும் அழகினைக்,

***கோலச் செந்தாமரைக் கண்மிளிர குழலூ தியிசை பாடிக்குவித்து ஆயரோடு ஆலித்து வருகின்ற ஆயப்பிள்ளை***

(பெரியாழ்வார் 3.7.4)

என ஆழ்வார் கூறுகின்றார். இவ்வாறு ஆழ்வார் அமைக்கும் பாசுரங்களில் மகனாகத் தன் மனநிலையை உருவகித்துக் கூறுகின்றார் எனக்கொள்ளலாம். கண்ணன் வருகையைக் கண்டு காமுற்ற கன்னியரின் தன்மையையும ஆழ்வார் எடுத்துரைக்கின்றார். அப்பாடல்களில் எல்லாம் ஆயமகளிர் வளையிழந்ததாகக் கூறுகின்றார் ஆழ்வார். "ஒன்று நில்லா வளை கழன்று

துகிலேந்து என்முலையும் என்வசமில்லவே" என அமையும் வரி அதனை விளக்கும். ஆச்சாரிய இருதயம் கலையும் வளையும் இழத்தலை இறைவனின் அனுபவத்திற்கு ஆகாததாக அகங்கார மகங்காரங்கள் இழத்தலாகக் குறிக்கின்றது. "மானிடவர்க்கு என்று பேச்சுப்படின் வாழகில்லேன்" எனும் ஆண்டாளின் கொள்கை உடையவளாகத் திகழும் ஆய்ச்சி "மற்றவர்க்கென்னைப் பேசலொட்டேன்" எனக் கூறுவதாய்ப் பாசுரம் அமைகின்றது.

கண்ணனின் பேரெழில் கண்டு வளை கழன்ற காரிகையின் தன்மையைத் தாயின் கூற்றாகவும் ஆழ்வார் அமைக்கும் பாசுரங்கள் உள."நங்கை தனது துகிலொடு சரிவளை கழல்கின்றே" என்றும் "வெள்வளை கழன்று மெய்ம் மெலிகின்றதே" என்றும் ஆழ்வார் பாடும் தொடர்கள் அதனை விளக்குவதாய் உள்ளன. ஆழ்வார் தன்னைத் தலைவியாயும் கண்ணனைத் தலைவனாகவும் கொண்டு அமைக்கும் பாசுரங்களும் அவருடைய திருமொழிகளில் இடம்பெறுகின்றன. பக்தி வகையில் ஒன்றாக அமையும் இக்கருத்தமைந்த பாசுரங்கள் இலக்கியச் சுவையுடன் திகழ்ந்து பக்தியைக் காட்டவல்லன.

ஆழ்வார் கோதையின் தாதையாவார். மகளைப் பிரிந்த துன்பம் அவர்தம் பாசுரங்களின் வாயிலாக வெளிப்படுகின்றது. ஆழ்வார் அமைக்கும் இரு திருமொழிகள் ஆண்டாளால் அவர் உணர்ந்த அனுபவத்தை வெளிக்காட்டுவனவாக அமைகின்றன. திருமாலின் மேல் மையலுற்ற தம்மகளின் செயல்களைக் கண்ட தாயின் கூற்றாக அமையும் ஆழ்வார் பாசுரங்கள் அவருக்கு உபாயத்தால் உறுதியாகும் மூன்று காலங்களையும் அறியும்நிலை ஏற்பட்டதை விளக்கும்.

தலைமகனைக் களவு ஒழுக்கத்தில் புணர்ந்த தலைமகள் அவன் பிரிந்த நிலையில் ஆற்றாது வருந்தி வாய் பிதற்றிக் கண்ணீர் சொரிந்து மேனிமெலிந்து வடிவம் வேறுபட, இவ்வடிவ வேறுபாட்டைக் கண்ட தாய் தோழியை வினவ, அவளும் உண்மையான காரணத்தைக் கூறினாள்.

அதனைக் கேட்ட தாய் தலைவியுடைய இளமைப் பருவத்தையும் அழகையும் கூறி அவள் திருமால் வசம் மையல் கொண்ட தன்மையைக் கூறிப் பாடுவதாய்ப் பாசுரங்களை அமைக்கின்றார் ஆழ்வார்.

பரத்துவமான திருமால் புருடோத்துமன் எனப்பெறுவான், அவனுடைய பேராண்மைக்கு முன் ஏனைய சித்து அசித்துப் பொருள்களெல்லாம் பெண்தன்மை உடையவை. சீவான்மாவின் சுவதாந்திரியம் இன்மையும், பரதந்திரியமுமே ஆழ்வாரின் தலைமகள் ஆவதற்குரிய காரணமாகும். அதன் அடிப்படையில் பாசுரங்கள்

அமைகின்றன. அவற்றுக்குச் சுவாபதேசமாக வெளிப்படும் தத்துவக் கருத்துக்கள் பலவாகும். மாயோன் மேல் மகள் மையலுற்ற நிலையைக் கூறும் பாசுரங்களுக்கெல்லாம் ஆழ்வாரின் நிலையை அன்பர் கூறுவதாக உள்ளுறைப் பொருள்கள் உரைக்கப்பெறுகின்றன.

தாயின் கூற்றாக அமையும் பாடல்கள் பெரியாழ்வாரின் இறைபக்தியை வெளிக்காட்டுவன. ஆழ்வார் ஆத்மாலங்காரத்தை உடைமையும், சாத்வீக குணம் உடைமையும் பாசுரங்கள் வழி அறியப்படுகின்றன. வேதங்களை ஓதுவித்து இவ்வுலக வாழ்வில் இறுத்த முயலினும் அவர்தம் சிந்தை இறைவன்பால் சென்று அவனை அனுபவிக்க வேண்டுமென்று பதறுகின்றது. இதனை “மைத்த டமுகில் வண்ணன் பக்கல் வளர விடுமின்களே” என்று தாய் வேண்டி நிற்கும் பாசுரம் வழி உணரலாம்.

மேற்கண்ட கருத்துக்கள் பெரியாழ்வார் இறையனுபவத்தை முழுமையாய் அனுபவிக்க வேண்டி இறைஞ்சி நிற்கும் நிலையை எடுத்துக்காட்டுவன. இதுவன்றி ஆழ்வார் தம் திருமகளின் செயலைக் குறிக்கும் பாசுரங்களும் இடம்பெறுகின்றன.

***காறை பூணும் கண்ணாடி காணுந்தன் கையில் வளைகுலுக்குங்***
***கூறை யுடுக்கு மயர்க்குத் தன்கொவ் வைச்செவ் வாய்த்திருத்தும்***

(பெரியழ். 3.7.8)

என்றால் போன்றவை இதற்குச் சான்றாகும்.

மாலின் மேல் மையலுள்ள மகள் அவன்பின் சென்றதை எண்ணி ஆழ்வார் அமைக்கும் திருமொழி ஒன்று உண்டு. அதில் தாய்மை உணர்வின் எல்லையை ஆழ்வார் வெளிப்படுத்துகின்றார். கோதையைப் பிரிந்த பின்னர் ஆழ்வாரின் மனநிலை எத்தகையதாய் இருந்தது என்பதை வெளிக்காட்டும் வகையில் பாசுரங்கள் அமைகின்றன. நம்மாழ்வார் தாயின் கூற்றாக அமைக்கும் பாசுரங்கள் தம் மகளின் நிலை கண்டு வருந்தித் தலைவனை வேண்டுவதாக அமைகின்றன. தாயின் கூற்றாக அமையும் இருவர் பாடல்களிலும் பெரியாழ்வாரின் பாடல்கள் அனுபவத்தின் அடிப்படையில் அமைந்ததால் அவை தனிச் சிறப்புப் பெற்றுத் திகழ்கின்றன எனலாம்.

அகத்துறைப் பாங்கில் தலைவி, தோழி, தாய் இவர்களின் கூற்றாக அமையும் பாசுரங்கள் பெரியாழ்வாரின் பக்தியைக் காட்டுவன. தலைவியாய்த் தன்னை உருவகிக்கும் ஆழ்வார் இறைவனைத் தலைவனாய் எண்ணி அருள் வேண்டுகின்றார். தோழியருள் ஒருத்தியாய் அமைக்கும் பாசுரங்கள் வழி ஏனையோர்க்கு இறையருளை விளக்க முயல்கின்றார்.

தலைவியின் தாயாய் அவரமைக்கும் பாசுரங்கள் மூலம் தன் மனநிலை இறைவனிடம் ஈடுபட்டதை விளக்குகின்றார். எனவே மூன்று அகத்துறைக் கூற்றுகளும் பக்தியின் தன்மையை விளக்குவன.

## திருமால் திருநாமங்களில் பெரியாழ்வார் கொண்ட ஈடுபாடு

வைணவ சமயத்தில் சிறப்புடையனவாகக் கொள்ளப்பெறுவன மூன்று. அவை திருமந்திரம், துவயம், சரமசுலோகம் என்பன. அவற்றில் திருமந்திரம் மிகச் சிறப்புடையது. இத்திருமந்திரப் பொருளை ஏனைய இரண்டும் விவரிக்கின்றன. இத்திருமந்திரத்தை நாராயணனே குருவாயும் சீடனாயும் இருந்து வெளியிட்டருளினான். நாராயணன் தொடங்கி அமையும் ஆச்சாரிய பரம்பரை மரபு வைணவத்தில் போற்றப்பெறு கின்றது.

இத்திருமந்திரமே இறைவனைப் பற்ற உபாயமாக இருப்பது. திருமாலின் உலகமான பரமபதத்தை அடைய படியாய் அமைவதும் இதுவே. வேதாந்த சாத்திரங்கள் தத்துவ, இதம், புருசார்த்தம் என்பனவற்றை விளக்குகின்றன. இவற்றின் நோக்கம் இவ்வுலக வாழ்வாகிய பிறவிப் பெருங்கடலில் உழலும் சீவான்மாவைக் கரையேற்றுவதுதான். வைணவத்தில் கூறப்பெறும் மூன்று மறை பொருள்களும் இவற்றையே அடிப்படையாகக் கொண்டவை.

திருமந்திரத்தில் முதலாவதாய் அமைவது ஓம் எனும் பிரணவமாகும். வேதங்களின் முதலிலும் ஈற்றிலும் உச்சரிக்கப்பெறும் சிறப்புடையது. அகரம், உகரம், மகரம் எனும் மூன்றெழுத்துக்களாலானது. இம்மூன்று எழுத்துக்களில் அகரம் இருக்கு வேதத்திலிருந்தும் உகரம், எசுர் வேதத்திலிருந்தும் மகரம் சாம வேதத்திலிருந்தும் எடுக்கப்பட்டவை. இவற்றில் அகரம் திருமாலைக் குறிக்கும்; உகரம் பெரிய பிராட்டியைக் குறிக்கும்; மகரம் ஆன்மாவைக் குறிக்கும். சிறப்புடன் அமையும் இப்பிரணவத்தை ஆழ்வார் திருமாலுடன் இணைத்துக் கூறுகின்றார்.

***மூன்றெழுத் ததனை மூன்றெழுத் ததனால் மூன்றெழுத் தாக்கி மூன்றெழுத்தை***
***மூன்றடி நிமிர்ந்து மூன்றினில் தோன்றி மூன்றினில் மூன்றுரு வானான்.***

(பெரியாழ். 4.7.10)

எனும் பாசுரம் அதனை விளக்கும்.

இருக்கு, எசுர் வேதங்களின் அடையே பூ, புவ, சுவ. இவற்றி லிருந்து தோற்றிவிக்கப்பட்டவையே அகர, உகர, மகரங்கள், இவற்றைக் குறிப்பது 'மூன்றெழுத்ததனை' என்பது. வடமொழியில் ஒரு சொல்லுக்கு அது எப்படி உண்டாயிற்று என்று சொல்வது நிர் வசனம் (நி-ரு-க்தம்)

எனப்பெறும். இதனைக் குறிப்பது 'மூன்றெழுத்ததனால்' எனும் சொல். முன்சொன்ன அகர, உகர, மகரங்களாகிய சொல்லை மூன்றெழுத்தாக்கி அமைக்கப்படுவது, மூன்றெழுத்தான பிரணவம். அப்பிரணவத்தை நம பதத்தோடும், நாராயணா பதத்தோடும் கூட்டி மூன்று பதமாக்கி அம்மூன்று பதங்களில் மூன்று ஆகாரங்களைத் தோற்று விக்கக்கூடியவன் எம்பெருமான். அவையாவன, அநந்யார்த்த சேஷத்துவம், அநந்யார்த்த சரண்யத்துவம், அநந்யார்த்த போக்கியத்துவம் என்பன. இம்மூன்றிற்கும் தானும் சேஷத்துவம், சரண்யத்துவம், பிராப்பியத்துவம் என்ற மூன்று உருவங்களை உடையவனாக இருக்கின்றான் திருமால் என்பது பெறப்படும். திருமந்திரப் பொருளின் கருத்து முழுவதும் இப்பாசுரத்தின் இருவரிகளில் வெளிப்படுவது ஆழ்வாரின் திறமையைக் காட்டும். தத்துவப்பொருளை எளிமையாக்க விரும்பும் அவருடைய முயற்சியும் விளங்கும், பிரணவமாக விளங்கும் திருமாலை 'மூன்றெழுத்தாய முதல்வனே' என்றும் ஆழ்வார் அழைக்கின்றார்.

இனி அப்பிரணவத்தை உச்சரிக்கும் முறையை எடுத்துரைக் கின்றார். "மூலமாகிய ஒற்றையெழுத்தை மூன்று மாத்திரையுள் எழவாங்கி" எனும் தொடர் அதனை விளக்கும். வேதங்களுக்கெல்லாம் முதன்மை யானதாக அமையும் பிரணவம் ஒற்றை எழுத்து என்று உரைக்கப் பெறுகின்றது. பிரணவத்தை உச்சரிப்பதில் ஒரு மாத்திரையும், இரு மாத்திரையும், மூன்று மாத்திரையும் உள. ஒன்று, இரண்டு மாத்திரை உள்ளெழ உச்சரிப்பவர்களுக்குச் ருத்திர பல பிராப்தியே உண்டு என்றும், மூன்று மாத்திரை உள்ளெழ உச்சரிப்பவர்களுக்கே பரமபத பலன் உண்டு என்றும் ஸ்ரீபாஷ்யம் கூறுவதாய் கொள்வர்.

திருமந்திரத்தில் அடுத்து விளங்குவது 'நம' பதமாகும். 'ஓம் நமோ நாராயணாய' எனும் எட்டெழுத்து மந்திரத்தில் இப்பதம் நடுவில் விளங்குவது. நம பதம் சரணாகதியைக் குறிக்கும். ந, ம என்பதை வெவ்வேறான இரு பதங்களாகக் கொண்டு எனக்கு நன்மையல்லாதது வரவேண்டாமென்று இறைஞ்சுவதாகப் பொருள் உண்டு. இதனால் வேறொருவருக்கு அடியன் அல்லேன் என்பதால் தத்துவமும் சரணா கதியைக் கூறுவதால் இதம் என்றும், உபாயமும், நன்மையல்லாததை மறுத்து வேண்டுதலால் புருஷார்த்தம் என்னும் பயனும் 'நம' பதத்திற்கு உரியனவாகும்.

திருமந்திரத்தில் மூன்றாவதாக அமைவது 'நாராயணாய' என்னும் சொல்லாகும். இது பெரிய பிராட்டியோடு கூடிய இறைவனையே குறிக்கும். நாரம் எனில் சேதனமும், அசேதனமும்; அயனம் - அவற்றுக்கு

இருப்பிடமானவன் என்று பொருள். இதனால் பெறப்படுவன இரண்டு. (1) சேதன அசேதனங்களுக்கு இருப்பிடமானவன் என்பது எல்லாப் பொருள்களுக்கும் ஆதாரமாக இருக்கும் தன்மையைக் குறிக்கும். (2) சேதன அசேதனங்களின் உறைவிடமாகத் திகழ்பவன் என்பதைக் குறிக்கும். 'ஆய' என்பது வடமொழியின் நான்காம் வேற்றுமை உருபு. அது சேதனின் அடிமைத் தன்மையைக் கூறுவது.

இவ்விரு பதங்களும் தரும் சிறப்பு நோக்கி அவை ஆழ்வார்களால் மிகப் போற்றப்படுகின்றன. பெரியாழ்வாரும் தம் பாசுரங்களில் இவற்றைக் குறிக்கின்றார்.

*பல்லாண்டு பரமார்த்தனை நமோ நாராயணவென்று*

(திருப்பல்லாண்டு. 12)

என அமையும் தொடர் அதனை விளக்கும். "உன்னுமாறு ஒன்று மறியேன் ஓவாதே நமோநாராயணா என்பன்" எனும் ஆழ்வார் காட்டும் தொடரும் மேற்கண்ட கருத்தை வலியுறுத்தும். வாயால் திருமந்திரம் ஓதிமெய்யால் வணங்கி நிற்கும் நிலையும் ஆழ்வாரால் கூறப் பெறுகின்றது. இவ்வாறு திருமந்திரம் பற்றிய கருத்துக்கள் ஆச்சாரியரின் வழியாக வைணவ தத்துவ விளக்க நூல்களில் விளக்கப்பெறுகின்றன.

திருமந்திரம் அன்றி ஏனைய திருமாலின் திருநாமங்களுக்கும் சிறப்புக்கள் கூறப்பெறுகின்றன. வேதத்தில் கூறப்பெற்ற மூன்று திரு நாமங்களையும் அன்றி வேறு நாமங்களும் ஆழ்வார்களால் இறை வனுக்கு உரைக்கப்படுகின்றன. நம்மாழ்வாரும் பெரியாழ்வாரும் வியூக மூர்த்தியின் பன்னிரு திருநாமங்களையும் நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் குறிக்கக் காணலாம். பெரியாழ்வார் கூறும் பன்னிரு நாமங்களும் அந்தாதித் தொடையில் அவர்தம் திருமொழியில் அமைகின்றன.

திருமாலின் ஆயிரத்தெட்டு நாமங்கள் வைணவர்களால் போற்றப் பெறுவன. பெரியாழ்வார் கண்ணனை வளர்த்தவர் ஆகையாலே அவர்தம் சிந்தை பிள்ளைகட்கு திருமாலின் திருநாமம் இட வேண்டும் என்று எண்ணுகிறது. ஆழ்வாரின் கருத்துப்படி நாராயணனின் திருப்பெயரை உடையானைப்பெற்ற தாய் நரகம் புகாள் எனும் செய்தி வலியுறுத்தப் பெறுகிறது.' ஆதலின் நாரர்யண்னின் திருப்பெயரையே இடவேண்டி இவ்வுலக மக்களை வேண்டுகின்றார். சோற்றுக்கும் கூழுக்கும் வாழ்ந்து

ஏனைய பெயர்களை இடுபவர்கள் இதனால் ஏசப்படுகின்றனர். இம்மானிடப் பிறவியின் உடல், "மலமுடை ஊத்தையில் தோன்றியதோர் மலமுடை ஊத்தை" ஆகும். அதனைத் திருமால் நாமம் இட்டு வழங்கி னாலேயே பேறு பெறும் என்பது ஆழ்வார்தம் பாசுரங்கள் வழி வெளி யாகும் கருத்து. "நாரணன் தம்மன்னை நரகம் புகாள்" என அமையும் தொடர் நாரணன் திருப்பெயர் உடையாரை நாராயணனாய் எண்ணும் சிறப்பு ஆழ்வார்க்குரியது எனலாம்.

இவ்வுலகத்தில் பிறப்பது பிறர்க்காக இறப்பது தனக்காக என்று உணர்ந்தாலேயே பிறவியின் பயனை அறிய இயலும். பிறந்து நாரணன் திருப்பெயரைப் பெறின் தாயானவள் நரகம் புகாள். இறக்கும்போது இறைவன் திருநாமம் ஓதின் இவ்வுயிர் பரமபதம் அடையும். இவ்வுலக வாழ்வில் பற்றை வரச்செய்து, இன்ப துன்பங்களில் உழலச் செய்வது இப்பிறவியாகிய பெருநோய். கணப்பொழுதும் மாதவனை நினையாதவர் இறப்பின்போது நினைப்பினும் அவன் அருளவல்லவன். இறப்பின்போது கூட அவன் திருநாமம் ஒன்றே துணையாக அமைய வல்லது. இக்கருத்தினை ஆழ்வார் வலியுறுத்துகின்றார்.

இப்பிறவி, வாழ்க்கை, தந்தை, தாய், மனைவி, செல்வம் எனும் கயிற்றால் கட்டப்பட்டது. இறக்கும்போது எம கிங்கிரர்கள் தம் பாசம் கொண்டு துயர் செய்து இழுத்துச்செல்வர். அத்தளையிலிருந்து விடுபட ஒரு வலையில் புகுவது இவ்வுடல் கொண்ட உயிர்க்கு இன்றியமையாதது. திருமாலின் திருநாமம் ஒன்றே அச்செயலைச் செய்ய வல்லது. திருநாமம் ஓதுவார் பெறும் பயன் "கேடிலீ என்றும் பேசுவாரெய்தும் பெருமை பேசுவான் புகில் நம்பரமின்றே" என ஆழ்வார் அமைக்கும் இத்தொடர் நோக்கத்தக்கது. இவ்வுயிர் மானிடப்பிறவி எடுக்காததற்கான வழியைத் திருமாலே செய்ய இயலும். நித்திய முக்தர்களால் அனுபவிக்கப்பெறும் பரமபதத்தில் இருக்கும் பாம்பணையில் பள்ளி கொண்டானே பிறவித் துயர்கெடுக்கவல்லவன். பெரியாழ்வார் இப்பிறவித் துயர் கெடப் பேரவா கொண்டவராய்த் திகழ்கின்றார். வீடுபேற்றின் உயர் நிலை அதுவே. பரமபதம் நுழைந்த ஆன்மா வேறென்றை நினைக்காது. இக்கருத்தினைப் பெரியாழ்வார் தம் பாடலில். "பின்னை அத்திசைக் கென்று பிணைக் கொடுக்கிலும் போக வொட்டோம்" என்று கூறுகின்றார்.

இவ்வுலக வாழ்வை வெல்ல நாராயணன் திருநாமம் ஓதுவதே வழியாகும். அது ஒன்றே இறப்பிலும் துணையாகும் தன்மையது என்பது ஆழ்வாரின் பாசுரங்கள் வழி அறியலாகும் செய்தி.

*அடியார்ச் சிறப்பு*

பக்திக் காலத்தில் சமயங்கள் வளர்ந்தன. அவற்றை வளர்க்கப் பல முறைகள் தோன்றின. அவற்றில் ஒன்று அடியவர்க்குத் தொண்டு செய்தல் என்னும் மரபு. பக்தி என்னும் சொல்லின் தன்மையை எளிமை படுத்தியவற்றுள் இதுவும் ஒன்றாகும். இம்மரபின் வழியேதான் ஆழ்வார்களையும், ஆச்சாரியர்களையும், நாயன்மார்களையும் சிறப்பித்துக் கூறும் நிலை ஏற்பட்டது. மலைபடுநீர் நதி வழி வந்து பயனளிப்பது போன்று, இறையருள் இவ்வடியார் தொண்டின் வழி கிடைக்கப்பெற்றது. அடியார் தொண்டினால் பேறு பெற்றவர்களின் சிறப்பினைப் பக்தி சமயங்கள் பலவாகப் பேசுகின்றன. ஆழ்வார்கள் அத்திருத்தொண்டைச் செய்தனர்.

***அடிப்பாடி அரங்காவோ என்றழைக்கும் தொண்டரடிபபொடி***
***ஆடநாம்பெறின் கங்கைநீர் குடைந்தாடும் வேட்கை யென்னாவதே***

(பெருமாள் 1.2..2)

எனத் தொண்டரடிப்பொடி சூட விழைகிறார் குலசேகரர். ஆச்சாரியர்களில் பெரிய நம்பி தாழ்குலத்து வைணவ பக்தர்க்கு ஈமச்சடங்கு செய்து பாகவத பக்தியை விளக்கினார். இராமானுசரே வியந்த அடியார் தொண்டு இது.

திருமாலடியார்களின் குணங்களைப்பற்றி விட்டுணுபுராணம் சிறப்பாக எடுத்துரைக்கின்றது. 'வைணவ பக்தர்கள் தன்னாச்சாரியன்' வழி உணர்ந்ததைத் திருமாலின்அருளாக எண்ணுபவர்கள். தம் பகைவரிடத்தும், உறவினரிடத்தும் ஒரே எண்ணம் கொண்டவர்களாகத் திகழ்பவர்கள். ஓர் உயிரையும் கொல்லாத, ஒரு பொருளையும் களவாடாத சிறப்புடையவர்கள். அவர்களுடைய இதயத்தில் திருமால் எழுந்தருளி யுள்ளான்.[9] இச்சிறப்புக்கள் ஆழ் வாராதிகளாலும் நாலாயிரத்தில் ஆங்காங்கு எடுத்துரைக்கப் பெறுகின்றன. அடியார்க்குச் செய்யும் தொண்டு இறைவனுக்குச் செய்யும் தொண்டு எனும் கருத்து அவற்றில் அமைந்துள்ளது.

***அடியார் அடியார் தம்மடி யார்அடி யார்தமக்***
***கடியார் அடியார் தம்மடி யாரடி யோங்களே***

( திருவாய். 3.7.10)

என நம்மாழ்வார் அமைக்கும் பாசுரம் அடியாருக்கு அடியவராய்த் திகழ எண்ணும் அவர் அவாவைக் காட்டும்.

பக்தி செய்யும் முறைகள் பலவாக அமையும். இறைவனை நினைத்து அழுதலும் பக்தியே,

***மொய்த்துக் கண்பனிசோர மெய்கள்சிலிர்ப்ப ஏங்கி இளைத்து நின்று***
***எய்த்துக் கும்பிடு நட்டமிட்டெழுந்து ஆடிப்பாடி இறைஞ்சி***

(பெருமாள்.2.9)

நிற்பதுவும் பக்தியே. ஆடிப்பாடி அவனடியார் கூட்டத்துச் சேர்வதும், அவன் திருநாமம் ஓதுவதும் பக்தியே. ஆடிப்பாடி அடியவரின் கூட்டத்தில் சேர்ந்து பக்தி செய்வதால் பண்டைக்குலம் தவிர்க்கப்பெறுகின்றது. இதனைப் பெரியாழ்வார் எடுத்துக்கூறி ஏனைய அடியாரையும் பண்டைக் குலம் தவிர்க்க அழைக்கிறார். பாவங்கள் எல்லாம் தீயில் கருகித், தூயமனத்துடன் திகழ எட்டெழுத்தாகிய திருமந்திரம் ஓதுதல் வேண்டும் என்பது அவரது விருப்பம். இறைவன் உண்டதை உண்டு, அவன் உடுத்தியதை உடுத்தி வாழ வல்லவர்கள் அடியார்கள். இறைவன் சூடிக் களைந்த துழாய் மாலைகளைச் சூட்டிக் கொள்ளும் திறம் ஒன்றையே உடையவர்கள் அவன் அடியார்கள். இறைவன் உண்ட மிச்சிலை உண்பதே அவர்க்குரிய குணமாகும்.

இத்தகைய அடியாரின் குடியைப்பற்றிச் சிறப்பித்துப் பாடுகின்றார் பெரியாழ்வார். இறைவனுக்கு அடியார் என்றெழுதப்பட்ட அந்நாளே அவர்தம் குடி வீடுபெற்றுயர்ந்தது என்றும் குறிப்பிடுவார் அவர். திருமாலைத் தொழுவதால் குடி சிறப்படையும் தன்மையை ஆழ்வார்கள், ஆச்சாரியர்கள் வரலாறு வழி அறியலாம். தந்தையாகிய பெரியாழ்வாரும், மகளாகிய ஆண்டாளும் செய்த தொண்டால் அவர்கள் குடி வீடு பெற்றுய்ந்தது. இது ஆழ்வார் வரலாறு காட்டும் சான்று. ஆச்சாரியர்களில் ஒரு குடிப்பிறந்த பெரியபட்டரும், கூரத்தாழ்வாரும் போற்றப்படுவது மற்றொரு சான்று.

## *அடியார்க்குமடியார்*

வைணவர்கள் கொள்ளும் பக்தியை இருவகையாகக் கொள் ளலாம். (1 ) இறைவனுக்குத் தொண்டு செய்தல், (2) அடியவர்க்குத் தொண்டு செய்தல் என்பன அவை. இரு பக்தி மதங்களிலும் அவை போற்றப் பெறுகின்றன. சைவத்தில் நாவுக்கரசருக்கு அப்பூதி அடிகள் செய்த தொண்டு போற்றப்பெறும். வைணவத்திலும் அடியார் தொண்டால் சிறப்பிடம் பெற்றவர்கள் உண்டு. மதுரகவியை அதற்குக் குறிப்பிடலாம். வைணவத்தில் பகவத் சேடத்துவம் என்றும், பாகவத சேடத்துவம் என்றும் பக்தி குறிக்கப்

பெறும். பகவத் சேடத்துவம் என்பது இறைவன் ஒருவனுக்கே அடிமைப் பட்டிருத்தலைக் குறிப்பது. பாகவத சேடத்துவம் என்பது இறைவனின் அடியவர்க்கு அடியவராய்த் திகழ்தலைக் கூறுவது. வசன பூசணம் பாகவதர்களைப் பற்றி,

*அதாவது ஆச்சாரிய துல்யர் என்றும் சம்சாரிகளிலும்*
*தன்னிலும் ஈஸ்வரனிலும் அதிகம் என்றும் நினைக்கை*

(ஸ்ரீவசன சூத். 226)

என்று கூறுகின்றது. ஈசுவரனுக்கு மேம்பட்ட பொருள் இல்லை. ஆதலின் வைணவ பக்தர்களைக் காணின் ஈஸ்வரனைக் கண்டாற்போல் பக்தி செலுத்த வேண்டும். இலிங்க புராணம் வைணவர்களின் திருமேனி பகவானுக்குப் பெரியகோயில் என்றும், சான்றோர்களின் நெஞ்சங்கள் அவன் சஞ்சரிப்பதற்குச் செல்வத்தை உடையனவாகவும் திகழ்கின்றன என்றும் குறிக்கின்றது. இவற்றால் பாகவதத் தொண்டின் சிறப்பு விளங்கும். அதனால்தான் ஆழ்வார்கள் அனைவரும் அடியார்க்குத் தொண்டு செய்தலை விரும்புகின்றனர்.

பெரியாழ்வாரும் இப்பாகவதத் தொண்டினையே விரும்புகின்றார். "பக்தர்க்கு முதலடியேன்" என அமைக்கும் அவரது பாசுர வரி பாகவதத் தொண்டின் எல்லை நிலமாக அமைகின்றது. கோட்டியூரில் வாழ்ந்த செல்வநம்பி திருமாலுக்குத் தொண்டராகத் திகழ்ந்தவர். பெரியாழ்வார் செல்வநம்பியைத் தமக்கு வழிகாட்டியாகக் கொள்கின்றார். செல்வநம்பியோ ஆழ்வாருக்கு முதலடியவராய்த் திகழ்ந்தவர். ஆழ்வாரும், செல்வ நம்பியும் ஒருவருக் கொருவர் அடியவர் என்றும், ஒருவரைப்போல மற்றவர் அடியவர் என்றும் குறிக்கும் சிறப்பு குருபரம்பரையும் பெரியாழ்வார் பாசுரங்களும் தரும் சான்றாகவும். ஆதலின் அடியவராய்த் திகழ்வதில் ஆழ்வார் உற்ற பேரவா இனிது விளங்கும்.

செல்வநம்பி வாழ்ந்த திருக்கோட்டியூர் வைணவர்களைப் பற்றி ஆழ்வார் அமைக்கும் பாசுரங்கள் அடியார்க்குச் செய்யும் தொண்டினையும் அவர்தம் சிறப்பினையும் எடுத்து இயம்பும். வைணவர்களைத் தொழுது வாழும் பக்தர்கள் வாழ்வதால் திருக்கோட்டியூர் பேறு பெற்றது என்பது ஆழ்வார் தம் முடிவு. திருமாலடியார்களைக் காணின் திருமாலையே கண்டதாகக் கொள்வர் வைணவர். " எம்பிரான் தன் சின்னங்கள் இவரீவர் என்றாசைகள் தீர்வேனே" எனும் தொடர் ஆழ்வார்தம் அடியார் ஈடுபாட்டைக் காட்டும்.

அடியார் உருக்கொண்டு வந்த ஈசற்குத் தம் பிள்ளையைக் கறியாக்கி விருந்தோம்பிய சிறுத்தொண்டர் சிறப்புச் சைவத்தில் போற்றப் பெறுகின்றது. வைணவர்களும் தம்மை விற்று அடியார்க்கு விருந்தோம்பும் இயல்பினர் ஆவர். இதனைப் பெரியாழ்வார் தம் பாசுரம் ஒன்றில்,

***கேசவா புருடோத்தமா கிளர்சோதியாய் குறளா என்று***
***பேசுவார் அடியார்கள் எம்தம்மை விற்கவும் பெறுவார்களே.***

(பெரியாழ்வார் 4.4.10)

என்று குறிக்கின்றார்.

## *திருமாலும் பிராட்டியும் அடியார்க்கருளும் தன்மை*

இறைவனும், திருமகளும் வைணவ அடியார்களுக்கு அருளும் தன்மையைத் தத்துவ நூல்கள் பலவாகக் கூறுகின்றன. குற்றம் செய்தவன் தன்னடியார் என்று திருமால் உணரினும் அதற்கான தண்டனையைக் கொடுக்க முயலுவான் என்றும், பெரியபிராட்டியோ அடியார் குற்றம் செய்திருப்பினும் உம்மைப் பற்றுதலால் அவர்க்கு அருள் செய்வது உன் கடன் எனத் திருமாலுக்கு எடுத்துக்கூறி அருளுக்கு வழி வகுப்பார். அடியார்க்கு அருள் செய்வதில் திருமாலுக்குத் திருமகள் பரிந்து உரைக்கிறாள் என்பது அறியப்படுகிறது. ஆனால் பெரியாழ்வார் திருமகளே பிழைகாணிலும் அருளத் திருமால் முன் நிற்பான் என்கிறார்.

***தன்னடியார் திறத்தகத்துத் தாமரையாளாகிலும் சிதகுரைக்குமேல்***
***என்னடியார் அதுசெய்யார் செய்தாரேல் நன்று செய்தார் என்பர் போலும்***

(பெரியாழ்வார் 4.9.2)

எனும் வரிகளால் மேற்கண்ட கருத்துக்கள் விளக்கப்பெறும். பிராட்டியின் புருஷகாரம் குற்றம் இழைத்த அடியவராயினும் அவர்க்கருளுவது. திருமாலோ அடியார் குற்றம் செய்யினும் தண்டிக்க முயல்வான். இங்குப் பிராட்டியே அடியார் குற்றம் செய்தார் எனக் கூறினும், அதனை ஏற்காது தம்மடியார் யாது செய்யினும் அது நன்றே ஆகும் என்று திருமால் அருள் செய்வதாக அமைக்கின்றார். இவற்றால் அடியார்க்கு அருள் செய்வதில் திருமாலும், பிராட்டியும் ஒருவரின் ஒருவர் மேம் பட்டவர் என்பது விளங்கும். மானிடப் பிறவியால் வரும் துயர் நீங்க திருமாலடியார்க்கு இறைவன் செய்யும் அருள் சிறப்புடையதாக அமையும். ஆழ்வாராதி களாலும் அடியவர்களாலும், நித்திய சூரிகளாலும் அனுபவிக்கப் பெறுவது வைகுந்தம். சீவான்மா அடையும் முழுநிலை அதுவே. அங்குச் சென்ற சீவன் பிறப்பெடுத்துப் பிறவிக் கடலில் உழலு வதில்லை. அம்முக்தியைத் தர வல்லவன் நாராயணன்.

***இருளகற்றும் எறிகதிரோன் மண்டலத்தூடேற்றி வைத்தே ஏணிவாங்கி அருள் கொடுத்திட்டடியவரை ஆட்கொள்வான்.***

(பெரியாழ். 4. 9.3)

என்று பெரியாழ்வார் இறைவன் பரமபதத்தைத் தரும் சிறப்பினைக் குறிக்கிறார். இறைவன் உபாயமாக இருக்கும் தன்மை திருமந்திரத்தால் விளங்கும். திருமந்திரம் ஆன்மாவால் 'வீடு பேறு' என்றுரைக்கின்றது. துவயம் பெரியபிராட்டியால் அப்பேறு கிடைக்கும் என்று உரைக்கின்றது. மறை பொருளின் மூன்றாவதான சரமசுலோகம் ஈசுவரனால் பேறு கிடைக்கும் என்றுரைக்கின்றது.

சீவான்மா வீடுபேறடைய திருமந்திரம் ஓதி அடியார் கூட்டத்தோடு இணைய வேண்டி ஆழ்வார் அமைக்கும் திருப்பல்லாண்டு ஆன்மாவால் வீடுபேறு என்றுரைக்கும் திருமந்திரத்தின் கருத்தை விளக்கும். திருமகள் குற்றம் கூறினும், திருமால் அருள் செய்யும் தன்மை பெரிய பிராட்டியால் வீடுபேறு எனும் துவயக் கருத்தை விளக்கும். இறைவன் தானே ஆட்கொள்ள எண்ணி வைகுந்தம் நல்கும் தன்மை ஈசுவரனால் வீடு பேறு எனும் சரமசுலோகக் கருத்தை விளக்கும். இவற்றால் பெரியாழ்வார் அடியாரிடம் கொண்ட பக்தியும், அடியவர்க்கு அதனால் கிடைக்கும் பலனும், இறைவன் அருளிய தன்மையும் மறைபொருளின் வழி எடுத்தியம்பியமை உணரப்பெறும்.

## *பிரபக்தி*

இறைவனை அடையும் வழிகளில் பிரபத்தியும் ஒன்றாக அமைகிறது. சரணாகதி முறையைக் குறிக்கும் இச்சொல் வைணவத்தில் சிறப்பிடம் பெறுகிறது. நாரத பக்தி சூத்திரம் குறிப்பிடும் பக்தி வகைகளில் ஒன்றாக இப்பிரபத்தி அமைகிறது. தன்னிலை உணர்ந்த சீவான்மா, ஈசுவரனைப் பற்றுதல் பிரபத்தியாகும். திருமந்திரப் பொருளுணர்ந்த சீவான்மா இறைவனன்றி வேறொன்றை நினைக்காது. அந்நிலையில் சரமசுலோகப் பொருள் விளங்கப்பெற்ற சீவான்மா இறைவனுடைய அருள் ஒன்றினையே எதிர்பார்க்கிறது. பிரபத்தியின் பலன் பரமபத முக்தியே யாகும்.

பிரபத்தி என்பது இறைவனை உபாயமாகப் பற்றுதலைக் குறிக்கும். இப்பிரபத்தியைக் குறிப்பதே சரமசுலோகமாகும். கண்ணன் தன்னை அடைவதற்கு வழிகளாய் உள்ள, கன்ம, ஞான, பக்தி, ஆகிய உபதேசங்களை எடுத்துரைத்தான். அவை மேற்கொள்ளுதற்கு அரிதா யிருக்கிறது என்ற காரணத்தால் பின் அவனே சீவான்மாவின் தன்மை உணர்ந்து பிரபத்தி உபாயத்தைக் கூறினான். கண்ணன் கூறும் சரமசுலோகம் அவனை அடைய வழி கூறுகின்றது.

***தர்மங்களை எல்லாம் தியஜித்து விட்டு என்னையே சரணடைக. பாவங்கள் அனைத்தினின்றும் உன்னை நான் விடுவிப்பேன்.***

(பகவத்கீதை அ. 1. சு. 66)

என்பது கண்ணன் கூற்று. ஆதலின் பக்தியின் முடிவாகத் திகழ்வது இப்பிரபத்தி என்பது விளங்கும். பக்தியோகத்தைக் கடைபிடிப்பதற்கு உரிய கட்டுப்பாடுகள் போன்றவை பிரபத்தி மார்க்கத்துக்கு இல்லை. பக்தியின் எளிமையைக் காட்டுவது இப்பிரபத்தி. இப்பிரபத்தியைச் செய்வதற்குத் தேகநியமம், காலநியமம், பிரகாரநியமம், பலநியமம் முதலிய வரையறை ர் கிடையாது.[10] அதனால்தான் ஆழ்வார்கள் அனைவரும் இப்பிரபத்தி மார்க்கத்தை மேற்கொண்டன.

ஆழ்வார்களுக்கெல்லாம் பிரபத்தி செய்வதற்கு வழியாய் இருந்தது. அர்ச்சை வடிவங்களேயாகும். பிரபத்தியால் அவனை அர்ச்சையில் கண்டு தம் உள்ளம் உவந்தனர். எளியமுறையான இப்பிரபத்தி ஆழ்வார்களுக்குப் பெரும் சிறப்பை அளித்தது. பெரியாழ்வார் தம்முடைய வாழ்க்கையையே இறைத்தொண்டிற்கு அளித்தவர். அவருடைய வாழ்க்கைத் தத்துவமே பிரபத்தி மார்க்கமாகும்.

இறைவனைப் பலவாறாகப் பாடும் ஆழ்வார் பாசுரங்களில் இறைவனைச் சரணடைதல் ஈற்றில் அமைகிறது. திருமாலைக் கண்ணனாகவும், அர்ச்சைகளாகவும் அனுபவித்த ஆழ்வார் அவனைச் சரணடைகிறார்.

பிறவிகள் பல எடுத்து துன்பக்கடலில் உழலும் ஆன்மா, முடிவான திருமாலின் அடியைப் பற்றின் துயர் நீங்கும். அப்பேற்றினைப் பெரியாழ்வார் குறிப்பிடுகின்றார்.

***காதம் பலவுந் திரிந்துழன்றேற் கங்கோர் நிழலில்லை நீரில்லையுன்***
***பாதநிழலல் லால் மற்றோர் உயிர்ப்பிடம் நானெங்கும் காண்கின்றிலேன்***

(பெரியாழ். 5.3.4)

என இறைவன் திருவடியைப் பற்றியதைக் குறிக்கின்றார். முழுதும் சரணடைந்த ஒரு சீவான்மாவின் கூற்றாக இது கொள்ளத்தக்கது. இத்தகைய நிலையைத்தான் கண்ணன் குறிப்பிடுகின்றான். பிரபத்தியால் அவன் பாதம் பற்றிய சீவான்மா மற்றொன்றை எண்ணாது, தம் செயலைச் செய்யும், இதனை ஆழ்வார்,

***உனக்குப் பணிசெய் திருக்குந்தவ முடையே னினிப்போ யொருவன்***
***தனக்குப் பணிந்து கடைத்தலை நிற்கைநின் சாயை யழிவு கண்டாய்***

(பெரியாழ். 5.1.10)

என உரைக்கின்றார். பிரபத்தி மார்க்கத்தையும், அதன் பயனையும் இவ்விரு பாசுரங்களின் வழி ஆழ்வார் விளக்குவது இனி விளங்கும்.

போரினிடையே கண்ணன் அர்ச்சுனனின் தேரோட்டியாய் இருந்து சரமசுலோகம் அருளினான். தேரோட்டிய கண்ணனை நாராயண னாகவும் அர்ச்சுனனை நரனாகவும் கொள்ளுதல் மரபு. இது இறைவன் நண்பனாய் இருந்து ஆட்கொண்டருளியதை விளக்கும். பெரியாழ்வார் வாழ்வில் கண்ணன் குழந்தையாய் வந்து ஆட்கொண்டான். குழந்தையாய்ப் பிரபத்தி முறையை உணரச்செய்தான். பக்தி முறையில் பிரபத்தியால் ஆழ்வார் பெற்ற பெரும்பேறு அவரை நித்திய சூரியாக்கியது. ஆதலின் பிரபத்தி ஒன்றே சீவான்மாவுக்கு விடுதலை அளிக்கவல்லது என்பது விளங்கும்.

## அடையப்படும் பலன்

பிரபத்தியை மேற்கொண்ட சேதனன் திருவைகுந்தம் சேர்ந்து பரமபதநாதனைப் பரிபூரணமாக அனுபவிக்கின்றான். திருத்தொண் டொன்றே பரமபதத்தை அடைந்த சீவான்மாவுக்கு உரிய செயலாகும். இத்திருத் தொண்டினைச் செய்யும் போதே சேதனன் இறைவனையும் அனுபவிக்கிறான். இறைவன் ஒருவனையே பற்றி நிற்கும் ஆன்மா அடையும் சிறப்பினையும் ஆழ்வார் எடுத்துரைக்கின்றார். " நண்ணுவரா ரொல்லை நாரண னுலகே" என்றும் "பாடவல்லா ருலக மளந்தான் தமரே" " தாமும் அணுக்கர்களே" என்றும் உரைக்கின்றார். இதனால் சீவான்மா பெறுகின்ற பலன் அறியப்படுகின்றது.

## இறைவனை அடைதற்குத் தடைகள்

சேதனன் செய்யும் பாவங்கள் இருவகைப்படும். (1) செய்யத் தகாதனச் செய்தல் (2) செய்ய வேண்டிய செயல்களைச் செய்யாதிருத்தல். இவ்விரு செயல்களும் திருமாலின் சீற்றத்தால் வருவன. இச்சீற்றமே சேதனின் அறிவைக் கெடுத்துப் பாவத்தைச் செய்யத் தூண்டும். அதனால் பிறப்பு ஏற்படும்.

இவ்விரு பாவங்களும் அசித்தின் செயலாய் அமைவன. அசித்தினையும் இறைவனாய்க் காண்பதால் அப்பாவங்கள் நீங்குகின்றன. இவ்வுலகம், செல்வம், மானிடப்பிறப்பு அனைத்தும் துயர் தருவன. ஆனால் இவற்றையும் திருமாலின் அருளால் வருவன என ஆழ்வார்கள் கொள்கின்றனர்.

***குலந்தரும் செல்வம்தந்திடு மடியார்படு துயராயின வெல்லாம்***
***நிலம் தரம் செய்யும்நீள் விசும்பருளும் அருளோடு பெருநிலமளிக்கும்***

(பெரியாழ் . 1.1.9)

என இவ்வுலக இன்பத்தை எல்லாம் தரவல்லவன் திருமால் எனக் குறிக்கின்றார் திருமங்கை.

ஆதலின் அசித்தாயினும் அது திருமாலின் அடக்கம் எனும் உணர்வு ஏற்படின் தடைகள் நீங்கும். அதனால்தான் இறைவனைப் பிள்ளையாகக் காணுகின்றார் பெரியாழ்வார். இவ்வுலக வாழ்க்கையில் தான் கொண்ட பற்றெல்லாம் இறைவர்க்கு அளித்துத் தாம் தடையை நீக்கிக் கொண்டதைத்.

***தோட்ட மில்லவள் ஆதொழு வோடை துடவையு ங்கிணறும் இவை யெல்லாம்***
***வாட்ட மின்றியுன் பொன்னடிக் கீழே வளைப்பகம் வகுத்துக் கொண்டிருந்தேன்.***

(பெரியாழ். 5.1.5)

என உரைக்கின்றார். ஆதலின் தடைகளை உணர்ந்து அவற்றைத் தகர்த்துக் கொண்ட தன்மை அவரிடம் அமைகிறது. தடைகள் நீக்கப் பெற்று நித்தியராய் அவர் திகழும் தன்மை வைணவர்களால் போற்றப் படுகிறது.

சீவான்மா உணர்தற்குரிய ஈசுவரசொரூபம், ஆன்மசொரூபம், உபாய சொரூபம், பல சொரூபம், விரோதி சொரூபம் எனும் அர்த்தப் பஞ்சக ஞானத்தைப் பெரியாழ்வார் உணர்ந்து உணர்த்துகின்றார். இஞ்ஞானத்தை உணர்ந்த சீவான்மா பரமபதத்தை அடைந்து பிறப் பெடுக்காது என்பது பெரியாழ்வார் பாசுரங்களும் வரலாறும் காட்டும் சான்றுகளாகும்.

---

## குறிப்புகள்

1. அக்னி ஹோத்திரம் ராமானுஜ தாத்தாச்சாரியார், வரலாற்றில் பிறந்த வைணவம், பக்.125-126
2. பெரியாழ். 1.9.9; 3.9.1
3. சிலப். ப. 452
4. பெரியாழ். 2.7.7
5. நாரத பக்தி சூத்திரம்.82
6. ஆச்சார்ய இருதயம். சூத்திரம்.133
7. மேற்படி.157
8. மேற்படி. 133
9. விஷ்ணுபுராணம்; ப.217
10. ஸ்ரீவசனபூஷணம். சூத்திரம். 223